பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு வியாக்கியானம்

தமிழாக்கம் செய்தவர்

**டாக்டர் ம. அ. வேங்கடகிருஷ்ணன்**
M.A., M.Phil., Ph.D., D.Litt.
பேராசிரியர், வைணவத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை – 600 005.



**சென்னைப் பல்கலைக் கழகம்,**
சென்னை – 600 005.

முதல் பதிப்பு : செப்டம்பர் 2006



❐ 150ஆம் ஆண்டு வெளியீடு

❐ விலை : **ரூ.110/-**

❐ *நூலினை வெளியிடுவோர்*

**பதிப்புத் துறை**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 600 005.

❐ *ஒளி அச்சுக் கோர்வை*

**ரெயின்போ கிராஃபிக்ஸ்**
திருவல்லிக்கேணி, சென்னை – 5.
☎ : 2844 0070 / 94444 04470

❐ *அச்சிட்டோர்*

**பவர்ஃபுல் பிரிண்டர்ஸ் பி. லிமிடெட்**
சென்னை - 600 029.
☎ : 2374 3503



# சென்னைப் பல்கலைக் கழகம்

சேப்பாக்கம், சென்னை – 600 005.



**பேரா. ச.ப. தியாகராஜன்**
Ph.D., M.D., D.Sc., FNASc., FAMS, FIMSA, FABMS
துணைவேந்தர்

ஆகஸ்ட் 18, 2006

# அணிந்துரை

தமிழகத்தில் தொன்மைக் காலத்திலேயே வைணவம், சைவம், ஜைனம், பௌத்தம் முதலிய சமயங்கள் தழைத்தோங்கி வந்தன. பல்லவர்கள் காலத்தில் காஞ்சியில் அமைந்திருந்த பல்கலைக் கழகத்தில் இச்சமயங்களைப் பற்றிய கல்வி கற்பிக்கப்பட்டது என்றும், பற்பல நாடுகளிலிருந்தும் ஆர்வலர்கள் இங்கு வந்து சமயக் கல்விகளைக் கற்றனர் என்றும் கல்வெட்டுகள் பகர்கின்றன. தற்பொழுது வைணவம், சைவம், ஜைனம், கிறித்தவம், இஸ்லாம் ஆகிய தத்துவங்களுக்குத் தனித்தனித் துறைகள் அமைந்துள்ளன சென்னைப் பல்கலைக் கழகத்திற்கே உரிய தனிச் சிறப்பாகும்.

தமிழகத்தில் வைணவத் தத்துவத்தைப் பரப்பியவர்கள் ஆழ்வார்கள் ஆவர். அவர்கள் அருளிய நாலாயிர திவ்வியப் பிரபந்தம் 'திராவிட வேதம்' என்றே போற்றப் பெறுகின்றது. இந்தத் திவ்வியப்பிரபந்தங்களுக்கு மணிப்பிரவாள நடையில் மிக மிக விரிவான உரைகளை வைணவ ஆசாரியர்கள் அருளியுள்ளனர். அந்த உரைகளை அனைவருக்கும் புரியும் வகையில் எளிய தமிழில் வழங்க வேண்டியது அவசியமாகிறது. நம்மாழ்வார் அருளிச் செய்துள்ள திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களுக்கும் நம்பிள்ளை எனும் பேராசிரியர் அருளிய ஈடு முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானத்தை, நமது பல்கலைக் கழகத்தில் தமிழ்துறையில் பணியாற்றிய திரு. பு.ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

தமிழாக்கம் செய்துள்ளார். பத்துத் தொகுதிகளில் சென்னைப் பல்கலைக் கழகப் பதிப்பாக வெளிவந்துள்ள இந்நூல் ஐந்து பதிப்புகளைக் கடந்து, தற்போது ஆறாம் பதிப்பில் உள்ளது. திருவாய் மொழியைத் தவிர மற்ற மூன்றாயிரம் பாசுரங்களுக்கும் அமைந்துள்ள மணிப்பிரவாள வியாக்கியானங்களையும் தமிழாக்கம் செய்ய வேண்டும் என்ற கருத்தில், தற்போது பெரியாழ்வார் அருளிச் செய்துள்ள திருப்பல்லாண்டு எனும் திவ்வியப்பிரபந்தத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிய மணிப்ரவாள வியாக்கியானத்தினை, நமது பல்கலைக் கழக வைணவத் துறைப் பேராசிரியர் முனைவர் ம.அ. வேங்கடகிருஷ்ணன் அவர்கள் தமிழாக்கம் செய்துள்ளார்கள்.

திருமகள் கேள்வனான இறைவனைக் கண்முன்னே கண்ட பெரியாழ்வார், அவனுக்கு யாரால் என்ன தீங்கு விளையுமோ என்று அஞ்சி, அவன் ஒரு தீங்கும் இல்லாமல் பல்லாண்டுகள் நலத்துடன் திகழ வேண்டும் என்று வாழ்த்துப் பாடிய திவ்வியப்பிரபந்தமே திருப்பல்லாண்டு ஆகும். இதன் மங்கலத் தன்மைகருதி, இந்தத் திருப்பல்லாண்டு என்கிற பிரபந்தம், நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் முதன்முதலில் இடம் பெற்றுள்ளது. அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த இந்தத் திவ்வியப் பிரபந்தம் நமது பல்கலைக் கழகத்தின் நூற்றைம்பதாம் ஆண்டு விழாவில் வெளியிடப்பெறுவது மிகப் பொருத்தமாகும்.

இதுபோலவே மற்றத் திவ்வியப்பிரபந்தங்களுக்கு அமைந்துள்ள வியாக்கியானங்களின் தமிழாக்கமும் ஒன்றன் பின் ஒன்றாக விரைவில் வெளிவர ஒத்துழைப்பு நல்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

**(ச.ப. தியாகராஜன்)**
துணை வேந்தர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

தொலைபேசி (அலுவலகம்) : 25361074
தொலைநகல் : 0091-44-25367654
வீடு : 24423456
மின் அஞ்சல் : vcoffice@unom.ac.in
vchome@md3.vsnl.net.in
தொலைதந்தி : 41-6376 UNOM IN

# முன்னுரை

திருமாமகள் கேள்வனான இறைவனாலே அறியாமை நீங்கி, சிறந்த அறிவு பெறும்படியாக அருள் புரியப் பெற்றவர்கள் ஆழ்வார்கள். இறைவன் அருளிய ஞானத்தைக் கொண்டு அவனுடைய தன்மைகள், திருமேனி, திருக்கலியாணகுணங்கள், உடைமைகள் இவற்றையெல்லாம் உள்ளபடி அறிந்து கொண்டு, அவனை அனுபவிக்கத் தொடங்கினர். அவ்வனுபவமானது உள்ளடங்காமல் அழகிய தமிழ்ப் பாடல்களாக வெளிப்பட்டன. அப்பாடல்களே அருளிச்செயல் என்றும் திவ்வியப்பிரபந்தம் என்றும் வழங்கப் பெறுகிறது. பிற்காலத்தில், அப்பாசுரங்கள் கற்பார் இல்லாமையால் மறைந்து விட்டிருந்த காலத்தில் நாதமுனிகள் எனும் ஆசார்யர் மிகவும் சிரமப்பட்டு, அப்பாசுரங்கள் அனைத்தையும் நம்மாழ்வாரிடமிருந்து அருள் வழிப்பெற்றார். அப்பாசுரங்கள் எண்ணிக்கையில் ஏறக்குறைய நான்காயிரமாக இருந்தமையால், நாதமுனிகள் அப்பாசுரங் களைத் தொகுத்து, முதலாயிரம், இரண்டாமாயிரம், மூன்றாமாயிரம், நான்காம் ஆயிரம் என்று நான்கு ஆயிரங்களாக வகுத்தார். இப்பாசுரங்கள் அனைத்திற்கும் நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலிய ஆசாரியர்கள் மிகவும் அற்புதமான விரிவுரைகளை அருளிச்செய்துள்ளனர்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் நான்காம் ஆயிரமாக அமைந்துள்ள திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களுக்கும் நம்பிள்ளை எனும் ஆசாரியர் வடமொழியும் தமிழ் மொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் மிக மிக விரிவாக ஈடு முப்பத்தாறாயிரப்படி எனும் பேருரையினை அருளிச்

செய்துள்ளார். இவ்வுரையை அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் எளிய நடையில் தமிழாக்கம் செய்து பெருந்தொண்டு புரிந்துள்ளார் சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழத்துறையில் விரிவுரையாளராகப் பணிபுரிந்த திரு பு.ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள். பத்துத் தொகுதிகளாக அமைந்துள்ள அந்நூல் சென்னைப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பெற்று நான்கு பதிப்புகளைக் கண்டுள்ளது.

நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் அமைந்துள்ள மற்ற மூவாயிரம் பாசுரங்களுக்கும் மணிப்பிரவாள நடையில் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்துள்ள பேருரைகளையும் அதுபோலவே தமிழாக்கம் செய்து வெளியிடவேண்டும் என்ற அவாவினால் உந்தப்பட்டு, முதன் முதலில், முதலாயிரத்தில் முதல் பிரபந்தமாக அமைந்துள்ள திருப்பல்லாண்டிற்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்துள்ள பேருரை எளிய தமிழாக்கத்துடன் வெளியிடப் பெறுகிறது. இதுபோலவே மற்ற பிரபந்தங்களுக்கும் தமிழாக்கம் விரைவிலேயே வெளிவருவதற்கு அருள்புரியவேண்டும் என்று திருமகள் கேள்வன் திருவடிகளில் இறைஞ்சுகிறேன்.

ம. அ. வேங்கடகிருஷ்ணன்
பேராசிரியர், வைணவத்துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்

பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு

## நாத2முனிகள் அருளிச்செய்த தனியன்

गुरुमुखमनधीत्य प्राह वेदानशेषान्
नरपतिपरिक्लृप्तं शुल्कमादातु कामः।
श्वशुरममरवन्द्यं रङ्गनाथस्य साक्षात्
द्विजकुलतिलकं तं विष्णुचित्तं नमामि ॥

கு3ருமுக2மநதீ4த்ய ப்ராஹ வேத3ாநஶேஷாந்
நரபதி பரிக்லுப்தம் ஶுல்கமாத3ாது காம:
ஶ்வஶுரமமரவந்த்3யம் ரங்க3நாத2ஸ்ய ஸாக்ஷாத்
த்3விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி

| | |
|---|---|
| ய: | யாவரொரு பெரியாழ்வார் |
| நரபதி பரிக்லுப்தம் | அரசனால் ஏற்படுத்தப்பட்ட |
| சுல்கம் | பந்தயப் பொருளாகிய பொற்கிழியை |
| ஆத3ாது காம: | பெறுவதற்கு எண்ணமுடையவராய் |
| கு3ருமுக2ம் அநதீ4த்ய | ஆசார்யரிடத்தில் கற்காமலே |
| அசேஷாந் வேத3ாந் | வேதங்களையெல்லாம் |
| ப்ராஹ | எடுத்துரைத்தாரோ |
| அமரவந்த்3யம் | தேவர்களால் வணங்கத்தக்கவரும் |
| ரங்க3நாத2ஸ்ய | ஸ்ரீரங்கநாதனுக்கு |
| ஸாக்ஷாத் ச்வசுரம் | நேராக மாமனாரும் |
| த்3விஜகுலதிலகம் | அந்தணகுலத்திற்குத் திலகம் போன்றவருமான |
| தம் விஷ்ணுசித்தம் | அப்பெரியாழ்வாரை |
| நமாமி | வணங்குகிறேன். |

# பிள்ளைலோகம் சீயர் அருளிச் செய்த தனியன் வ்யாக்யானம்

இதுதான் திருப்பல்லாண்டுக்குத் தனியனாயிருக்கும். அந்தத் திருப்பல்லாண்டு பாடுகைக்கு அடியான பெரியாழ்வார் வைப$_4$வத்தைப் பரக்கப் பேசி, அவரை ப்ரணிபாத நமஸ்காரம் பண்ணும்படி சொல்லுகிறது.

(கு$_3$ருமுக$_2$ம் அநதீ$_4$த்ய) ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான ஸர்வேஶ்வரனும் सान्दीपनेस्सकृत्प्रोक्तां ब्रह्मविद्यां सविस्तराम् (ஸாந்தீ$_3$பநேஸ் ஸக்ருத் ப்ரோக்தாம் ப்ரஹ்ம வித்$_3$யாம் ஸவிஸ்தராம்) என்னும்படி ஸாந்தீ$_3$பநியிடத்திலே யாய்த்து ஸகல வேத$_3$ங்களையும் அதி$_4$கரித்தது. இவர் அங்ஙன் ஒரு கு$_3$ருகுலவாஸம் பண்ணி, தங்முகே$_2$ந நலங்களாய நற்கலைகள் நாலையும் அதி$_4$கரியாதே புண்ட$_3$ரீகரைப்

---

இந்த சுலோகம் திருப்பல்லாண்டு என்கிற திவ்யப்ரபந்தத்திற்குத் தனியனாகும். திருப் பல்லாண்டு பாடுவதற்குக் காரணமாயமைந்த பெரியாழ்வார் பெருமையை விரிவாகக் கூறி, அவரை வணங்குவது கூறப்படுகிறது.

**(கு$_3$ருமுக$_2$ம் அநதீ$_4$த்ய)** (குருவிடம் கற்காமல்) இற்கையாகவே எல்லாம் அறிந்தவனான எம்பெருமானும்கூட **ஸாந்தீ$_3$பநேஸ் ஸக்ருத் ப்ரோக்தாம் ப்$_3$ரஹ்மவித்$_3$யாம் ஸவிஸ்தராம்** (ஸாந்தீபநி முனிவரால் ஒருமுறை கூறப்பட்ட ப்ரஹ்மவித்யையைக் கண்ணன் கற்றான்) என்று கூறியுள்ளபடி, ஸாந்தீபநி முனிவரிடம் எல்லா வேதங்களையும் கற்றான். பெரியாழ்வார் அப்படி குருகுலவாசம் செய்து 'நலங்களாய நற்கலைகள்'

போலே துளவத் தொண்டிலே மண்டி, ஸ்ரீமாலாகாரரைப் போலே சூட்டுநன்மாலைகளைத் தொடுத்து வடபெருங் கோயிலுடையானுக்குச் சூட்டி அடிமை செய்து போந்தார். ஏவம்வித$_4$ த$_3$ாஸ்ய ரஸஜ்ஞரான இவர், (நரபதி பரிக்லுப்தம் ஶுல்கம் ஆத$_3$ாது காம:) என்று ஸ்ரீவல்லப$_4$தே$_3$வன் என்கிற ராஜாவானவன் பரதத்த்வ நிர்ணய பூர்வகமாகப் புருஷார்த்த$_2$லாப$_4$த்தை லபி$_4$க்கைக்காக அநேகமான அர்த்த$_2$த்தை வித்$_3$யாஶுல்கமாகக் கல்பித்துக் கல் தோரணத்திலே கட்டிவைக்க, இப்படி நிர்மிதமான அந்த த$_4$நத்தை வடபெருங்கோயிலுடையானுடைய ஆஜ்ஞையாலே ஆஹரித்துக் கொண்டு வரவேணுமென்கிற

---

(திருச்சந்தவிருத்தம்-90) என்று கூறப்பட்டுள்ள வேதங்களைக் கற்கவில்லை. புண்டரீக முனிவரைப் போல திருத்துழாய்த் தொண்டில் ஈடுபட்டு, மாலாகாரரைப்போல பூமாலைகளைத் தொடுத்து, ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியுள்ள வடபெருங் கோயிலுடையானுக்குத் தொண்டு செய்து வந்தார். இப்படி அடிமை செய்வதின் சுவையறிந்தவரான இவர் **(நரபதி பரிக்லுப்தம் ஶுல்கம் ஆத$_3$ாது காம:)** (அரசனால் வைக்கப்பட்ட பொற்கிழியைப் பெற விரும்பியவராய்) ஸ்ரீவல்லபதேவன் எனும் அரசன், உண்மையான பரம்பொருள் எது என்று தெரிந்து கொள்வதன் மூலமாகப் புருஷார்த்தத்தை (உயர்ந்த பயனை)ப் பெறுவதற்காகப் பெருஞ் செல்வத்தைப் பொற்கிழியாக (பரம்பொருளை நிலைநாட்டுகின்ற அறிஞருக்குப் பரிசளிப்பதற்காகக்) கல்தோரணத்தில் கட்டி வைத்தான். வடபெருங் கோயிலுடையானுடைய கட்டளைப்படி

அபேக்ஷை உடையராய் வித்₃வத்₃கோ₃ஷ்டியிலே சென்று; (அஶேஷாந் வேதா₃ந் ப்ராஹ) 'வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்' என்றத்தைச் சொல்லுகிறது. இவர்க்கு அப்போது வேதப்பிரானான பீதகவாடைப் பிரானார் தாமே பிரமகுருவாய், போதிற்கமல வன்னெஞ்சம் புகுந்து நாவினுளானாய், நாவினுள்நின்று மலரும் ஞானக் கலைகளை இவர்முகேந பேசுவித்தனிறே. எயிற்றிடை மண்கொண்டவெந்தையான ஞானப் பிரானய்த்து இவரை ஞானக் கலைகளை ஓதுவித்தது. ஆகையாலே நாட்டார்க்கு ஓதினவிடமொழிந்து ஓதாதவிடம்

---

அப்பொற்கிழியை அறுத்துக் கொண்டு வரவேண்டும் என்ற விருப்பத்தை யுடையவராய், பெரியாழ்வார் வித்வான்கள் கூடியிருக்கின்ற கோஷ்டிக்கு எழுந்தருளினார். (**அஶேஷாந் வேதா₃ந் ப்ராஹ**) (எல்லா வேதங்களையும் கூறினார்) "வேண்டிய வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்தான்" என்பதைக் கூறுகிறது. இவருக்கு அப்போது வேதப்பிரானான பீதகவாடைப் பிரானார் தாமே பிரமகுருவாக இவருடைய போதிற்கமல வன்னெஞ்சம் புகுந்து நாவினுள் உள்ளவனாக இருந்து, நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளான வேதங்களை இவர் மூலமாகப் பேசுவித்தானன்றோ! எயிற்றிடை மண் கொண்ட எந்தையான ஞானப்பிரான் (வராஹப் பெருமான்) அன்றோ இவர்க்கு ஞானக் கலைகளை ஓதுவித்தது! ("எயிற்றிடை மண்கொண்ட எந்தை இராப்பகலோதுவித்து என்னைப் பயிற்றிப் பணி செய்யக் கொண்டான்" என்று பெரியாழ்வார் தாமே (5.2.5) அருளிச்செய்துள்ளார்.) எனவே

தெரியாதிருக்கும். இவர்க்கு மயர்வறமதிநலம் அருளுகையாலே அஶேஷ வேத$_3$ங்களும் அருளிச் செய்யும்படி விஶத$_3$மாய்த்து. அத்தாலே ‘வேதாந்த விழுப் பொருளின்மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனன்’ என்னும்படி பரதத்த்வ ஸ்தா$_2$பநம் பண்ணி அந்த வேத$_3$ தாத்பர்யமான திருப்பல்லாண்டை அங்கு ஆனைமேல் மங்கலவீதி வலம் வருகையிலே மங்க$_3$ளாஶாஸநமாக அருளிச்செய்தார். ‘வேத$_3$ாந் அஶேஷாந்’ என்கிறதுக்கு உள்ளே இதுவும் அந்தர்பூ$_4$தம். वेदैश्च सर्वैरहमेव वेद्य: (வேதை$_3$ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்$_3$ய:) என்னக் கடவதிறே.

---

உலகத்தவர்களுக்குத் தாங்கள் கற்றவிடம் தெரிந்து, கல்லாதவிடம் தெரியாதிருக்கும். இவருக்கு எம்பெருமான் மயர்வற மதிநலம் அருளியுள்ள படியால் எல்லா வேதங்களும் நன்கு தெரிந்திருக்கும். அதனால் "வேதாந்த விழுப் பொருளின் மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனன்" என்று அவரே *(4-3-11)* கூறியுள்ளபடி, பரம்பொருளை நிலைநாட்டி, அந்த வேதத்தின் உட்பொருளான திருப்பல்லாண்டை அங்கு யானைமேல் மங்கலமாக வீதிவலம் வரும்போது மங்களாஶாஸநமாக அருளிச்செய்தார். **"அஶேஷாந் வேத$_3$ாந்"** *(எல்லா வேதங்களையும்)* பெரியாழ்வார் ஓதினார் என்பது, திருப்பல்லாண்டையும் சேர்த்தே குறிப்பிடுகின்றது. *(திருப்பல்லாண்டும் வேதமேஆகும்.)* **"வேதை$_3$ஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்$_3$ய:"** *(கீதை 15-15)* வேதங்கள் அனைத்தாலும் நானே அறியப்படுகிறேன் என்று அவனே கூறியுள்ளான் அன்றோ!

(ஶ்வஶுரம்) அநந்தரம் வித்₃வான்களை வென்று கிழி அறுத்து அந்த த₄நத்தை ஸ்வாமி ஸந்நிதி₄யிலே ஸமர்ப்பித்து மீளவும் தம் துறையான துளவத்தொண்டிலே மூண்டு நடத்திக் கொண்டுபோர, அக்காலத்திலே ஆண்டாள் இவர்க்குத் திருமகளாகத் திருத்துழாயடியிலே அவதரிக்க, இவரும் திருமகள்போல வளர்த்துப்போர, அஞ்சு பிராயத்திலே திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களை அநுகரித்துத் திருப்பாவை பாடி, அதுக்கு மேலே, அவர் தொடுத்த துழாய் மலரை வியன்துழாய்க் கற்பென்று சூடும் கருங்குழல்மேல் என்கிறபடியே சூடிக் கொடுத்தவளாய், பின்பு ப்ராப்தயௌவனையாய்,

---

*(ஶ்வஶுரம்) (மாமனாரை) வித்வான்களை வென்று பொற்கிழியை அறுத்து அந்தச் செல்வத்தை வடபெருங்கோயிலுடையானுக்கே ஸமர்ப்பித்து, மீண்டும் தம்முடைய துறையான திருத்துழாய் கைங்கர்யத்தில் ஈடுபட்டுவந்தார். அக்காலத்தில் இவர்க்குத் திருமகளாகத் திருத்துழாய்ச் செடியடியில் ஆண்டாள் அவதரித்தாள். பெரியாழ்வாரும் அவளைத் திருமகள் போல வளர்த்தார். ஆண்டாள் தன்னுடைய ஐந்து வயதில் திருவாய்ப்பாடியில் வாழ்ந்த ஐந்து லக்ஷம் குடிப்பெண்களான கோபிகைகளைப் போலத் தன்னை பாவித்துக் கொண்டு திருப்பாவை பாடினாள். அதற்கும் மேல், பெரியாழ்வார் தொடுத்து வைத்திருந்த மாலையை "வியன்துழாய் கற்பென்று சூடும் கருங்குழல் மேல்" (மூன்றாம் திருவந்தாதி-69) என்கிறபடி, தான் சூடிக்களைந்து கொடுத்தாள். பின்பு யௌவனப் பருவம் அடைந்து, மானிடர்களுக்குத் தன்னை மணம்*

மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழாத தன்மையளாய், 'தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்' என்றும், 'பணவாளரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள் மணவாளர்' என்றும் சொல்லப்படுகிற அழகிய மணவாளப் பெருமாளை ப்ரார்த்தி$_2$த்துத் திருமணம் புணருகையாலே அவர் மணவாளப் பிள்ளையானார். மறைநான்கும் முன்னோதிய பட்டனுக்கிறே பட்டர்பிரான் கோதையைக் கொடுத்தது. ஆகையாலே ஔபசாரிகமாக அன்றிக்கே யதா$_2$வாக ரங்க$_3$நாத$_2$னுக்கு ப$_4$ட்டநாத$_2$ர் மாமனாரானார். அத்தாலே அமரவந்த்$_3$யம் என்கிறது. அதாவது வடிவுடை வானோர் தலைவனான தன்னை

---

செய்து கொடுப்பதாகப் பேசில் வாழாத தன்மையை உடையவளாய், (தான் அருளிச்செய்த நாச்சியார் திருமொழியில்) "தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர் ஆமுகத்தை நோக்காரால்" (11-1)என்றும், "பணவாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளர்" (10-6) என்றும், பற்பல பாசுரங்களில் திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீரங்கநாதனையே ப்ரார்த்தித்துத் திருமணம் செய்து கொண்டபடியால், அந்த ரங்கநாதனே மணவாளப் பிள்ளையானார். மறைநான்கும் முன்னோதிய பட்டனுக்கன்றோ பட்டர்பிரானான பெரியாழ்வார் தம் பெண்ணைக் கொடுத்தது. எனவே வெறும் உபசாரத்திற்குக் கூறுவதாகவல்லாமல் உண்மையிலே பெரியாழ்வார் ஸ்ரீரங்கநாதனுக்கு மாமனார் ஆனார். அதனால் (**அமரவந்த்$_3$யம்**) (அமரர்களால் தொழப் படுபவரை) என்று கூறப்படுகின்றது. 'வடிவுடை வானோர் தலைமகன்' என்று கூறப்பட்டபடி

அவர்கள் அடிவணங்கி ஏத்துமாபோலே இவர்தம்மையும் அமரர் வந்தி$_3$க்கும் படியான ஏற்றம் வரிசை கொடுத்தபடி. தம்மையேயொக்க அருள் செய்வரிறே. ப$_4$ட்டநாத$_2$ரான மாத்ரமன்றிக்கே தேவர்களாலும் ஸ்துத்யராயிருக்குமவர் என்கிறது. 'விரும்புவர் அமரர் மொய்த்து' என்னக் கடவதிறே. அஸ்த$_2$ாநே ப$_4$யஶங்கிகளானவர்களையும் இவர் மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுமவராகையாலே அவர்களும் இவர்க்கு ஸ்துத்யபி$_4$வாத$_3$நங்களைப் பண்ணுவர்கள். परस्परनीचभावैः (பரஸ்பர நீசப$_4$ாவை:) என்னக் கடவதிறே.

---

எம்பெருமானை அமரர்கள் அடி தொழுது போற்றுவது போல, இவரையும் அமரர்கள் தொழும்படியான பெருமையை அளித்தபடி கூறுகிறது. தம்மையே நாளும் வணங்கித் தொழுபவர்களைத் தம்மைப்போலவே ஆகும்படி அருள் செய்பவனன்றோ எம்பெருமான்! பட்டநாதர் (அந்தணர் தலைவர்) என்பது மட்டும் அல்லாமல் அமரர்களாலும் தொழப்படுபவர் என்பது கூறப்படுகிறது. எம்பெருமானுடைய அடியவர்களை "விரும்புவர் அமரர் மொய்த்து" என்று கூறப்பட்டுள்ளதன்றோ! (எம்பெருமானுக்கு ஆபத்து வந்து விடுமோ என்று அச்சம் கொள்ளத் தேவையில்லாத) பரமபதத்திலும் அச்சம் கொள்கின்ற நித்யஸூரிகளையும் இவர் மங்களாஶாஸநம் செய்பவராகையால், அவர்களும் இவரைப் போற்றி வணங்குவர். **"பரஸ்பர நீசப$_4$ாவை:"** (நித்யஸூரிகள் ஒருவர்க்கொருவர் தங்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதுவர்) (ஸ்ரீ வை.ஸ்.77) அன்றோ!

இனி ரங்க$_3$நாத$_2$னோடே ஸம்ப$_3$ந்தி$_4$க்கைக்கீடான ப$_4$ட்டநாத$_2$குலத்தைச் சொல்லுகிறது (த்$_3$விஜகுல திலகம்) என்று. வேயர் குலத்துதித்த விட்டுசித்தராகையாலே 'அந்தணனை யான் கண்டது அணிநீர்த் தென்னரங்கத்தே' என்னும்படி கண்டுகொடுத்தார். த்$_2$விஜகுலதிலகர் ஆகையாவது ப்$_3$ராஹ்மண குலத்துக்கெல்லாம் முக்$_2$யராய் ஶிரஸாவாஹ்யராய், ஶ்ரேஷ்டராய் இருக்கை என்றபடி. (தம் விஷ்ணுசித்தம்) அப்படி ஶ்ரேஷ்டராய், விஷ்ணுவை எப்போதும் சித்தத்திலே உடையரானவரை என்கிறது. 'வில்லாண்டான் தன்னை வில்லிபுத்தூர்

---

இனி ஸ்ரீரங்கநாதனுக்குப் பெண்கொடுத்துத் தொடர்பு கொள்வதற்குத் தகுதியாகப் பெரியாழ்வாருக்கு உள்ள குலப்பெருமை கூறப்படுகிறது (**த்$_3$விஜகுல திலகம்**) (அந்தணர் குலத் திலகரை) என்று. "வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுத்தன்" என்று தாமே கூறிக்கொண்டபடி (5-4-11) அந்தணரான பெரியாழ்வார் "அந்தணனை யான் கண்டது தென்னரங்கத்தே" (பெரியதிருமொழி 5-6-7) என்று கூறியுள்ளபடி அந்தணனான ஸ்ரீரங்கநாதனைத் தேர்ந்தெடுத்துத் தம்பெண்ணைக் கொடுத்தார். அந்தணர் குலத் திலகமாக இருப்பதாவது, அந்தண குலத்திற்கு முக்கியமானவராய், தலையால் தாங்கப் படுபவராய், உயர்ந்தவராய் இருப்பதாகும். (**தம் விஷ்ணுசித்தம்**) (அந்த விஷ்ணுசித்தரை) அப்படி உயர்ந்தவராய் விஷ்ணுவை எப்போதும் தமது சித்தத்தில் (நெஞ்சில்) உடையவரை என்பது பொருள். "வில்லாண்டான் தன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பிய சொல்" (திருப்பல்லாண்டு-

விட்டுசித்தன் விரும்பிய சொல்' என்று அடியிலே தமக்கு நிருபகமாக ஆழ்வார் தாமே அருளிச் செய்தாரிறே. விஷ்ணுசித்தம் என்கையாலே 'மின்னுநூல் விட்டுசித்தன் விரித்த' என்று பெரியாழ்வார் திருமொழி அடியிலும், 'விட்டுசித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவலனை' என்று முடிவிலும் அருளிச் செய்கையால் இந்தத் திருநாமத்தாலே அந்த ப்ரப$_3$ந்த$_4$ ப்ரவக்தா என்னுமதுவும் ஸூசிதம். அதுக்கும் தனியன் இதுவேயிறே. 'அனந்தன்பாலும் கருடன் பாலும் ஐதுநொய்தாக வைத்து என்மனந்தனுள்ளே வந்து வைகி வாழச்செய்தாய் எம்பிரான்' என்னும்படி இவர் திருவுள்ளத்திலே அபி$_4$நிவிஷ்டனா யிருக்குமாய்த்து. (விஷ்ணுசித்தம்)

---

*12) என்று முதலிலேயே ஆழ்வார்தாமே தமக்கு அடையாளமாக விஷ்ணுசித்தன் என்று கூறிக் கொண்டாரன்றோ!* **விஷ்ணுசித்தம்** *என்றபடியால் பெரியாழ்வார் திருமொழியின் தொடக்கத்தில் "மின்னுநூல் விட்டு சித்தன் விரித்த" (1-1-10) என்றும், முடிவில் "விட்டுசித்தன் மனத்தே கோயில் கொண்ட"(5-4-11) என்றும் அருளிச் செய்துள்ளபடி இத்திருநாமத்தாலேயே அந்த பிரபந்தத்தை (பெரியாழ்வார் திருமொழியை) அருளிச் செய்துள்ளார் என்பதும் குறிப்பிடப்படுகிறது. பெரியாழ்வார் திருமொழிக்கும் இதுவேயன்றோ தனியன்! "அனந்தன்பாலும் கருடன் பாலும் ஐதுநொய்தாகவைத்து என்மனந்தனுள்ளே வந்து வைகி வாழச்செய்தாய் எம்பிரான்" என்று இவரே அருளிச்செய்துள்ளபடி (5-4-8) அவர் திருவுள்ளத்தில் மிகவும் விருப்பத்துடன் எம்பெருமான் இருப்பவன்*

விஷ்ணுநா வ்யபதே₃ஷ்டவ்யராயிருக்கிறபடி. 'நின் கோயிலில் வாழும் வைட்டவணவன்' என்றாரிறே. அவனும் வைஷ்ணவ ஸம்ப₃ந்த₄த்தை அபேக்ஷித்துக் கைப்பற்றினான்.

(தம் விஷ்ணுசித்தம் நமாமி) அந்த விஷ்ணுசித்தரை 'கிழியறுத்தான் பாதங்கள் யாமுடைய பற்று' என்னும்படி ஸேவிக்கிறேன் என்கிறது. நமஸ்காரமும் ஸேவையும் பர்யாயம். ॐ नमो विष्णवे (ஓம் நமோ விஷ்ணவே) என்னுமது விஷ்ணுசித்தர் விஷயத்திலேயாய்த்து. விஶேஷஜ்ஞர்க்கு ப₄க₃வத் விஷயத்திலே அரைவயிறாய்,

---

அன்றோ! *(**விஷ்ணுசித்தம்**)* "**விஷ்ணுநா வ்யபதே₃ஷ்டவ்ய:**" (விஷ்வக்.ஸம்) (விஷ்ணுவை யிட்டே பெயர் கூறப்பட வேண்டும்) என்பதற்கேற்பக் கூறப் படுகிறது. இவரும் "நின் கோயிலில் வாழும் வைட்டணவன்" என்று *(5-1-3)* தம்மைக் கூறிக் கொண்டார். எம்பெருமானும் இவரோடு தனக்கு உள்ள தொடர்பு காரணமாகவே இவருக்கு அருள்புரிந்தான்.

*(**தம் விஷ்ணுசித்தம் நமாமி**)* (அந்த விஷ்ணுசித்தரை வணங்குகிறேன்) "கிழியறுத்தான் பாதங்கள் யாமுடைய பற்று" என்று கூறியுள்ளபடி அந்த விஷ்ணுசித்தரை ஸேவிக்கிறேன். நமஸ்காரம், ஸேவை ஆகிய இரண்டும் ஒரே பொருளுடைய சொற்கள். "**ஓம் நமோ விஷ்ணவே**" (விஷ்ணுவை நமஸ்கரிக்கிறேன்) என்பது இப்போது விஷ்ணு சித்தரிடத்திலேயாகிவிட்டது. விசேஷமான அறிவு படைத்தவர்களுக்கு பகவானை ஸேவிக்கும் போது அரைவயிறே நிரம்பும். பாகவதர்களை

இங்கேயிறே எல்லாம் பூர்ணமாவது. 'நம்பி விட்டுசித்தர்' இறே. இத்தால் ப்ரத$_2$ம ப்ரப$_3$ந்த$_4$ அநுஸந்த$_4$ாநத$_3$ஶையில் தத்$_3$வக்தாவான ஆழ்வாரை तं पूर्वं अभिवादयेत् (தம் பூர்வம் அபி$_4$வாத$_3$யேத்) என்று ப்ரத$_2$மம் திருவடி தொழும்படியைச் சொல்லிற்றாய்த்து.

---

ஸேவிக்கும்போதுதான் வயிறு பூர்ணமாக நிறையும். ஏனெனில் "நம்பி விட்டுசித்தர்" என்று (நாச். திரு 13-10) கூறியுள்ளபடி இவரும் ஒரு நம்பி (பூர்ணர்). இந்த சுலோகத்தால் முதல் பிரபந்தமான திருப்பல்லாண்டை அநுஸந்திக்கும்போது அதை அருளிச்செய்தவரான ஆழ்வாரை "**தம் பூர்வம் அபி$_4$வாத$_3$யேத்**" (அவரை முதலில் வணங்க வேண்டும்) என்று கூறியுள்ளபடி முதலில் அவரைத் தொழுவது கூறப்பட்டது.

## பாண்டிய பட்டர் அருளிச்செய்த தனியன்கள்

**மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்றாருகால்**
**சொன்னார் கழற்கமலம் சூடினோம் – முன்னாள்**
**கிழியறுத்தான் என்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும்**
**வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.**

| | |
|---|---|
| மின்னார் தட மதிள் சூழ் | ஒளி நிறைந்த பெரிய மதிளாலே சூழப்பட்ட |
| வில்லிபுத்தூர் என்று | ஸ்ரீவில்லிபுத்தூர் என்று |
| ஒருகால் சொன்னார் | ஒருமுறை கூறியவர்களுடைய |
| கழல் கமலம் | திருவடித் தாமரைகளை |
| சூடினோம் | தலைமேற்கொண்டோம்; |

| | |
|---|---|
| முன் நாள் | முன்னொருகாலத்தில் |
| கிழி அறுத்தான் என்று | (பரதத்வ நிர்ணயம் செய்து) பொற் கிழியை அறுத்தவர் என்று |
| உரைத்தோம் | சொல்லப்பெற்றோம். |
| நெஞ்சமே வந்து | ஓ நெஞ்சே! நீ அநுகூலமாக வரப்பெற்று |
| கீழ்மையினிற் சேரும் | நரகத்தில் சேருவதற்கான |
| வழி அறுத்தோம் | வழியை அறும்படி செய்தோம். |

(மின்னார் தட மதிள் சூழ்) தேஜஃப்ரசுரமான பெரிய மதிளாலே சூழப்பட்ட வில்லிபுத்தூர். இத்தால் செம்பொன ஏய்ந்த மதிளாயிருக்கை. ப்ரதிகூலர்களுக்குக் கிட்டவொண்ணாதபடியாய், அநுகூலர்க்குக் கண்டு வாழும்படியாய் இருக்கை. கல்மதிள் போலே அத்தலைக்கு அரணாய், மங்க₃ளாஶாஸநபரரான பெரியாழ்வார் இருக்கும் ஊரில் மதிளிறே. ஏவம்வித₄மான மதிளாலே சூழப்பட்ட (வில்லிபுத்தூரென்று ஒருகால் சொன்னார்

---

(மின்னார் தடமதிள் சூழ்) மிக்க ஒளியை உடைய பெரிய மதிளாலே சூழப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூர். இதனால் செம்பொன் ஏய்ந்த மதிளாக இருப்பது கூறப்படுகிறது. எதிரிகளுக்கு அணுகவொண்ணாத படியாகவும் அடியவர்களுக்குக் கண்டு வாழும் படியாகவும் மதிள் இருக்கிறபடி கூறப்படுகிறது. கல்மதிள் அமைத்தது போல் எம்பெருமானுக்கு அரணாக எப்போதும் மங்களாஶாஸனம் செய்வதை இயல்வாக உடையவரான பெரியாழ்வார் இருக்கும் ஊரில்உள்ள மதிளன்றோ! இப்படிப்பட்ட மதிளாலே சூழப்பட்ட (வில்லிபுத்தூர் என்று ஒருகால்

கழற்கமலம் சூடினோம்) ஒருகாலாகிலும் ஸ்ரீவில்லிபுத்தூரை உச்சரித்த ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத₃கமலங்களைப் பைங்கமலத் தண்தெரியலாகத் தலையிலே சூடினோம். “கோவிந்தன்தன் அடியார்களாகி எண்டிசைக்கும் விளக்காகி நிற்பார் இணையடி என் தலை மேலவே” என்றிறே ஆழ்வாரும் அருளிச்செய்தது. ஸ்ரீவில்லிபுத்தூர்தான், வடபெருங் கோயிலுடையானுக்கும் ஆழ்வாருக்கும், ஆண்டாளுக்கும் நிருபகமான தே₃ஶமாய்த்து. “வில்லிபுத்தூருறைவான்”, “வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான்”, “அன்னவயல் புதுவை ஆண்டாள்”, “கோதை பிறந்தவூர் - வில்லிபுத்தூர்”

---

*சொன்னார் கழற்கமலம் சூடினோம்)* ஒரேஒரு முறையாவது ஸ்ரீவில்லிபுத்தூர் என்று உச்சரித்த ஸ்ரீவைஷ்ணவர்க ளுடைய திருவடித் தாமரைகளை தலைமேலே சூடினோம். இப்படிப்பட்ட அடியவர்களுடைய திருவடிகளைத் தலைமேல் சூட வேண்டும் என்பதை - "கோவிந்தன் தன் அடியார்களாகி எண்டிசைக்கும் விளக்காகி நிற்பார் இணையடி என் தலைமேலவே" (2-9-11) என்று பெரியாழ்வார் தாமே அருளிச் செய்துள்ளாரன்றோ! ஸ்ரீவில்லிபுத்தூர் என்ற ஊர் வடபெருங் கோயிலுடையான், பெரியாழ்வார், ஆண்டாள் ஆகிய மூவருக்குமே அடையாளமாக அமைந்துள்ளது. வடபெருங்கோயிலுடையான் "வில்லிபுத்தூர் உறைவான்" (நாச். திரு. 5-5) என்றும், பெரியாழ்வார் "வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான்" (பெரியா.திரு. 2-2-11) என்றும், ஆண்டாள் "அன்னவயல் புதுவை ஆண்டாள்" என்றும்

என்னக்கடவதிறே. ப்ரணவம் போலே மூவரும் கூடலாயிருக்கை. இப்படி உத்தே3ஶ்யமான ஊரை ஒருகால் அநுஸந்தி4ப்பார் எப்போதும் உத்தே3ஶ்யராகையாலே அவர்கள் ஸ்ரீபாத3ங்கள் ஶிரோபூ4ஷணமாக த4ார்ய மென்கிறது. "அரசமர்ந்தான் அடிசூடுமரசு" என்னுமா போலே.

பின்னை விரோதி4கள் செய்தகென் என்னில், (முன்னாள் கிழியறுத்தான் என்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும் வழியறுத்தோம்) முன்னாள் கிழியறுக்கையாவது முற்காலத்திலே பாண்டியன் வித்3யாஶுல்கமாகக் கட்டிய

---

"கோதைபிறந்தவூர் - வில்லிபுத்தூர்" என்றும் கூறப்பட்டுள்ளனர். ஓம் என்கிற ப்ரணவத்தில் (அ என்கிற எழுத்தினால்) பகவானும் (உ என்கிற எழுத்தினால்) பிராட்டியும், (ம் என்கிற எழுத்தினால்) ஜீவாத்மாவும் கூறப்படுவது போல இங்கும் வடபெருங்கோயிலுடையான், ஆண்டாள், பெரியாழ்வார் ஆகிய மூவரும் கூடியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஊரை ஒருமுறை கூறுபவர்களும் எப்போதும் விரும்பத் தக்கவர்கள். ஆதலால் அவர்கள் திருவடிகளைத் தலைமீது அணிகலனாக தரிப்பது சாலச் சிறந்தது என்பது கூறப்படுகிறது. "அரசமர்ந்தான் அடிசூடும் அரசு" (பெருமாள் திரு. 10-7) என்று அருளிச்செய்யப் பட்டுள்ளதன்றோ!

இதற்குத் தடைகள் என்ன ஆயிற்று எனில், **(முன்னாள் கிழியறுத்தான் என்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும் வழியறுத்தோம்)** முற்காலத்தில் பாண்டிய அரசன், பரம்பொருளை நிலைநாட்டுகின்ற வித்வானுக்குப் பரிசாகக்

த்$_3$ரவ்யக்கிழியை அங்கே சென்று வேதா$_3$ந்தார்த்த$_2$முகே$_2$ந விஷ்ணுவே பரதத்த்வம் என்று விஷ்ணுசித்தரான தாம் வித்$_3$வஜ்ஜநங்களை வென்று த்$_3$ரவ்யக்கிழியை அறுத்த ஆழ்வாருடைய இந்த அத்யத்$_3$பு$_4$த கர்மத்தை அநுஸந்தி$_3$த்தோம். அத்தாலே கீழ்மையினிற்சேரும் வழி அறுத்தோம். जन्मकर्म च मे दिव्यं एवं यो वेत्ति तत्त्वतः। त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन॥ "ஜந்மகர்ம ச மே தி$_3$வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: த்யக்த்வா தே$_3$ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" என்று க்ருஷ்ண விஷயத்தில் ஜந்மகர்மங்கள் ஸம்ஸாரப$_3$ந்த$_4$த்தை அறுக்குமாபோலேயாய்த்து விஷ்ணுசித்தர் ஜந்மகர்மங்களும். இங்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஜந்மமும் கிழியறுக்கை

---

*கொடுப்பதற்காகக் கட்டிவைத்த பொற்கிழியை, அரசனவைக்குச் சென்று, வேதாந்தங்கள் மூலமாக விஷ்ணுவே பரம்பொருள் என்று நிலைநாட்டி மற்ற வித்வான்களை வென்று, பொற்கிழியை அறுத்த ஆழ்வாருடைய அற்புதமான செயலை உரைத்தோம்; அதனால் கீழ்மையான இடத்தில் சேரும் வழியை அறுத்தோம். **"ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந"** (கீதை 4-9) (என்னுடைய திவ்யமான பிறப்பு, செயல்கள் இவற்றை உள்ளபடி எவன் அறிகிறானோ அவன் மறுபடியும் பிறவியை அடைவதில்லை. என்னையே வந்து அடைகிறான்) என்று அவனே கூறியுள்ளபடி கண்ணனுடைய பிறப்பையும் செயல்களையும் உள்ளபடி அறிந்தவன் பிறவியின் தொடர்பை அறுத்துக் கொள்வது போல பெரியாழ்வாருடைய*

கர்மமுமாயிருக்கும். கீழ்மையினில் சேரும் வழி அறுக்கையாவது நிஹீந க்ருத்யத்தாலே ப்ராபிக்கும் ப்ரதிப$_3$ந்த$_4$கமான மார்க்கத்தைச் சே$_2$தித்தோம். "புறநெறி களை கட்டு" அவைதி$_3$க மார்க$_3$த்தை அடைகை பாபப$_2$லமிறே. "மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்று, இவர்தாம் ஸந்மார்க$_3$ வர்திகளிறே. அன்றிக்கே "கீழ்மையினிற் சேரும் வழி" என்று அத:பதநத்திலே ப்ராப்தமான மார்க$_3$மென்று, அர்சிராதி$_3$ மார்க$_3$த்துக்குக் கீழாய், புநராவ்ருத்தி லக்ஷணஹேதுவான தூ$_4$மாதி$_3$ மார்க$_3$த்ரயத்தையும் நிரோதி$_4$த்தோம். (நெஞ்சமே

---

ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறப்பையும், கிழியறுத்த செயலையும் உரைப்பவர்கள் கீழ்மையான இடங்களில் சேரும் வழியை அறுப்பர்கள். கீழ்மையினில் சேரும் வழியை அறுப்பதாவது, தாழ்ந்த செயல்களைச் செய்வதனால் அடையும் தவறான வழிகளை அறுப்பது. "புறநெறிகளைகட்டு" (திருவாய். 1-3-5) என்று கூறியுள்ளபடி வேதத்திற்குப் புறம்பான வழிகளில் செல்வது பாவத்தின் பயனன்றோ! "மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" (நாச்.திரு.11-10) என்று ஆண்டாள் அருளிச்செய்துள்ளபடி உயர்ந்த வழியில் செல்பவர் பெரியாழ்வார். (எனவே அவருடைய செயலை அநுஸந்தித்த நாங்களும் தாழ்ந்த வழியை அறுத்து உயர்ந்த வழியில் சென்றோம்.) அல்லது, "கீழ்மையினிற் சேரும் வழி" என்பது கீழே வீழும் வழியைக் கூறுவதாகவும் கொள்ளலாம். பரமபதத்தை அடைவிக்கும் அர்ச்சிராதி வழிக்குக் கீழே உள்ளதாகவும், மறுபடி இவ்வுலகுக்குத் திரும்பி

வந்து) நெறிநின்ற நெஞ்சாய், நீ அநுகூலிக்கையாலே இந்த லாப₄த்தை லபி₄த்தோம். (வந்து) இவ்வளவும் வந்து. ஆழ்வாரளவும் வந்து, ஸ்ரீவில்லிபுத்தூர் என்றொருகால் சொன்னார் கழற்கமலம் சூடினோம்; கீழ்மையினிற் சேரும் வழியறுத்தோம்; இதுவன்றோ நீ அநுகூலித்ததால் பெற்ற பேறு. நீ என் வழி வருகையாலே இவையெல்லாம் பெற்றோம். இஷ்டப்ராப்தியோபாதி அநிஷ்டநிவாரணமும் ப₂லமிறே. (நெஞ்சமே வந்து) "நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப் பெற்றால் என்செய்யோம்? இனி என்ன

---

வருவதாகவும் உள்ள தூமகதி முதலிய வழிகளைச் சேராமல் தப்பினோம். **(நெஞ்சமே வந்து)** நெறி நின்ற நெஞ்சாய் நீ ஒத்துழைத்த படியாலன்றோ இந்த லாபத்தை அடைந்தோம் என்று தம்முடைய நெஞ்சைக் கொண்டாடுகிறார். **(வந்து)** இவ்வளவு தூரம் வந்து. அதாவது பகவானுடைய அடியவரான பெரியாழ்வார் செயலைப் புகழுமளவும் வந்து. அவருடை ய ஊராகிய ஸ்ரீவில்லிபுத்தூரை ஒருகால் சொல்கின்ற அடியவர்க ளுடைய திருவடிகளைத் தலைமேல் சூடுமளவும் வந்து, கீழ்மையினிற் சேரும் வழி அறுத்தோம். நெஞ்சே! இதுவன்றோ நீ ஒத்துழைத்ததால் கிடைத்த பேறு! நீ என் வழி வந்ததால் இவையெல்லாம் பெற்றோம் என்று நெஞ்சைக் கொண்டாடுகிறார். விருப்பத்தை அடைவது போலவே, விருப்பமில்லாதவற்றை (கீழ்மையினிற் சேரும் வழியை)த் தவிர்வதும் பேறு அன்றோ! **(நெஞ்சமே வந்து)** "நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப் பெற்றால் என் செய்யோம்? இனியென்ன குறைவினம்?" (திருவாய். 1-10-4)

குறைவினம்?” என்றாப்போலே பெற்ற பேற்றைப் பேசி நெஞ்சோடே ஹர்ஷிக்கும்படியைச் சொல்லுகிறது. “வில்லி புத்தூரென்று ஒருகால் சொன்னார்” என்றது “வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்” என்றும் “மென்னடை அன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்” என்றும் ப$_4$க$_3$வத்$_3$விஷயத்திலே தகப்பனாரும் மகளாரும் ஒருகால் சொன்னாப்போலே, ப$_4$ாக$_3$வத விஷயமாக ஒருகால் சொன்னார் என்றபடி. ஸம்ப$_3$ந்த$_4$ாநுஸந்த$_3$ாநம் ஸக்ருத் என்றபடி.

---

என்று நம்மாழ்வார் தம்முடைய நெஞ்சைக் கொண்டாடியதுபோலவே இங்கும் அடைந்த பேற்றைக் கூறி நெஞ்சோடு மகிழும்படியைக் கூறுகிறது. 'வில்லிபுத்தூர் என்று ஒருகால் சொன்னார்' என்றது "வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்" (பெரியா. திரு. 2-2-8) என்று பெரியாழ்வார் ஒருமுறையும் "மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்" (நாச். திரு. 5-5) என்று ஆண்டாள் ஒருமுறையும் பகவானைப் பற்றிக் கூறியதுபோல பாகவதரான பெரியாழ்வார் விஷயமாக ஸ்ரீவில்லிபுத்தூர் என்று ஒருமுறை கூறுபவர்களைக் கூறுகிறது. பாகவதர்களோடு தொடர்பிற்கு ஒருமுறை சொன்னாலும் போதும் என்பது குறிப்பிடப்படுகிறது.

பாண்டியன்கொண்டாடப்பட்டர்பிரான்வந்தானென்று
ஈண்டியசங்கமெடுத்தூத – வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

| | |
|---|---|
| பாண்டியன் கொண்டாட | பாண்டிய அரசன் கொண்டாடும்படியாக |
| பட்டர்பிரான் | அந்தணர்களுக்கு உபகாரகரானவர் |
| வந்தான் என்று | எழுந்தருளினார் என்று |
| ஈண்டிய சங்கம் | திரள்திரளான சங்குகளை |
| எடுத்து ஊத | கையில் எடுத்து ஊத |
| வேண்டிய வேதங்கள் ஓதி | அவசியமான வேதங்களை ஓதி |
| விரைந்து கிழியறுத்தான் | விரைவில் பொற்கிழி அறுத்தவருடைய |
| பாதங்கள் | திருவடிகள் |
| யாமுடைய பற்று | நமக்குப் புகலிடம். |

**(பாண்டியன் கொண்டாட) இதில் ப்ரப$_3$ந்த$_4$ வக்தாவான பெரியாழ்வார் திருவடிகளில் உபாய ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது.**

**"தென்னன் கொண்டாடும்" என்னுமாபோலே "நமக்குப் பரத்த்வ நிர்ணயம் பண்ணித்தரும்படி பட்டர்பிரான் வந்தான்" என்று பாண்டியனான ஸ்ரீவல்லப$_4$தேவன்**

---

*(பாண்டியன் கொண்டாட) இப் பாசுரத்தில், திருப்பல்லாண்டை அருளிச்செய்தவரான பெரியாழ்வாருடைய திருவடிகளைச் சரணமாகப் பற்றுவது கூறப்படுகிறது.*

*"தென்னன் கொண்டாடும்" (திருமாலிருஞ் சோலை மலையைத் தென்னனான பாண்டிய அரசன் கொண்டாடினான்) (பெரியா.திரு.4-2-7) என்பது போல நமக்குப் பரம்பொருளை நிலைநாட்டித் தரும்படியான பெருமை பெற்ற பட்டர்பிரான் வந்தார் என்று சொல்லிப் பாண்டிய அரசனான*

சொல்லிக் கொண்டாட, அத்தஸ₃பையிலே (ஈண்டிய சங்கம் எடுத்தோத) திரண்டிருக்கிற வித்₃வத் ஸங்க₄மானது, ஓரோப்ரதே₃ஶங்களிலே ஓதிக்கிடக்கிற ப்ரஶம்ஸாபர வாக்₂யங்களை எடுத்து ப்ரஹ்மருத்₃ராதி₃களைப் போரப் பொலியச் சொல்லி உபந்யஸிக்க என்னுதல்; (ஈண்டிய சங்கம் மடுத்தூத) என்று, ஜயஶங்க₂ங்கள் பலவற்றையும் வாயிலே மடுத்து ஊத என்னுதல். "பூங்கொள் திருமுகத்து மடுத்து ஊதிய சங்கொலி" என்னக்கடவதிறே. (எடுத்தூத) என்றபோது கிட்டி ஊத என்றபடி. அதிக்ஷேபித்த வித்₃வான்கள் வாயடைக்கும்படி (வேண்டிய வேதங்கள் ஓதி) सर्वे वेदाः यत्पदमामनन्ति (ஸர்வே வேதா₃: யத்பத₃ம் ஆமநந்தி), वेदैश्च सर्वैरहमेव वेद्यः (வேதை₃ஶ்ச

---

ஸ்ரீவல்லபதேவன் கொண்டாட. அப்போது (**ஈண்டியசங்கம் எடுத்தோத**) அங்கே திரண்டிருந்த அறிஞர்கள் கூட்டமானது, வேதங்களில் ஒருசில இடங்களில் புகழ்ச்சிக்காக கூறப்பட்டுள்ள வாக்கியங்களை எடுத்து பிரமன் சிவன் முதலியவர் களைப் பரம்பொருளாகச் சொல்லிப் பேச என்னுதல். அல்லது (**ஈண்டிய சங்கம் மடுத்தூத**) என்று வெற்றிச் சங்குகளை வாயிலே மடுத்து (வைத்து) ஊத என்னுதல். "பூங்கொள் திருமுகத்து மடுத்து ஊதிய சங்கொலி" (நாச்.திரு.9-9) என்று கூறப்பட்டு உள்ளதன்றோ! (**எடுத்து ஊத**) என்றபோது கிட்டி ஊத என்று பொருள். எதிர்த்த வித்வான்கள் வாயடைக்கும்படி (**வேண்டிய வேதங்களோதி**) "**ஸர்வே வேத₃ா: யத் பத₃ம் ஆமநந்தி**" (கடவல்லி 2-15) (எல்லா வேதங்களும் எவனுடைய திருவடிகளைக் கூறுகின்றனவோ) என்றும்

ஸர்வைரஹமேவ வேத்₃ய:) என்கிறபடியே வேத₃ங்கள் எல்லாவற்றாலும் ஆராத₃நப்ரகாரத்தையும் ஆராத்₃ய வஸ்துவையும் சொல்லுகிறதென்று அறுதியிட்டு, ப₄க₃வத் பரத்வத்தை ஸாதி₃த்து, இனித் தாழுகைக்கு ஹேதுவென் என்று திருவடிகளிலே தாழ்ந்த கிழியை த்வரித்து அறுத்தவருடைய. (பாதங்கள்) கிழியறுத்த பட்டர்பிரான் பாதங்கள். (யாமுடைய பற்று) பட்டர்பிரானடியேன் என்னும்படி அவர்க்கு ஶேஷபூ₄தராயிருக்கிற நம்முடைய ரக்ஷை. “தகையான் சரணம் தமர்கட்கோர் பற்று” என்கிற பொதுவானவனுடைய திருவடிகளன்று. “அவனைப் பல்லண்டென்று காப்பிடும் பான்மையன் தாள்”.

---

"*வேதை₃ஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்₃ய:*" (கீதை *15-15*) (வேதங்கள் அனைத்தாலும் நானே அறியப்படுகிறேன்) என்றும் கூறப்பட்டுள்ளபடி எல்லா வேதங்களும் பரம் பொருளான நாராயணனையும், அவனை வழிபடும் முறையை யுமே கூறுகின்றன என்று நிலைநாட்டினார். இனித் தாமதிப்பது எதற்காக என்று தம்முடைய திருவடிகளில் தாழ்ந்த பொற்கிழியை விரைவாக அறுத்தவருடைய. **(பாதங்கள்)** பொறிகிழியை அறுத்த பட்டர்பிரானுடைய திருவடிகள். **(யாமுடைய பற்று)** பட்டர்பிரானடியேன் என்று கூறும்படி அவருக்கு அடிமையாயிருக்கிற நமக்குக் காப்பு. "தகையான் சரணம் தமர்கட்கோர் பற்று" (திருவாய். 10-4-10) என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி எல்லார்க்கும் பொதுவானவனான எம்பெருமானுடைய திருவடிகள் அன்று. "அவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன் தாள்"

(யாமுடைய பற்று) நம்முடைய அரண், புகல், உபாயம், ஶரண்யம் என்றபடி. (யாமுடைய பற்று) பற்றற்ற நம்முடைய பற்று. "பற்றிலார் பற்ற நின்றான்" என்னக் கடவதிறே.

தனியன்கள் வியாக்யானம் முற்றிற்று.

---

(இரா.நூற். 15) என்று அமுதனார் அருளிச் செய்துள்ளபடி எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்பவரான பெரியாழ்வாருடைய திருவடிகள். ***(யாமுடைய பற்று)*** நம்முடைய அரண், புகல், உபாயம், ஶரண்யம் (அடைக்கலம்) என்று பொருள். ***(யாமுடைய பற்று)*** வேறு பற்று இல்லாத நம்முடைய பற்று. "பற்றிலார் பற்ற நின்றான்" (திருவாய். 7-2-7) என்று நம்மாழ்வார் எம்பெருமானைப் பற்றி அருளிச்செய்துள்ளது போலப் பெரியாழ்வாரும் பற்றற்ற நமக்குப் பற்று ஆகும்."

தனியன் விளக்கவுரை முற்றிற்று

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு வியாக்யானம்

## அவதாரிகை

पतिं विश्वस्यात्मेश्वरं (பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்) என்றும், तमीश्वराणां परमं महेश्वरं (தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்) என்றும், ஸர்வஸ்வாமியாகவும் ஸர்வநியந்தாவாகவும் ஸர்வேஶ்வரன் ஸ்வரூபத்தை நிர்ணயித்து, சேதந ஸ்வரூபத்தை यस्यास्मि (யஸ்யாஸ்மி) என்றும், परवानस्मि (பரவாநஸ்மி) என்றும், दासोहं वासुदेवस्य

---

**பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்** (தை.நாரா.) (உலகிற்குப் பதியாகவும், தனக்குதானே ஈஶ்வரனாகவும், நித்யனாகவும் மங்களகரனாகவும், அடியவர்களை நழுவ விடாதவனாகவும் இருப்பவன் நாராயணன்) என்றும், **தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் தம் தே₃வதாநாம் பரமஞ்ச தை₃வதம்** (ச்வே. 6-7) (ஈஶ்வரர்களக்கும் மேலான மஹேஶ்வரனும், தேவதைகளுக்கும் மேலான தேவதையுமான அவனை) என்றும், கூறப்பட்டுள்ள பிரமாணங்களிலிருந்து, ஸர்வேஶ்வரன் எல்லோருக்கும் தலைவனாகவும் கட்டளையிடுபவனாகவும் உள்ளவன் என்று அவனுடைய தன்மைகளை அறிந்துகொள்ள வேண்டும். **யஸ்யாஸ்மி ந தமந்தரேமி** (யஜு.அஷ்ட.3-7) (எவனொருவனுக்கு நான் அடிமையாக இருக்கிறேனோ அவனைவிட்டு வேறொருவனிடம் செல்லமாட்டேன்) என்றும்,

(தா₃ஸோஹம் வாஸுதே₃வஸ்ய) என்றும், दासभूता: स्वतस्सर्वे (தா₃ஸபூ₄தாஸ்வதஸ் ஸர்வே) என்றும் நிருபித்து, இந்த ஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமும், ஜ்ஞாநாநுரூபமான

---

**பரவாநஸ்மி காகுத்ஸ்த₂ த்வயி வர்ஷஶதம் ஸ்தி₂தே ஸ்வயம் து ருசிரே தே₃ஶே க்ரியதாமிதி மாம் வத₃** (ரா. ஆர. 15-7 லக்ஷ்மணன் கூறியது), (காகுத்தனே! எப்போதும் நான் உமக்கு அடிமையாகவே இருப்பவன். நீராகவே உமக்கு விருப்பமான இடத்தில் பர்ணசாலை அமைக்கப் படட்டும் என்று எனக்கு ஆணை இடுவீராக) என்றும், **தாஸோஹம் வாஸுதே₃வஸ்ய தே₃வதே₃வஸ்ய ஶார்ங்கி₃ண: ஶங்கசக்ரக₃தா₃பாணேஸ் த்ரைலோக்யஸ் யைக சக்ஷுஷ:** (புண்டரீக ஸம்வாதம் - நாரதவாக்யம்) (தேவதேவனும், ஶார்ங்கம் எனும் வில்லை யுடையவனும், ஶங்கம், சக்ரம், கதை இவைகளைக் கையில் உடையவனும், மூவுலகிற்கும் ஓர் கண்ணாக இருப்பவனுமான வாஸுதேவனுக்கு நான் அடிமை என்றும், **தா₃ஸபூ₄தாஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மாந:** (ஹாரீதஸ்ம்ருதி - ஈஶ்வர ஸம்ஹிதை -சிவ வாக்யம்) (பரமாத்மாவிற்கு எல்லா ஆத்மாக்களும் இயற்கையாகவே அடிமைப் பட்டவைகளன்றோ) என்றும் கூறப்பட்டுள்ள பிரமாணங்களிலிருந்து ஜீவாத்மா ஸர்வேஶ்வரனுக்கு அடிமைப்பட்டது என்று அறிந்துகொள்ளவேண்டும். ஆக, பரமாத்மாவான பகவானே எல்லோருக்கும் தலைவன், அவனுக்குத் தொண்டுசெய்வதே ஜீவாத்மாவுக்குத் தகுந்தது என்ற அறிவும், அந்த அறிவிற்கு ஏற்ற செயலும் எல்லோருக்கும்

வ்ருத்தமும் ப்ராப்தமாயிருக்க, அய:பிண்ட$_{34}$த்துக்கு அக்$_3$நி ஸம்ஸர்க$_3$த்தால் வந்த தாத$_3$ாத்ம்யம்போலே, சேதநர் அசித்ப்ரத்யாஸத்தியாலே தே$_3$வோஹம், மநுஷ்யோஹம் என்று அஹங்கரித்து, புத்ரமித்ராதி$_3$கள் பக்கலிலே மமதாபுத்$_3$தி$_4$யைப் பண்ணி, இப்படி ப்ரவாஹரூபேண அஹங்கார மமகாரங்களாலே ஸர்வேஸ்வரக$_3$தமான ஸ்வாமித்வ நியந்த்ருத்வங்களைத் தங்கள் பக்கலிலே அத்$_4$யவஸித்து, ஸ்வத:ப்ராப்தமான பாரதந்த்ர்யத்தில் விமுக$_2$ராய், அத ஏவ ஶப்த$_3$ாதி$_3$ விஷயப்ரவணராய்,

---

அமையவேண்டும். ஆனால், நெடுநேரம் நெருப்பில் இடப்பட்ட இரும்புத்துண்டு, நெருப்போடுள்ள தொடர்பினால் நெருப்பைப் போலவே மாறிவிடுவதுபோல, சேதநர் அசித்துடன் (உடலுடன்) நெடுநாள்கொண்டுள்ள தொடர்பு காரணமாக உடலையே தாங்களாக (ஆத்மாவாக) நினைத்து விடுகின்றனர். அதனால் தாங்கள் சார்ந்துள்ள உடலையே கருத்தில் கொண்டு 'நான் தேவன், நான் மனிதன்' என்ற அகங்காரமும், மகன் நண்பர்கள் முதலியவர்களிடத்தில் என்னுடையவர்கள் என்ற மமகாரமும் கொண்டவர்களாகி விடுகின்றனர். இப்படித் தொடர்வெள்ளமிட்டு வருகின்ற அகங்கார மமகாரங்களால், இறைவனுடைய தன்மையான தலைமை, ஆளுமை இவைகளைத் தங்களிடத்தில் ஏறிட்டுக்கொண்டு (அதாவது தங்களையே தலைவனாகவும் ஆளுகின்றவனாகவும் நினைத்து) தங்களுடைய தன்மையான பாரதந்த்ர்யத்தில் (எம்பெருமானுக்கு ஆட்பட்டிருத்தலில்) கண் செலுத்தாமல் இருந்துவிடுகின்றனர். அதனாலேயே

அத்தால் வந்த ராக$_3$த்$_3$வேஷாதிகளாலே அபி$_4$பூ$_4$தராய்ப் படுகிற துக்க$_2$பரம்பரைகளை அநுஸந்தி$_3$த்து, நிருபாதி$_3$க ஶேஷியான ஸர்வேஶ்வரன் शासनात् शास्त्रम् (ஶாஸநாத் ஶாஸ்த்ரம்) என்கிறபடியே தத்த்வஹிதங்களை அறிந்து நல்வழி போகைக்குடலாக ஶாஸ்த்ரத்தை ப்ரகாஶிப்பித்து அருளினான். हर्तुं तमः सदसदी च विवेक्तुमीशो मानं प्रदीपमिव कारुणिको ददाति (ஹர்தும் தமஸ் ஸத$_3$ஸதீ$_3$ ச

---

ஐம்புலன்களால் ஈர்க்கப்பட்டு உலகியல் விஷயங்களிலேயே ஈடுபட்டவர்களாகி விடுகின்றனர். அதனால் ஆசை, கோபம் முதலியவற்றால் சூழப் பட்டவர்களாய் துன்பங்களையே தொடர்ந்து அனுபவிக்கின்றனர். தடையற்ற தலைவனாகிய இறைவன் இதைக்கண்டு வருந்துகிறான். 'கட்டளை இடுகின்றபடியால் (ஶாஸநம் செய்கின்றபடியால்) ஶாஸ்த்ரம் எனப்படுகிறது' என்று கூறியுள்ளபடி, சேதநர் நல்லவை தீயவைகளை அறிந்துகொண்டு நல்வழியிலே செல்வதற்குறுப்பாகத் தனது கட்டளைகளான சாத்திரங்களைக் கொடுத்தருளி னான். '**ஹர்தும் தம: ஸத$_3$ஸதீ$_3$ச விவேக்துமீஶோ மாநம் ப்ரதீ$_3$பமிவ காருணிகோ த$_3$தா$_3$தி தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம் தத்ரைவ கேபி சப$_3$லா ஶலபீ$_4$ ப$_4$வந்தி**' (ஸ்ரீரங்கராஜஸ்தவம் 2-1) (கருணைக்கடலான எம்பெருமான் அறிவின்மையாகிற இருளை நீக்கிக் கொள்வதற்கும், நன்மை தீமைகளை ஆராய்ந்து அறிவதற்கும் விளக்கைப் போன்ற வேதத்தைக் கொடுக்கிறான். பாக்யவான்கள் அந்த விளக்கைக்

விவேக்துமீஶோ மாநம் ப்ரதீ₃பமிவ காருணிகோ த₃த₃ாதி) என்னக்கடவதிறே.

இந்த ஶாஸ்த்ரப்ரதா₃நமும் வாஸநா தூ₃ஷிதமாகை யாலே அகிஞ்சித்கரமாக, ஓலைப்புறத்தில் செல்லாத தே₃ஶத்திலே எடுத்துவிடும் ராஜாக்களைப்போலே, ராமக்ருஷ்ணாதி₃ரூபேண வந்தவதரித்து, पितुर्वचननिर्देशात् (பிதுர்வசந நிர்தே₃ஶாத்), भरद्वाजस्य शासनात् (பரத்வாஜஸ்ய

---

கொண்டு அவனையே கண்டு அனுபவிக்கின்றார்கள். சில சபலர்கள் அந்த விளக்கிலேயே விட்டில் பூச்சியைப் போல் விழுந்து மடிகின்றார்கள்) என்று இதைப் பராசர பட்டரும் அருளிச்செய்துள்ளார்.

நெடுங்காலம் அசித்துடன் உள்ள பழக்கத்தினால், எம்பெருமான் சாத்திரங்களைக் கொடுத்தது சேதநர்களுக்குப் பயன்படாமலே போயிற்று. ஓலையில் எழுதியனுப்பப்பட்ட ஆணை ஏற்கப்படாத தேசத்தின் மீது அரசன் தானே படையெடுத்துச்சென்று தன்னுடைய ஆணையை நிலைநாட்டுவது போல, எம்பெருமானும் தானே இவ்வுலகில் இராமன் கண்ணன் போன்ற அவதாரங்களைச் செய்து, சாத்திரங்களில் கூறியுள்ளவற்றைத் தானே பின்பற்றிக் காட்டினான். **'ஸ ஜகா₃ம வநம் வீர: ப்ரதிஜ்ஞாம் அநுபாலயந் பிதுர்வசந நிர்தே₃ஶாத் கைகேய்யா: ப்ரியகாரணாத்'** (ரா.பால. 1-24) - (வீரனான அந்த ராமன் தன் உறுதிமொழியைக் காப்பாற்றிக் கொண்டு, தந்தையின் கட்டளையாலும், கைகேயிக்கு விருப்பமாக இருக்கையாலும் காட்டிற்குச் சென்றான்) என்றும், **'சித்ரகூடமநுப்ராப்ய**

ஶாஸநாத்) என்று பித்ருவசந பரிபாலநாதிகளை ஆசரித்தருளியும், இளைய பெருமாளை யிடுவித்து வகுத்தவிஷயத்தில் ஶேஷவ்ருத்தியே இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபம் என்னுமிடத்தை ப்ரகாஶிப்பித்தருளியும் राज्यं च अहं च रामस्य (ராஜ்யஞ்ச அஹஞ்ச ராமஸ்ய) என்று கொண்டு இந்த வ்ருத்திக்கு அடியான பாரதந்த்ர்யத்தை ஸ்ரீபரதாழ்வானையிட்டு ப்ரகாஶிப்பித் தருளியும், இப்

---

**ப₄ரத்₃வாஜஸ்ய ஶாஸநாத் ரம்யமாவஸதம் க்ருத்வாய ரமமாணா வநே த்ரய:'** (பரத்வாஜருடைய கட்டளைப்படி சித்ரகூடத்தை அடைந்து (அங்கு) அழகிய பர்ணசாலையைக் கட்டிக் கொண்டு அம்மூவரும் வனத்தில் மகிழ்ந்தார்கள்) என்றும் கூறியுள்ளபடி தந்தை முதலிய பெரியவர் களுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிதல் என்கிற பொதுவான தர்மத்தைக் (நெறியைக்) கடைப் பிடித்துக் காட்டினான். இளையபெருமாள் எனப்படுகின்ற லக்ஷ்மணனைக் கொண்டு, வகுத்த தலைவனான எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதே ஜீவாத்மாவுக்குத் தகுந்தது என்பதை வெளியிட்டருளினான். **'கத₂ம் த₃ஶரதாஜ்ஜாதோ ப₄வேத் ராஜ்யாபஹாரக: ராஜ்யஞ்ச அஹம்ச ராமஸ்ய த₄ர்மம் வக்துமிஹார்ஹஸி'** (ரா. அயோ. 82-12) - (தசரதனுக்குப் பிறந்தவன் எப்படி அரசை அபகரிப்பவனாவான்? அரசும் நானும் ராமனுடையவை. நீர் இவ்விஷயத்தில் தர்மத்தைச் சொல்லவேண்டும்) என்று கூறியபடி இந்த அடிமைத்தன்மைக்கு அடியான பாரதந்த்ரியத்தை (இட்ட வழக்காக இருத்தலை) பரதாழ்வானைக்

பாரதந்த்ர்ய காஷ்டையை गच्छता मतुलकुलं भरतेन - नीतः (கசச்சதா மாதுலகுலம் பரதேந - நீத:) என்று கொண்டு ஸ்ரீஶத்ருக்₄நாழ்வானையிட்டு ப்ரகாஶிப்பித்தருளியும், க்ருஷ்ணனாய் வந்தவதரித்து தூ₃த்யஸாரத்₂யங்களை ஆசரித்தருளியும், यद्यदाचरति श्रेष्ठः (யத்₃யத₃ாசரதி ஶ்ரேஷ்ட₂:) என்று ஶ்ரேஷ்ட₂ ஸமாசாரம் கர்த்தவ்யம் என்று

---

கொண்டு வெளியிட்டான். '**க₃ச்ச₂தா மாதுலகுலம் ப₄ரதேந தத₃ா அநக₄: ஶத்ருக்₄நோ நித்யஶத்ருக்₄ந: நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:** (ரா.அயோ.1-1) - (பாவம் அற்றவவனும், நித்யஶத்ருவான இந்திரியங் களை ஜயித்தவனும், அன்பினால் தூண்டப் பட்டவனுமான ஶத்ருக்னன் மாமன் வீட்டிற்குச் செல்லும் பரதனால் அழைத்துச் செல்லப்பட்டான்.) என்று கூறியுள்ளபடி பாரதந்த்ரியத்தின் எல்லையை ஶத்ருக்னனைக் கொண்டு வெளியிட்டான். கண்ணனாக வந்தவதரித்து, தூதுசெல்லுதல், தேரோட்டுதல் போன்ற கீழ்மையான தொழில்களைச் செய்து தன்னுடைய எளிமையை வெளிப்படுத்தினான். '**யத்₃யத₃ாசரதி ஶ்ரேஷ்ட₂: தத்த₃தேவ இதரோ ஜந: ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் தத₃நுவர்த்ததே**' (கீதை 3-21) - (ஞானியானவன் எந்தெந்த கர்மங்களைச் செய்கிறானோ அந்தந்த கர்மங்களையே ஞானமற்ற மற்ற மனிதனும் செய்கிறான். அந்த ஞானி கர்மங்களை எந்த அளவாகச்செய்கிறானோ, உலகமும் அதையே பின்பற்றுகிறது) என்று சிறந்தவர்களுடைய செயல்கள் பின்பற்றப்படவேண்டும் என்று உபதேசித்தருளினான். இப்படிப் பலவிடங்களில்

உபதே₃ஶித்தருளியும், இப்படி ப₃ஹு ப்ரகாரத்தாலே ஆத்மாக்களுடைய பாரதந்த்ர்யத்தை ப்ரகாஶிப்பித்தருளின விடத்திலும் பெரியவன் தாழநின்று ஆசரித்த இம்மஹாகு₃ணத்திலே அவஜாநந்தி மாம் மூடா: (அவஜாநந்தி மாம் மூடா₄:) என்கிறபடியே அநீஶ்வரத்வமாகிற தோ₃ஷத்தை ஆவிஷ்கரித்து காற்கடை கொள்ளுகையாலே அவையும்

---

ஜீவாத்மாக்ளுடைய அடிமைத் தன்மையை வெளியிட்டருளினான். அறப்பெரியவனான ஸர்வேஶ்வரன் தானே மனிதனாகப் பிறந்து, பெரியோர் சொற்படிகேட்டல், தூதுசெல்லுதல் போன்ற செயல்களைத் தாழநின்று கடைபிடித்த போதும் அதனை சேதநர்கள் அறிந்து கொள்ள வில்லை. **'அவஜாநந்தி மாம் மூட₄ா: மாநுஷீம் தநுமாஶ்ரிதம் பரம்ப₄ாவமஜாநந்தோ மம பூ₄த மஹேஶ்வரம்** (கீதை 9- ) (பூதங்களுக்கு மேலான ஈஶ்வரனும், மானிட வடிவத்தை எடுத்துக் கொண்டிருப்பவனுமான என்னுடைய மேன்மையை அறியாத மூடர்கள் என்னை அவமதிக்கிறார்கள்) என்று அவனே கூறியுள்ளபடி, அவனுடைய செயல்களை உள்ளபடி அறிந்து கொள்ளாமல், இப்படித் தாழ நிற்பவன் ஈஶ்வரனாக இருக்கமுடியாது என்று குற்றம் கண்டுபிடித்து அவனை அலட்சியம் செய்துவிட்டனர். எனவே எம்பெருமானுடைய அந்தச் செயலும் (அதாவது அவதாரங்களும்) பயன்படாமலே போயிற்று. அப்படியும் சேதநர்களை விட்டுவிட அவனுக்கு மனமில்லை. நாம் இவர்களைக் காட்டிலும் வேறுபட்டவன் ஆகையால் நம்மால் இவர்களைத்

கார்யகரமாய்த்தில்லை. இனி நாம் பார்வை வைத்து ம்ருக$_3$ம் பிடிப்பாரைப்போலே ஸஜாதீய முகத்தாலே சேதநரை வஶீகரிக்கவேணும் என்று பார்த்தருளி, பெரியாழ்வாரை அவதரிப்பித்தருளினான்.

இவ்வாழ்வார் ஸஹஜதா$_3$ஸ்யத்தையுடையவர் ஆகையாலே ப$_4$க$_3$வத்$_3$விஷயத்திலே கிஞ்சித்கரித்து காலக்ஷேபம் பண்ணவேணும் என்று பார்த்தருளி அது செய்யுமிடத்தில் அவனுகந்த அடிமையே கர்த்தவ்யம் என்றநுஸந்தி$_4$த்து அவதாரங்களை ஆராய்ந்து பார்த்த விடத்தில், கம்ஸனுக்குப் பணிசெய்து போந்த மாலாகாரர்

---

திருத்தமுடியாது. ஏற்கனவே பழக்கி வைத்த மிருகங்களைக் கொண்டே மற்ற மிருகங்களைப் பிடிப்பதுபோல், இவர்களைப் போன்றவர்களைக் கொண்டே இவர்களைத் திருத்த வேண்டும் என்று கருதிப் பெரியாழ்வாரை அவதரிப்பித்தருளினான்.

இவ்வாழ்வார் இயற்கையாவே அடிமைத் தன்மையை உடையவர் ஆதலால், எம்பெருமானுக்குச் சிறந்த தொண்டு செய்து காலத்தைக் கழிக்கவேண்டும் என்று எண்ணினார். அவ்வாறு செய்யும்போது அவனுக்கு மிக விருப்பமான தொண்டையே செய்ய வேண்டும் என்று எண்ணி, அவனுடைய அவதாரங்களில் அப்படித்தொண்டு செய்தவர்களைப் பற்றி ஆராய்ந்தார். அவ்வாறு ஆராயும்போது, கம்ஸனுக்கு தினந்தோறும் பூமாலை கட்டிக் கொடுத்து வந்த மாலாகாரரைப் பற்றி எண்ணினார். வில்விழாவிற்காகக் கம்ஸனால் அழைக்கப் பட்டு மதுராநகரம் எழுந்தருளிய கண்ணபிரான் தானே

க்₃ருஹத்திலே எழுந்தருளிப் பூவை இரந்து, அவன்தான், प्रसादपरमौ नाथौ मम गेहमुपागतौ। धन्योऽहमर्चयिष्यामि माल्योपजीवनः॥ (ப்ரஸாத₃பரமௌநாதௌ₂ மம கே₃ஹமுபாக₃தௌ, த₄ந்யோஹம் அர்ச்சயிஷ்யாமி மால்யோபஜீவநः) என்று உகந்து சூட்டச் சூடினபடியை அநுஸந்தி₃க்கையாலே இவ்விஷயத்துக்குப் பூவிடுகையொழிய வேறு கர்த்தவ்யம் இல்லை நமக்கு என்று திருநந்தவனம் செய்கையிலே உத்யோகித்தார் ஒருவரிறே!

இன்னமும் மற்றைய ஆழ்வார்களிற்காட்டில் இவர்க்கு நெடுவாசியுண்டு. அவர்கள் தங்தாமுடைய

---

மாலாகாரருடைய குடிசைக்கு எழுந்தருளிப் பூவைக் கேட்க, அவரும் கம்ஸனுக்குக் கட்டிவைத்த மாலையை கண்ணனுக்கு ஸமர்ப்பித்தார். **'ப்ரஸாத₃ பரமௌ நாதௌ₂ மம கே₃ஹமுபாக₃தௌ த₄ந்யோஹம் அர்ச்சயிஷ்யாமி இத்யாஹ மால்யோபஜீவந:'** (வி.பு. 5-19-21) (மேலான அருளையுடையவர்களும், ஸ்வாமியாயிருப்பவர்களுமான இந்த கிருஷ்ண பலராமர்கள் என்னுடைய வீட்டிற்கு வந்திருக்கிறார்கள்; நான் தந்யனானேன்; அவர்களைப் பூசிக்கிறேன்) என்று மாலாகாரர் தாமே உகந்து சூட்டினபடியை நினைத்தார். எந்தப் பயனையும் கருதாமல் மாலாகாரர் செய்த கைங்கர்யத்தைப் போலவே, பயன் கருதாமல் எம்பெருமானுக்குப் பூமாலை கட்டி ஸமர்ப்பிப்பதைத் தவிர வேறு சிறந்த தொண்டு இல்லை என்று முடிவு செய்து, ஒரு திருநந்தவனம் அமைத்து, எம்பெருமா னுக்குப் பூமாலை தொடுத்து ஸமர்ப்பித்து வந்தார்.

ஸம்ருத்$_3$தி$_4$களை எம்பெருமானாலே பெற நினைத்திருப்பர்கள். இவர் தம்மை அழியமாறிவரும் ப$_4$க$_3$வத் ஸம்ருத்$_3$தி$_4$யையே தமக்குப் புருஷார்த்த$_2$மாக நினைத்திருப்பர். அவர்கள் ஈஶ்வரனைக் கடகாகப் பற்றி தந்தாமுடைய ப$_3$யநிவ்ருத்தியைப் பண்ணா நிற்பர்கள். இவர் தாம் கடகாக நின்று 'அவனுக்கு என் வருகிறதோ?' என்று ப$_3$யப்பட்டு அந்த ப$_3$யநிவ்ருத்தியிலே யத்நம் பண்ணாநிற்பர். இப்படி மற்றை ஆழ்வார்களிற் காட்டில் இவர்க்குண்டான நெடுவாசிபோலே மற்றைப்

---

மேலும் மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் பெரியாழ்வாருக்கு ஒரு சிறப்பு உண்டு. மற்ற ஆழ்வார்கள் தங்களுடைய நன்மைகளை எம்பெருமானிடமிருந்து பெற நினைத்தனர். ஆனால் பெரியாழ்வார் தம்மை அழியமாறி, அதாவது, எம்பெருமானால் காப்பாற்றப்படுபவர் தாம் என்கிற தம்முடைய தன்மைமையை அழித்துக்கொண்டும், எம்பெருமானைக் காப்பவராகத் தம்மைக் கருதிக்கொண்டும் எம்பெருமாடைய நன்மையையே தமக்குப் பயனாக விரும்பினார். மற்ற ஆழ்வார்கள், எம்பெருமானைக் காப்பவனாகவும், தங்களைக் காக்கப்படுபவர்களாகவும் கொண்டு தங்களுடைய பயங்களைப் போக்கிக்கொள்வார்கள். ஆனால் பெரியாழ்வாரோ எம்பெருமானையும் காப்பவராகத் தம்மைக் கருதிக் கொண்டு அவனுக்கு யாரால் என்ன தீங்கு வந்துவிடுமோ என்று பயப்பட்டு அந்த பயத்தைப் போக்கிக் கொள்ள முயற்சி செய்வர். இவ்வாறு மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் பெரியாழ்வாருக்கு உள்ள வேறுபாடுபோலவே மற்ற

ப்ரப₃ந்த₄ங்களிற்காட்டில் திருப்பல்லாண்டிற்கு நெடுவாசி உண்டு.

வேத₃மென்ன, தத் உபப்₃ரஹ்மணமான இதிஹாஸ புராணங்களென்ன, இவைபோலே அதி₄க்ருதாதி₄காரமாயிராது. ஸர்வாதி₄காரமான திருவாய்மொழியில் உண்டான அருமையும் இதுக்கில்லை. “அரி அயன் அரனென்னும் இவரை - ஒன்ற நும் மனத்துவைத்து” என்றும், “முனியே நான்முகனே முக்கண்ணப்பா” என்றும் உபக்ரமம் தொடங்கி உபஸம்ஹாரத்தளவும் செல்ல த்ரிமூர்த்தி ஸாம்யத்தை அருளிச்செய்கையாலே मध्येविरिञ्चगिरिशं प्रथमावतार: (மத்₄யே விரிஞ்ச கி₃ரிஶம் ப்ரத₂மாவதார:) என்று

---

பிரபந்தங்களைக் காட்டிலும் திருப்பல்லாண்டுக்கு மிகுந்த வேறுபாடு உண்டு.

வேதங்கள், அதன் துணைநூல்களான இதிகாச புராணங்கள் முதலியவை போல சிலர்க்குமட்டுமே கற்கக் கூடியது அல்ல திருப்பல்லாண்டு. எல்லோரும் கற்கக் கூடிய திருவாய்மொழிக்கு உண்டான அருமையும் (எளிமையற்றதன்மையும்) இதற்கு இல்லை. திருவாய்மொழியில் "அரி அயன் என்னுமிவரை" (1-3-6) "ஒன்ற நும் மனத்துவைத்து' (1-3-7) என்றும், "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" (10-10-1) என்றும் தொடக்கம் முதல் முடிவு வரை (திருமால் பிரமன் சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் சமம் என்பதுபோல்) அருளிச் செய்துள்ளார் நம்மாழ்வார். ''**மத்₄யே விரிஞ்ச கி₃ரிஶம் ப்ரத₂மாவதார: தத் ஸாம்யதஸ் ஸ்த₂க₃யிதும் தவசேத் ஸ்வரூபம் கிம் தே பரத்வ பிஶுநைரிஹ ரங்க₃தா₄மந் ஸத்வப்ரவர்த்தந**

ரகு$_4$குல ஸஜாதீயனாயும் யது$_3$குல ஸஜாதீயனாயும் அவதரித்தாப் போலே ப்$_3$ரஹ்மருத்$_3$ரர்கள் நடுவே வந்தவதரிக்கையாலே வந்த ஸாம்யம் என்று நிர்வஹிக்கவேண்டும் அருமையாதல், "நீராய் நிலனாய்" என்று தொடங்கி "சிவனாய் அயனானாய்" என்று

---

க்ருபாபரிபாலநாத்$_3$யை:' (ஸ்ரீரங்கராஜஸ்தவம் 2-51)(ஸ்ரீரங்கநாதரே! பிரமன் சிவன் இவர்கள் நடுவில் உமக்கு ஏற்பட்ட முதல் அவதாரம், அவ்விருவருடன் தேவரீர் ஒன்றாக இருப்பதைக் காட்டி உம்முடைய தன்மையை மறைத்துக்கொள்வதற்காகவே என்றால், ஸத்வ குணத்தைக் கொண்டிருப்பது, அருளினால் பிரமன் சிவன் இவர்களைக் காப்பது முதலிய மேன்மையைக் காட்டும் செயல்களால் உமக்கு என்ன பயன்?) என்று கூறியுள்ளபடி பிரமன் சிவன் இவர்களிடையே அவர்களுக்குச் சமமாக முதன் முதலில் திருமால் எடுத்த அவதாரத்தையே ஆழ்வார் இப்படிக் கூறுகிறார் ரகுகுலத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சமமாக ராமனாக அவதரித்தது போலவும், யதுகுலத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சமமாகக் கண்ணனாக அவதரித்தது போலவும் பிரமன் சிவன் இவர்களிடையே அவர்களுக்குச் சமமாக அவதரித்ததனால் உண்டான ஒப்புமையையே ஆழ்வார் அருளிச் செய்கிறார் என்று மிகவும் சிரமப்பட்டுப் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் விளக்கம் கூறவேண்டியுள்ளது. அல்லது, "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்" (6-9-1) என்று தொடங்கி "சிவனாய் அயனானாய்" என்று நம்மாழ்வார் எம்பெருமானை

சேதநாசேதநவாசி ஶப்த$_3$ங்களோலே ஸமாநாதி$_4$கரிக்கையாலே, ஸாமாநாதி$_4$கரண்யத்துக்கு நிப$_3$ந்த$_4$நம் ஈஶ்வரனோடு சேதநாசேதநங்களுக்குண்டான ப்ருத$_2$க்ஸ்தி$_2$த்யுபலப்$_3$தி$_4$ இல்லாத ஸம்ப$_4$ந்த$_4$மென்றே நிர்வஹிக்கவேண்டும் அருமையாதல் இல்லை இப்ரப$_3$ந்த$_4$த்துக்கு. இன்னமும் மஹாபா$_4$ரதம் போலே பெரும் பரப்பாய், இன்னது சொல்லிற்று என்று நிர்ணயிக்க வொண்ணாதாயிருக்கும் குறையும் இன்றிக்கே, ப்ரணவம் போலே ஶப்த$_3$ம் அத்யல்பமாய் ஸகல வேதா$_3$ர்த்த$_2$மும் அதுக்குள்ளே

---

சேதந(அறிவுள்ள) பொருள்களோடும் அசேதந (அறிவற்ற) பொருள்களோடும் சேர்த்து சமமாகக் கூறியுள்ளபடியால் அவையெல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகவுள்ள எம்பெருமானை விட்டு அப்பொருள்களுக்குத் தனியிருப்போ, செயலோ கிடையாது ; எனவே எல்லாச் சொற்களாலும் சொல்லப் படுபவன் எம்பெருமானே என்கிற காரணத்தினால் அப்படி நம்மாழ்வார் அருளிச் செய்கிறார் என்று மிகமிக சிரமப்பட்டுப் புரிந்து கொள்ள வேண்டிய வகையில் விளக்கம் கூறப்படுகிறது. இவ்வாறு மிகவும் சிரமப்பட்டுப் புரிந்து கொள்ளவேண்டியிராமல், மிகவும் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளது திருப்பல்லாண்டு. மேலும் மஹாபாரதம் ஒரு லக்ஷத்து இருபத்தையாயிரம் சுலோகங்களைக் கொண்டதாய், 'அதில் கூறப் பட்டுள்ளது என்ன?' என்றே அறிந்து கொள்ள முடியாதபடி மிகவும் பெரியதாக அமைந்துள்ளது. 'ஓம்' என்கிற ப்ரணவத்தில் எல்லாப்பொருள்களும் உள்ளது

காணவேண்டி, அது தெரியாதே தேடவேண்டிவரும் அங்கக்குறையும் இன்றிக்கே, பன்னிரண்டு பாட்டாய், ஐஸ்வர்ய கைவல்யங்களை நீக்கி உத்தம புருஷார்த்த$_{2}$மான ப$_{4}$க$_{3}$வத் கைங்கர்யத்தை ஸங்க்$_{3}$ரஹமாக ப்ரதிபாதி$_{3}$க்கையாலே இதுக்கு நெடுவாசியுண்டு. இன்னமும் இப்ரப$_{3}$ந்த$_{4}$ம், தன்னை அதி$_{4}$கரித்தவன் கையிலே பரதத்த்வத்தைக் கைப்படுத்தவல்ல ஶக்தியை உடைத்தாகையாலே வந்த ஏற்றமும் உண்டு. "பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்றிறே இதுக்குப் ப$_{2}$லம்.

---

என்றாலும் எல்லாப் பொருள்களையும் அதனுள்ளே தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்படி அது மிகச் சிறிதாகவுள்ளது. இக்குறைகள் ஒன்றும் இல்லாமல், அதாவது மிகவும் விரிவாகவும் இல்லாமல், மிகவும் சுருக்கமாகவும் இல்லாமல் பன்னிரண்டு பாடல்களைக் கொண்டதாக அமைந்து உள்ளது திருப்பல்லாண்டு. மேலும் தாழ்ந்த பயன்களாகிய செல்வம், தன்னைத்தானே அநுபவித்தலாகிய கைவல்யம் முதலியவற்றை விலக்கி, எம்பெருமானுக்குத் தொண்டு செய்தல் என்கிற உயர்ந்த பயனையே நன்றாகத் தெரிவிப்பதால் திருப்பல்லாண்டிற்குத் தனிச்சிறப்பு உண்டு. அதுமட்டும் அல்லாமல் தன்னைக் கற்பவனுக்குப் பரம் பொருளான எம்பெருமானையே உரித்தாக்கும் வல்லமையை உடையது என்ற சிறப்பும் திருப்பல்லாண்டிற்கு உண்டு. 'இத் திருப் பல்லாண்டைக் கற்பவர்கள் பரமபதத்தில் எம்பெருமானைச் சூழ்ந்துகொண்டு எப்பொழுதும்

இப்ரப$_3$ந்த$_4$ம் அவதரித்தபடி என்? என்னில் ஸ்ரீவல்லப$_4$தே$_3$வன் என்கிற ராஜா தா$_4$ர்மிகனாகையாலே புரோஹிதரான செல்வ நம்பியை ‘புருஷார்த்த$_2$ நிர்ணயபூர்வகமாக அத்$_3$ருஷ்ட$_2$ஸித்$_3$தி$_4$க்கு விரகென்?’ என்ன, धर्मज्ञसमयः प्रमाणं (த$_4$ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்) என்கிற படியே வித்$_3$வான்களைத் திரட்டி வேதா$_3$ர்த்த$_2$ நிர்ணயத்தைப் பண்ண அவ்வழியாலே புருஷார்த்த$_2$ம் பெறவேணும் என்று சொல்ல, அவனும் பஹுத்$_3$ரவ்யத்தை வித்$_3$யாஶுல்கமாகக் கட்டி வித்$_3$வான்களை ஆஹ்வாநம்

---

பல்லாண்டு பாடுவர்’ என்றன்றோ பெரியாழ்வாரும் பயன் அருளிச்செய்கிறார்.

திருப்பல்லாண்டு என்கிற திவ்யப் பிரபந்தம் எப்படிப் பிறந்தது எனின்; ஸ்ரீவல்லபதேவன் என்கிற அரசன் மதுரை நகரை நன்கு ஆண்டு வந்தான். அவன் தனக்கு மிகவும் நெருங்கிய ஆலோசகராக விளங்கிய செல்வநம்பியை அழைத்து ''புருஷார்த்தத்தை அறிந்துகொண்டு மோக்ஷத்தை அடைவதற்குச் சிறந்த வழி எது?'' என்று கேட்டான். ''**த$_4$ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதா$_3$ஸ் ச**'' (ஆபஸ்தம்பஸூத்ரம்) (தர்மத்தை அறிந்தவர்களுடைய செயல்கள் முக்கியமான ப்ரமாணம், வேதங்களும் ப்ரமாணம்) என்கிறபடி அறிஞர்களுடைய செயலே பிரமாணம் ஆகையால் வித்வான்களைத் திரட்டி வேதத்தின் பொருளை நிரூபித்து அவ்வழியாலே புருஷார்த்தம் (உயர்ந்த பயன்) பெறவேண்டும்'' என்று கூறினார். அரசனும் அப்படியே மிகுதியான பொருட்களைப் பரிசாகக் கட்டி வித்வான்களை அழைத்து உண்மையான பரம்பொருள் எது? என்பதை நிரூபிக்க

பண்ணிச்செல்லுகிற அளவிலே, வடபெருங்கோயில் உடையான், ஆழ்வாரை இடுவித்து லோகத்திலே வேத$_3$தாத்பர்யத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக "நீர் போய்க் கிழியை அறுத்துக்கொண்டு வாரும்" என்று அருளிச்செய்ய, "அது வித்$_3$யாஶுல்கமாக நிர்மித்ததொன்றன்றோ? கையில் கொட்டுத் தழும்பைக் காட்டினால் கிழியை அறுக்கலாமோ?" என்ன, "அது உமக்கு ப$_4$ரமோ? நாமன்றோ வேதா$_3$ர்த்த$_2$ ப்ரதிபாத$_3$நத்துக்குக் கடவோம்" என்று ஆழ்வாரை

---

வேண்டும் என்றும், அவ்வாறு நிரூபிக்கும் வித்வானுக்கு அப் பொற்கிழி பரிசாக அளிக்கப்படும் என்றும் அறிவித்தான். அப்பொழுது வடபெருங் கோயிலுடையான், பெரியாழ்வாரைக் கொண்டு உலகத்திலே வேதத்தின் உட்பொருளை வெளியிட நினைத்தான். அதற்காக அவரிடம் ''நீர் ராஜசபைக்குச் சென்று நாமே (ஸ்ரீமந்நாராயணனே) பரம்பொருள் என்பதை நிரூபித்துப் பொற்கிழியைப் பெற்றுக் கொண்டு வாரும்'' என்று அருளிச் செய்தான். ''அது சாத்திர ஞானத்தால் வெல்லக் கூடியதல்லவா? தோட்டக் கலையைத் தவிர வேறொன்றும் அறியாத நான் பாத்தி கட்டுவதால் என் கையில் உண்டான தழும்புகளைக் காட்டிப் பொற்கிழியைப் பெற முடியுமோ?'' என்று பெரியாழ்வார் கேட்டார். ''அது உம்முடைய பொறுப்போ? நானன்றோ வேதத்தின் உட்பொருளை நிலைநாட்டக் கடமைப்பட்டவன்? உம்மைக் கொண்டு நானன்றோ பரத்வ நிர்ணயம் செய்யப் போகிறேன்; கவலை இல்லாமல் சென்று வாரும்'' என்று பெரியாழ்வாரை வற்புறுத்தினான்

நிர்ப்ப4ந்தித்தருள, ஆழ்வாரும் பாண்ட்3ய வித்3வத்3 கோ3ஷ்டி2யிலே எழுந்தருளினவளவிலே செல்வநம்பியும் ராஜாவும் அப்4யுத்த2ாநப்ரணாம பூர்வகமாக ப3ஹுமாநம் பண்ண, அத்தைக் கண்ட வித்3வான்கள் ராஜாவை அதி4க்ஷேபிக்க அவ்வளவிலே செல்வநம்பியும் ஆழ்வாரை த3ண்டனிட்டு “வேத3ாந்த தாத்பர்யமான புருஷார்த்த2த்தை அருளிச்செய்யலாகாதோ?” என்ன, ஆழ்வாரும் तत्सर्वं धर्मवीर्येण यथावत्संप्रपश्यति (தத்ஸர்வம் த4ர்மவீர்யேண யத2ாவத் ஸம்ப்ரபஶ்யதி) என்று ஶ்ரீவால்மீகிப4க3வான் ஸர்வார்த்த2ங்களையும் ஸாக்ஷாத்கரித்தாப் போலேயும்,

---

எம்பெருமான். பெரியாழ்வாரும் வித்வான்கள் பலர் கூடியுள்ள பாண்டிய அரசவையிலே எழுந்தருளிய போது செல்வ நம்பியும், அரசனும் இருக்கையிலிருந்து எழுந்திருந்து வணங்குதல் முதலான மரியாதைகளைச் செய்தனர். அதனைக் கண்ட வித்வான்கள் எதிர்த்தனர். செல்வநம்பி பெரியாழ்வாரை வணங்கி ''வேதாந்தத்தின் உட்பொருளான புருஷார்த்தத்தை அருளிச்செய்யக் கூடாதோ?” என்று வேண்டினார். **''ஹஸிதம் ப4ாஷிதம் சைவ க3திர் யா யச்ச சேஷ்டி2தம், தத்ஸர்வம் த4ர்ம வீர்யேண யத2ாவத் ஸம்ப்ரபஶ்யதி”** (ஸ்ரீரா. பால. 3-4) - (ராமன், லட்சுமணன் முதலியவர்களுடைய சிரிப்பு, பேச்சு, நடை, செய்கை இவை யெல்லாவற்றையும் வால்மீகியானவர் தர்மமாகிற வீர்யத்தினால் உள்ளபடி பார்க்கிறார்) என்று கூறியுள்ளபடி ஸ்ரீ வால்மீகிபகவான் ஸ்ரீராமனுடைய சரிதம் முழுவதையும் பிரமனுடைய அருளால் அறிந்து

ஸ்ரீபாஞ்சஜந்ய ஸ்பர்ஶத்தாலே த்₄ருவன் ஸர்வஜ்ஞனானாப் போலேயும் ப₄க₃வத் ப்ரஸாத₃த்தாலே ஸகல வேதா₃ர்த்தங்களையும் ஸாக்ஷாத்கரித்து வேதா₃ந்த தாத்பர்யமான அர்த்த₂த்தை ப்ரதிபாதி₃த்தருள, அதி₄க்ஷேபித்த வித்₃வான்களோடு அநுவர்த்தித்த ராஜாவோடு வாசியற ஸர்வரும் விஸ்மிதராய், அநந்தரம் இவரை ஆனையிலே ஏற்றி, ராஜா ஸபரிகரனாய் ஸேவித்துக் கொண்டு நக₃ரி வலம் வருகிற மஹோத்ஸவத்தைக் காண்கைக்காக, புத்ரர்களை ப்₃ரஹ்மரத₂ம் பண்ணும் ஸமயத்திலே மாதாபிதாக்கள் காண ஆத₃ரித்து வருமா போலே பிராட்டியோடே கூட

---

கொண்டது போலவும், எம்பெருமானுடைய சங்கான ஸ்ரீபாஞ்சஜந்யம் பட்டவுடன் துருவன் எல்லாமறிந்தவன் ஆனது போலவும், ஆழ்வாரும் எம்பெருமானுடைய அருளால் வேதங்களனைத்தின் பொருள்களையும் அறிந்து கொண்டு, வேதாந்தத்தின் உட்பொருளை வெளியிட்டார். இதைக் கண்ட எதிர்ப்புக் கூறிய வித்வான்களும், அவரை கௌரவித்த அரசனும், மற்றும் அங்கு கூடியிருந்த அனைவரும் மிகவும் வியப்புற்றனர். பின்பு, அரசனும் பெரியாழ்வாரை யானையிலே ஏற்றி, தன் பரிவாரங்களுடன் சேவித்துக் கொண்டு வீதிகளிலே வலம் வரச் செய்து கௌரவித்தான். தங்களுடைய மகன் பிரம்மரதத்தில் (பல்லக்கில்) ஊர்வலம் வரும்பொழுது தாய் தந்தையர் மகிழ்ச்சியுடன் காண வருவது போல, எம்பெருமானும் பிராட்டியுடன் கூட வந்து பெரியாழ்வாருக்கு ஏற்பட்ட சிறப்பைக் காண ஆகாயத்திலே தன் பரிவாரங்களோடு வந்து

ஸபரிகரனாய் ஈஸ்வரன் ஸந்நிஹிதனாக தத்பரிகரபூ$_4$தரான ப்$_3$ரஹ்மாதி$_3$ தே$_3$வதைகளும் ஆகாஸத்திலே நெருங்கி நிற்கிற இத்தை ஸாக்ஷாத்கரித்த ஆழ்வார் ஸ்வஸம்ருத்$_3$தி$_4$யைக் கண்டு இறுமாவாதே, ப$_4$க$_3$வத் ப்ரஸாத$_3$த்தாலே நிரவதி$_4$க ப$_4$க்தியைப் பெற்று, அவனுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஸக்தித்வ ஸர்வ ரக்ஷகத்வாதி$_3$களை அநுஸந்தி$_3$ப்பதற்கு முன்னே முகப்பில் உண்டான ஸௌந்த$_3$ர்ய ஸௌகுமார்யங்களைக் கண்டு 'காலாதீ$_3$தமான தே$_3$ஸத்திலே இருக்கிற வஸ்து காலம் ஸாம்ராஜ்யம் பண்ணுகிற தே$_3$ஸத்திலே சக்ஷுர் விஷய மாவதே! இவ்வஸ்துவுக்கு என்ன தீங்கு வருகிறதோ?'

---

நின்றான். அவனுடைய பரிவாரங்களில் பிரமன் முதலான தேவதைகளும் ஆகாயத்திலே நெருக்கிக் கொண்டு நின்றார்கள். இதைக் கண்ட பெரியாழ்வார், தமக்கு ஏற்பட்டுள்ள பெருமை களினால் தற்பெருமை கொள்ளாமல், எம்பெருமா னுடைய அருளாலே அளவற்ற பக்தியை உடையவராக ஆனார். அதனால், எம்பெருமான் எல்லாம் அறிபவன், எல்லாம் வல்லவன், எல்லோரையும் காப்பாற்றுபவன் என்கின்ற அவன் தன்மைகளைத் தம் மனத்தில் எண்ணுவதற்கு முன்னே, கண் முன் தோன்றிய அவனுடைய அழகு, மென்மை முதலியவைகளையே கண்டார். 'காலம் ஆட்சி செய்யாத பரமபதத்திலே இருப்பவன் இப்படிக் காலத்தின் கட்டுப்பாடுள்ள பூமியிலே வந்து கண்முன்னே தோன்றுகின்றானே! இந்த எம்பெருமானுக்கு யாரால் என்ன தீங்கு வருகிறதோ?' என்று பயப்பட்டு, யானை மேலே

என்னும் அதிஶங்கையாலே, ஆனை மேலே கிடந்த மணிகளைத் தாளமாகக் கொண்டு 'இந்த ஸௌந்த₃ர்ய ஸௌகுமார்யங்களுக்குத் தீங்கு வாராதே நித்யமாய்ச் செல்ல வேணும்' என்று திருப்பல்லாண்டு பாடுகிறார்.

அவாப்தஸமஸ்தகாமனாகையாலே ஒன்றாலொரு குறையின்றிக்கே ஸர்வ நியந்தாவுமான ஈஶ்வரனைக் கண்டால் தம்முடைய மங்க₃ளங்களை அவன் பக்கலிலே ப்ரார்த்தி₂க்கப் ப்ராப்தமாயிருக்க, தாம் அவனுக்கு மங்க₃ளங்களை ஆஶாஸிக்கை அஸங்க₃தமன்றோ என்னில், முகப்பிலே சக்ஷுர்விஷயமான ஸௌந்த₃ர்யாதி₃களிலே ப₄க₃வத் ப்ரஸாத₃லப்₃த₃மான ப₄க்தி பரவஶராய்க் கொண்டு அழுந்தி, அவனுடைய

---

கிடந்த மணிகளையே தாளமாகக் கொண்டு, 'எம்பெருமானுடைய இந்த அழகு, மென்மை இவைகளுக்கு எந்தத் தீங்கும் வாராமல் எப்பொழுதும் மங்களமாய் இருக்க வேண்டும்' என்று திருப்பல்லாண்டு பாடுகிறார்.

எல்லா ஆசைகளையும் அடைந்தவனாகவும், எந்த ஒரு குறைவுமில்லாதவனாகவும், எல்லோருக்கும் கட்டளையிடுபவனாகவும் உள்ள எம்பெருமானைக் கண்டால் தம்முடைய மங்களங்களை (நன்மைகளை) அவனிடம் வேண்டிக் கொள்ள வேண்டியிருக்க எம்பெருமானுக்கு மங்களங்களைத் தாம் வேண்டுதல் பொருந்தாதன்றோ? என்னில், எம்பெருமானுடைய அருளால் கிடைக்கப் பெற்ற பக்தியால் கண்முன்னே தோன்றிய அழகிலே அழுந்தி, அவன் எல்லோரையும் காப்பாற்ற வல்லவன், எல்லாம்

ஸர்வரக்ஷகத்வ ஸர்வஶக்தித்வத்தையும் ஸ்வஸம்ருத்$_3$தி$_4$யையும் மறக்கையாலே ப$_4$க$_3$வத் ஸம்ருத்$_3$தி$_4$யே தமக்கு ஸம்ருத்$_3$தி$_4$யாகக் கொண்டு மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகை ஸங்க$_3$தம்.

ப$_4$க$_3$வத் ப்ரேமந்தான் தத்ப்ராப்திக்கு ஹேதுவாதல், தத$_3$நுப$_4$வத்துக்குப் பரிகரமாதலொழிய அறிவுகேட்டைப் பண்ணும் என்னுமிடத்தில் ப்ரமாணமென்? என்னில் அது ஶிஷ்டா$_2$சாரஸித்$_3$த$_4$ம். स्त्रियो वृद्धास्तरुण्यश्च सायं प्रातस्समाहिता:। सर्वान् देवान् नमस्यन्ति रामस्याऽर्थे यशस्विन:॥ (ஸ்த்ரியோ வ்ருத்$_3$தா$_4$ஸ் தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந் தே$_3$வாந் நமஸ்யந்தி ராமஸ்யார்தே$_2$

---

வல்லவன் என்பவற்றை மறந்தார். எம்பெருமானுடைய மங்களத்தையே தம்முடைய மங்களமாகக் கொண்டு அவனுக்கு மங்களாசாஸநம் செய்தப்படியால் இது பொருந்தும்.

எம்பெருமான்மீது கொண்ட அன்புதான், அவனை அடைவதற்குக் காரணமாகும், அல்லது அவனை அநுபவிப்பதற்கு துணை செய்யும். அப்படியல்லாமல் அறிவுக்கேட்டை விளைவிக்கும் என்பதற்கு ஆதா$_4$ரம் உண்டோ என்னில், ஏற்கனவே பலரிடத்தில் இப்படிப் பட்ட நிலை காணப் பட்டிருக்கிறது. உதாரணமாக **ஸ்த்ரியோ வ்ருத்$_3$தா$_4$ஸ் தருண்யஶ் ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந் தே$_3$வாந் நமஸ்யந்தி ராமஸ்யார்தே$_2$ யஶஸ்விந:** (ரா.அயோ 2-52) (புகழ் உடையவர்களான பெண்களும், கிழவர்களும், யுவதிகளும், காலையும் மாலையும் கூடியிருந்து ராமனுக்காக எல்லா தேவர்களையும் வணங்கு

யஶஸ்விந:) என்று, தி₃வா ராத்ர விப₄ாக₃மற, தே₃வதைகளை ரக்ஷித்துப் புகழ் படைத்துப் போந்த சக்ரவர்த்தி திருமகனுடைய ஸௌந்த₃ர்யாதி₃ கு₃ணங்களுக்கு ரக்ஷகமாக, அயோத்₄யாவாஸி ஜநங்கள், பெருமாளால் தங்களுக்கு வரும் ஸம்ருத்₃தி₄யை மறந்து, தே₃வதைகள் காலிலே விழுந்தார்களிறே. பிராட்டியைத் திருமணம் புணர்ந்து மீண்டெழுந்தருளா நிற்க, ஸ்ரீ பரஶுராமாழ்வான் வந்து தோன்றினவளவிலே, தாடகா தாடகேயருடைய நிரஸநங்களைக் கேட்டிருக்கச் செய்தேயும் அஞ்சி, क्षत्ररोषात्प्रशान्तस्त्वं ब्राह्मणश्च महायशाः। बालानां मम पुत्राणां अभयं दातुमर्हसि ॥ (க்ஷத்ரரோஷாத் ப்ரஶாந்தஸ்த்வம்

---

கிறார்கள்) என்று கூறியுள்ளபடி, தனக்குக் கீழ்ப்பட்ட தேவதைகளைக் காப்பாற்றிப் புகழ் படைத்த ராமபிரானுடைய மென்மை, அழகு போன்ற குணங்களுக்கு பாதுகாப்பாக, அயோத்தி நகர மக்கள் ராமனால் தங்களுக்கு வரும் நன்மைகளை மறந்து, அவனால் காப்பாற்றப் பட்ட இதர தேவதைகளின் கால்களிலேயே, இரவு பகல் என்று பாராமல் விழுந்து, அவனுக்கு நன்மைகளை வேண்டினரன்றோ! ஸ்ரீராமபிரான் சீதாப் பிராட்டியைத் திருமணம் புரிந்து கொண்டு அயோத்தி நகருக்குத் திரும்பி வரும் வழியில் ஸ்ரீராமபிரானைப் பரசுராமன் எதிரிட்டு வந்தபோது தசரத சக்ரவர்த்தி ஸ்ரீராமபிரானுடைய வீரத்தை அறிந்திருந்தும் - அதாவது தாடகை, சுபாஹு இவர்களை சிறிய வயதிலேயே அவன் அழித்ததைக் கேட்டிருந்தும் பரசுராமனிடம் அச்சம் கொண்டு **'க்ஷத்ரரோஷாத் ப்ரஶாந்தஸ்த்வம் ப்₃ராஹ்மணஶ் ச மஹாயஶா:**

ப்ராஹ்மணஶ்ச மஹாயஶா: பா₃லாநாம் மம புத்ராணாம் அப₄யம் தா₃துமர்ஹஸி) என்று ஶரணம் புக்கு அவன் தோற்று மீண்டு போனான் என்று கேட்ட பின்பு पुनर्जातं तदा मेने सुतानामात्मानमेव च (புநர்ஜாதம் ததா₃ மேநே ஸுதாநாமாத்மாநமேவ ச) என்கிறபடியே, தானும் தன் பிள்ளைகளும் மறுபிறவி பிறந்ததாக நினைத்திருந்தானிறே சக்ரவர்த்தியும். ஸ்ரீகௌஸலையாரும் यन्मङ्गलं सुपर्णस्य विनताऽकल्पयत्पुरा। अमृतं प्रार्थयानस्य तत्ते भवतु मङ्गलम्॥

---

**பா₃லாநாம் மம புத்ராணாம் அப₄யம் தா₄துமர்ஹஸி** (ரா. பா. 75-6) (பெரும்புகழை உடைய அந்தணரான நீர் க்ஷத்திரிய ஸ்வபாவமான கோபத்திலிருந்து சாந்தி அடைந்தவராய், சிறுவர்களான எனது பிள்ளைகளுக்கு அபயமளிக்க வேண்டும்) என்று ஶரணம் புகுந்து, மயக்கமுற்று கீழே விழுந்த தசரத சக்ரவர்த்தி "பரசுராமன் தோற்றுப் போனான்" என்று கேட்ட பின்பு, "**க₃தோ ராம இதி ஶ்ருத்வா ஹ்ருஷ்ட: ப்ரமுதி₃தோ ந்ருப:, புநர் ஜாதம் ததா₃ மேநே ஸுதாநாமாத்மாநமேவ ச** (ரா.பா. 77-5) ('பரசுராமன் போயினன்' என்று கேட்டு உகந்து மகிழ்ந்த தசரத சக்ரவர்த்தி, அப்போது தன்னையும் பிள்ளைகளையும் மறுபடி பிறந்ததாக எண்ணினான்) என்று கூறியுள்ளபடி, தானும் தன்பிள்ளைகளும் பரசுராமனிடமிருந்து தப்பி மறுபிறவி பிறந்ததாகவே எண்ணினான். கௌஸல்யையும் ராமன் விஶ்வாமித்ரருடைய யாகத்தைக் காப்பாற்றிய வீரன் என்பதை மறந்து, **'யந்மங்க₃ளம் ஸுபர்ணஸ்ய விநதா அகல்பயத் புரா, அம்ருதம் ப்ரார்த்த₂யாநஸ்ய தத்தே பவது**

(யங்மங்க$_3$ளம் ஸுபர்ணஸ்ய விநதாகல்பயத் புரா, அம்ருதம் ப்ரார்த$_2$யாநஸ்ய தத்தே ப$_4$வது மங்க$_3$ளம்) என்று, விஶ்வாமித்ர அத்$_4$வரத்ராணாதி$_3$களால் வந்த ஆண்பிள்ளைத்தனத்தை விஸ்மரித்து மங்க$_3$ளாஶாஸநம் பண்ணினாளிறே. ஸ்ரீத$_3$ண்ட$_3$காரண்ய வாஸிகளான ருஷிகளும் ते तं सोममिवोद्यन्तं दृष्ट्वा वै धर्मचारिणः। मङ्गलानि प्रयुञ्जानाः प्रत्यगृह्णन् दृढव्रताः॥ (தே தம் ஸோமமிவோத்$_3$யந்தம் த்$_3$ருஷ்ட்வா வை த$_4$ர்மசாரிண: மங்க$_3$ளாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்$_3$ருஹ்ணந் த்$_3$ருட$_3$வ்ரதா:) என்று தங்கள்

---

**மங்களம்'** (ரா.அ. 25-33) (முன்பு அம்ருதத்தைத் தேடும் கருடனுக்கு அவனுடைய தாயான விநதை யாதொரு மங்களத்தை வேண்டினாளோ அந்த மங்களம் உனக்கும் உண்டாகட்டும்) என்று மங்களாசாஸனம் செய்தாள். ஸ்ரீதண்டகாரண்யத்தில் வசித்துவந்த முனிவர்கள், தங்களுடைய ஆபத்தைப் போக்குவதற்கும் தங்களைக் காப்பதற்கும் அவனே உரியவன் என்று அறிந்து தவம் செய்பவர்கள்; ஆயினும் அவனைக் கண்முன்னே கண்டபோது அவற்றை மறந்து, **'தே தம் ஸோமம் இவோத்$_3$யந்தம் த்$_3$ருஷ்ட்வா வை த$_4$ர்மசாரிண:, மங்க$_3$ளாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்$_3$ருஹ்ணந் த்$_3$ருட$_3$வ்ரதா:'** (ரா.ஆ. 1-11) (தருமமுறை தவறாது நடப்பவர்களும், உறுதியான விரதத்தை உடையவர்களுமான அந்த முனிவர்கள், உதிக்கும் சந்திரனைப்போன்ற அந்த ராமபிரானைப் பார்த்து மங்களாஶாஸநம் செய்யத் தொடங்கினார்கள்) என்று கூறியுள்ளபடி, அவனுடைய வடிவழகில் மெய்மறந்து, மங்களாஶாஸநம் செய்துள்ளனர்.

ஆபந்நிவ்ருத்திக்கும் அபி4மதஸித்3தி4க்கும் இவரே ரக்ஷகர் என்று ஸாத3நாநுஷ்டா2நம் பண்ணுகிறவர்கள், இவர் ஸந்நிஹிதரானவாறே அவற்றை மறந்து, இவர் வடிவழகிலே துவக்குண்டு, மங்க3ளாஶாஸநம் பண்ணினார்களிறே. கர்மஸ்பர்ஶமின்றிக்கே தலைநீர்ப் பாட்டிலே இவர் ஏற்றமெல்லாம் அறியும் பிராட்டி, இவர் அழகிலே தோற்று, पतिसम्मानिता सीता भर्तारमसितेक्षणा। आद्वारमनुवव्राज मङ्गलान्यभि दध्युषी॥ (பதிஸம்மாநிதா ஸீதா ப4ர்த்தாரம் அஸிதேக்ஷணா ஆத்3வாரம் அநுவவ்ராஜ மங்க3ளாநி அபித3த்4யுஷீ) என்று தொடங்கி,

---

வினைப்பயன் சிறிதும் இல்லாதவளும், இராமனுக்கு மிக அருகிலே இருப்பவளாதலால் அவன் பெருமைகளையெல்லாம் நன்கு அறிந்தவளுமான சீதைப்பிராட்டி, இராமனுடைய அழகில் மயங்கி, **'பதிஸம்மாநிதா ஸீதா ப4ர்தாரம் அஸிதேக்ஷணா, ஆத்3வாரம் அநுவவ்ராஜ மங்க3ளாந்யபி4த3த்4யுஷீ'** (ரா.அ. 16-21) (கணவனான இராமனால் கௌரவிக்கப் பட்டவளும், கரிய கண்களை உடையவளுமான சீதை, மங்களாஶாஸனம் செய்துகொண்டு கணவனை வாயில்வரை பின் தொடர்ந்தாள்) என்று கூறியுள்ளபடி அவனைப் பின் தொடர்ந்து, **'பூர்வாம் தி3ஶம் வஜ்ரத4ர: த3க்ஷிணாம் பாது தே யம:, வருண: பஶ்சிமாமாஶாம் த4நேஶஸ்து உத்தராம் தி3ஶம்'** (ரா.அ. 16-24) (உம்முடைய கிழக்கு திக்கில் இந்திரனும், தெற்கில் யமனும், மேற்கில் வருணனும், வடக்கில் குபேரனும் காப்பாற்றட்டும்) என்று கூறி (இவனால் காப்பாற்றப்படுகின்ற) திக்

पूर्वां दिशं वज्रधरः (பூர்வாம் தி₃ஶம் வஜ்ரத₄ர:) என்று தி₃க்பாலகர்களை இவர்க்கு ரக்ஷகராக அபேக்ஷித்தாளிறே.

இன்னமும் जातोऽसि देवदेवेश शङ्खचक्रगदाधर। दिव्यरूपमिदं देव प्रसादेनोपसंहर॥ (ஜாதோஸி தே₃வதே₃வேஶ ஶங்க₂சக்ர கதாதர தி₃வ்யரூபமித₃ம் தே₃வ ப்ரஸாதே₃ந உபஸம்ஹர) என்று, அயர்வறுமமரர்களதிபதி அவ்வடிவோடே வந்தவதரித்தான் என்று இவனுடைய பெருமையை அறிந்திருக்கிற த₃ஶையிலேயும் கம்ஸப₄யத்தாலே 'இவ்வடிவை உபஸம்ஹரிக்க வேணும்'

---

பாலகர்களை இவனுக்குக் காவலர்களாக இருக்கும்படி வேண்டினாள் அன்றோ!

மேலும் கண்ணபிரான் பிறக்கும்போதே சங்கு சக்கரங்களுடன் பிறக்க, அதைக் கண்ட வஸுதேவர் **'ஜாதோஸி தே₃வதே₃வேஶ ஶங்க₂சக்ரக₃த₃ாத₄ர, தி₃வ்யரூபம் இத₃ம் தே₃வ ப்ரஸாதே₃ந உபஸம்ஹர'** *(வி.பு.5-3-10)* (தேவர்களுக்கும் தேவர்களான நித்யஸூரிகளையும் ஆள்பவனே! சங்கு, சக்கரம், கதை ஆகியவைகளை தரித்தவனே! தேவனே! நீயன்றோ பிறந்திருக்கிறாய்! இந்த திவ்யரூபத்தை அருள்கூர்ந்து மறைத்துக் கொள்வாயாக!) என்றார். அயர்வறும் அமரர்களான நித்யஸூரிகள் தலைவன் அவ்வடிவோடு வந்து அவதரித்திருக்கிறான் என்று அவனுடைய பெருமையை அறிந்திருந்தும், அளவற்ற பரிவினால் அதை மறந்து, கம்ஸனால் என்ன ஆபத்து உண்டாகுமோ என்ற அச்சத்தினால் சங்கு சக்கரங்களை மறைத்துக் கொள்ள வேண்டும் என்று வேண்டினார் வஸுதேவர். அதேபோல் தேவகியும்

என்றாரிறே ஸ்ரீவஸுதேவர். उपसंहर सर्वात्मन् रूपमेतच्चतुर्भुजम्। जनातु माऽवतारन्ते कंसोऽयं दितिजन्मजः॥ (உபஸம்ஹர ஸர்வாத்மங் ரூபமேதச்சதுர்ப்பு$_4$ஜம் ஜாநாது மாவதாரம் தே கம்ஸோயம் தி$_3$தி ஜந்மஜ:) என்று, 'ஸர்வாத்மங்' என்று ஸர்வாந்தர்யாமி என்றும், 'ஏதச் சதுர்புஜம்' என்று அவனுடைய அஸாத$_4$ாரணவிக்$_3$ரஹமென்று அறிந்திருக்கச் செய்தேயும், கம்ஸப$_4$யத்தாலே 'இவ்வடிவை உபஸம்ஹரிக்க வேணும்' என்றாளிறே தேவகிப்பிராட்டியும்.

இவ்வர்த்த$_2$ம் லோகப்ரஸித்$_3$த$_4$மும்; அநேக காலம் தபஸ்ஸு பண்ணிப்பெற்று ப்ரத$_2$மஜனாய், அதிஸுந்த$_3$ரனான

---

**'உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதத் சதுர்பு$_4$ஜம், ஜநாது மாவதாரம் தே கம்ஸோயம் தி$_3$தி ஜந்மஜ:** *(வி.பு. 5-3-13) (ஸர்வாந்தர்யாமியே! நான்கு திருக்கைகளை உடைய இந்த உருவத்தை மறைத்துக் கொள்வாயாக! அசுரனான கம்ஸன் உன்னுடைய அவதாரத்தை அறிய வேண்டாம்)* என்றாள். 'ஸர்வாத்மந்' என்றதனால் ஸர்வ அந்தர்யாமி என்றும், 'ஏதத் சதுர்ப்புஜம்' என்றதனால் அவனுக்கே உரிய நான்கு கரங்களோடு கூடிய திருமேனி என்றும் அறிந்திருந்தும், கம்ஸனால் ஆபத்து உண்டாகுமோ என்றஞ்சி அவ்வடிவை மறைத்துக்கொள்ள வேண்டும் என்று வேண்டினாள் தேவகிப் பிராட்டியும்.

இது உலகத்திலும் உள்ளதொன்று. வெகு காலம் தவம் செய்து ஒருபிள்ளையைப் பெற்றெடுக்கிறாள் ஒரு தாய். மிகவும் நல்லவனாகவும் அழகானவனாகவும் இருக்கும் அவனுக்கு

புத்ரனளவிலே ஒரு விரோத$_4$மின்றிக்கே இருக்கச் செய்தேயும் செல்லாநின்றதும், வாராநின்றதும் ப்ரேமாந்த்$_3$யத்தாலே ப$_4$யஹேதுவாகக் கடவதிறே மாதாவுக்கு. தன் கைக்கு அடங்காத விற்பிடி மாணிக்கத்தைப் பெற்றவன், அது ஸுரக்ஷிதமாய் இருக்கச் செய்தேயும், 'அதுக்கு என்ன விரோதம் வருகிறதோ!' என்று காற்றசங்கிலும் பயப்படா நிற்குமிறே. அல்ப தேஜஸ்ஸுக்களான சந்த்$_3$ராதி$_3$த்யர் களுடைய ஸந்நிதி$_4$யிலே அசித்தான பாஷாணங்கள் உருகாநின்றன. परंज्योतिरुपसंपद्य "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்$_3$ய" என்றும்

---

விரோதிகள் எவரும் இல்லாமல் இருப்பினும் அவன் வெளியே சென்று சிறிது நேரம் கழித்து வந்தாலும் அவன் மீதுள்ள பாசத்தினால் அவனுக்கு என்ன ஆபத்து நேருமோ என்று மிகவும் பயப் படுகிறாள் தாய். தன் கைக்கடங்காத மாணிக்கத்தைப் பெற்றவன், அது பாதுகாப்பாக வைக்கப்பட்டு இருக்கும்போதும் அந்த மாணிக்கத்திற்கு என்ன தீங்கு வருகிறதோ? என்று காற்று அசையும் போதும் பயப்படுகிறான். அளவுபட்ட ஒளியையுடைய சந்திரன் சூரியன் போன்றவர்களுடைய கிரணங்கள் பட்டு அறிவற்ற ஜடப்பொருள்களான சந்த்ரகாந்தக்கல் போன்றவை உருகுகின்றன. **ஏஷ ஸம்ப்ரஸாதோ$_3$ஸ்மாச் சரீராத் ஸமுத்தா$_2$ய பரம்ஜ்யோதிருபஸம்பத்$_3$ய ஸ்வேந ரூபேண அபி$_4$நிஷ்பத்$_3$யதே** (சாந்தோ$_3$. 8-12-2) (இந்த ஜீவன் இந்த ஶரீரத்திலிருந்து புறப்பட்டு, பரஞ் சோதியான நாராயணனை அடைந்து ஸ்வரூபப்ராப்தி அடைகிறான்) என்றும், 'பரஞ்சோதி நீபரமாய்'

“பரஞ்சோதி நீ பரமாய்” என்றும் சொல்லுகிறபடியே நிரதிஶய ஸௌந்த$_{3}$ர்ய யுக்தனாய், நிரவதி$_{4}$க தேஜோரூபனான எம்பெருமானைக் கண்டால், பரமசேதநரான ஆழ்வார் கலங்கச் சொல்ல வேணுமோ? ஆகையாலே ராவணாதி$_{3}$ ராக்ஷஸ து$_{3}$ர்வர்க$_{3}$ மயமாய், காலம் ஸாம்ராஜ்யம் பண்ணுகிற தே$_{3}$ஶத்திலே இவ்விலக்ஷண விஷயத்தைக் கண்டருளி, ‘இவ்விஷயத்துக்கு எவ்வழியாலே தீங்கு வருகிறதோ?’ என்று ப$_{4}$யப்பட்டு, தத் பரிஹாரமாகத் திருப்பல்லாண்டு பாடுகிறார்.

ஸ்வஸ்ரூப பரஸ்வரூபங்களை உள்ளபடி அறிந்திருக்கிற இவர், ரக்ஷ்ய ரக்ஷகப$_{4}$ாவத்தை மாறாடி ப்ரதிபத்தி பண்ணுகை விபரீத ஜ்ஞானமன்றோ என்னில்,

---

(திருவாய்மொழி 3-1-3) என்றும் பரஞ்சோதியாக - அளவற்ற அழகுடையவனாகவும் அளவற்ற ஒளியுடைய வனாகவும் சொல்லப்பட்ட பகவானைக் கண்டால் மிக்க அறிவுடையவரான ஆழ்வார் கலங்கச் சொல்ல வேண்டுமோ? ஆகையால் ராவணன் முதலிய அரக்கர் கூட்டங்கள் நிறைந்ததும், காலம் ஆணை செலுத்துவது மான இவ்வுலகிலே அவனைக் கண்ட ஆழ்வார், ‘இவனுக்கு எந்த வழியால் என்ன தீங்கு வருமோ?’ என்று அச்சம் கொண்டு, அதற்குப் பரிகாரமாகத் திருப்பல்லாண்டு பாடுகிறார்.

தம்முடைய தன்மைகளையும், பகவானுடைய தன்மைகளையும் உள்ளபடி அறிந்துள்ள இவர், தாம் அவனால் காப்பாற்றப் படுபவர் என்பதையும், அவனே தம்மைக் காப்பவன் என்பதையும் மறந்து, அவனைக் காப்பவராகத் தம்மை மாறாடி நினைத்துக்

கர்மநிப$_3$ந்த$_4$நமான விபரீத ஜ்ஞானமாய்த்து த்யாஜ்யம். விஷய வைலக்ஷண்யமடியாக வந்ததாகையாலே அவ் வைலக்ஷண்யம் உள்ளவளவும் அநுவர்த்திக்கையாலே ஸ்வரூபப்ராப்தமாகக் கடவது.

இன்னமும், ஶேஷஶேஷிபா$_4$வஜ்ஞாந ஸமநந்தரம் ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூ$_4$தனுக்கு ஸ்வரூபமாகையாலே, தத் விஷயமாக மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகை சைதந்ய க்ருத்யம். அந்த ஶேஷத்வ காஷ்டை$_2$ யாவது தன்னை அழியமாறியேயாகிலும் ஸ்வாமிக்கு ஸம்ருத்$_3$தி$_4$யை ஆஶாஸிக்கையிறே. வேத$_3$ாந்த தாத்பர்யார்த்தமிறே இத்திருப்பல்லாண்டில் ப்ரதிபாதி$_3$க்கப் படுகிறது.

---

கொண்டு மங்களாஶாஸனம் செய்தது அறிவற்ற செயலன்றோ என்னில், வினைப்பயன் காரணமாக வந்த அறிவின்மை தான் விடத்தக்கதே யன்றி, பகவானுடைய பெருமை காரணமாக வந்த அறிவின்மையானது அப் பெருமை உள்ளவளவும் தொடருமாகையால் அது மிகவும் தகுதியானதே.

மேலும், அவன் தலைவன், நாம் தொண்டர் என்ற அறிவு பிறந்தபின், தலைவனுக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்துவது தொண்டனுக்குக் கடமை. எனவே தலைவனைக் குறித்து மங்களாஶாஸநம் செய்வது அறிவுடையவன் செயல். தன்னை அழியமாறி யாகிலும் (அதாவது தாம் காக்கப்படுபவர் என்ற தன்மையை அழித்துக்கொண்டு, அவனைக் காப்பவராகத் தம்மை நினைத்துக்கொண்டு) அவனுடைய நன்மையை விரும்புவது அறிவுடைமையின் எல்லைநிலமாகும்.

இப்ரபந்தத்தில் முன்னிரண்டு பாட்டாலே, தாம் மங்களாஶாஸநம் பண்ணுகிறார். அத்தால் தமக்குப் பர்யாப்தி பிறவாமையாலே மேல் மூன்று பாட்டாலே, மங்க₃ளாஶாஸநம் பண்ணுகைக்கு, பகவச்சரணார்த்தி₂ களையும் கேவலரையும் ஐஶ்வர்யார்த்தி₂களையும் அழைக்கிறார். அதுக்குமேல் மூன்று பாட்டாலே ஆஹூதரானவர்கள் இவரோடே ஸங்க₃தராகிறார்கள். அதுக்கு மேல் மூன்று பாட்டாலே, அவர்களோடே திருப்பல்லாண்டு பாடுகிறார். மேலிற்பாட்டு ப₂லஶ்ருதி.

அவதாரிகை முற்றிற்று.

---

வேதாந்தத்தின் உட்கருத்தான இப்பொருளன்றோ இத் திருப்பல்லாண்டில் கூறப்படுகிறது!

இப்பிரபந்தத்தில் முதல் இரண்டு பாசுரங்களால் பெரியாழ்வார் எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்கிறார். தாம் மட்டும் மங்களாஶாஸநம் செய்ததனால் திருப்தி ஏற்படாமையினால், அடுத்த மூன்று பாசுரங்களில், எம்பெருமானைச் சரணம் அடைந்தவர்களையும், ஆத்மாநுபவத்தை விரும்புபவர்களையும், செல்வத்தை விரும்புபவர் களையும் மங்களாஶாஸநம் செய்வதற்கு அழைக்கிறார். அடுத்த மூன்று பாசுரங்களில், இவரால் அழைக்கப் பட்டவர்கள் இவரோடு வந்து கூடுகிறார்கள். அடுத்த மூன்று பாசுரங்களில் அவர்களோடு சேர்ந்து திருப்பல்லாண்டு பாடுகிறார். இறுதிப் பாசுரத்தில் இத் திருப்பல்லாண்டைக் கற்பவர்களுக்கு பயன் கூறுகிறார்.

அவதாரிகை முற்றிற்று.

முதற்பாட்டு. ஸௌந்த$_3$ர்யாதி$_3$ கல்யாண கு$_3$ணோபேத மான விக்$_3$ரஹத்தோடே வகுத்த ஶேஷியானவனைக் காலாதீ$_4$நமான தே$_3$ஶத்திலே காண்கையாலே 'இத்தால் இவனுக்கு என்ன தீங்கு வருகிறதோ?' என்று அதிஶங்கை பண்ணி, अनादिर्भगवान् कालो नान्तोऽस्य द्विज विद्यते (அநாதி$_3$ர் ப$_4$கவாந் காலோ நாந்தோஸ்ய த்$_3$விஜ வித்$_3$யதே) என்கிறபடியே, காலதத்த்வமுள்ளதனையும் இச் செவ்வி மாறாதே நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறார்.

---

முதல் பாட்டு. அழகு, மென்மை முதலிய திருக்கல்யாண குணங்களுடன் கூடிய திருமேனி உடைய வகுத்த தலைவனான எம்பெருமானை, காலம் ஆட்சி செய்கின்ற இவ்வுலகத்தில் கண்டார் பெரியாழ்வார். 'இதனால் இவனுக்கு என்ன தீங்கு விளையுமோ?' என்று அஞ்சி, ''**அநாதிர் ப$_4$க$_3$வாந் காலோ நாந்தோஸ்ய த்$_3$விஜ வித்$_3$யதே**'' (அந்தணரே! காலமானது தொடக்கமும் முடிவும் இல்லாதது)(ஸ்ரீவி.பு.1-2-26) என்று கூறியுள்ளபடி, காலம் எனும் தத்துவம் உள்ளவரை எம்பெருமானுடைய அழகு முதலியவை மாறாமல் நிலைத்திருக்கவேண்டும் என்று மங்களாஶாஸநம் செய்கிறார்.

*பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்*
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா*உன்
சேவடி செவ்வி திருக்காப்பு. 1

| | |
|---|---|
| மல் | -சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லர்களை, |
| ஆண்ட | -அடக்கிக் கொன்ற, |
| திண் | -திடமான; (மிக்கவலிமைபொருந்திய) |
| தோள் | -திருத்தோள்களை உடைய, |
| மணி | -மாணிக்கம் போன்ற, |
| வண்ணா | -நிறத்தையும்,தன்மையையும் உடையவனே, |
| உன் | -உன்னுடைய, |
| செவ்வடி | -சிவந்த திருவடியின், |
| செவ்வி | -அழகுக்கு , |
| பல்லாண்டு | -பல (எண்ணமுடியாத) ஆண்டுகள். |
| பல்லாண்டு | -எண்ண முடியாத ஆண்டுகள். |
| பல்லாயிரத்தாண்டு | -எண்ணமுடியாத பல ஆயிரம் ஆண்டுகள் |
| பலகோடி நூறாயிரம் | -பலகோடிநூறாயிரம் ஆண்டுகள்; |
| திருக்காப்பு | -குறைவற்ற காப்பு உண்டாக வேணும். |

**(பல்லாண்டு) அல்லாத அவச்சே$_2$த$_3$ங்களையொழிய ஆயுஸ்ஸுக்குப் பர்யாயமான ஆண்டைக் கொண்டு காலத்தைப் பெருக்குகிறார். ஆயுஸ்ஸை ப்ரார்த்தி$_2$க்கிறவர் ஆகையாலே. यामोषधिमिवायुष्मन् (யாமோஷதி$_4$மிவ**

---

(**பல்லாண்டு**) காலத்தின் மற்ற உட்பிரிவுகளான நாள், வாரம், பக்ஷம், மாதம் முதலியவைகளை விட்டு விட்டு ஆயுளைக் குறிப்பதான ஆண்டுகளைக் கொண்டு காலத்தைப் பெருக்குகிறார், எம்பெருமா னுக்கு நீண்ட ஆயுளை வேண்டுபவர் ஆகையால். **''யாமோஷதி$_4$மிவ ஆயுஷ்மந் அந்வேஷஸி மஹாவநே, ஸா தே$_3$வீ மம ச ப்ராணா: ராவணேந**

ஆயுஷ்மந்) என்று ஆயுஸ்ஸை ப்ரார்த்திஓத்தாரிறே பெரியவுடையார். 'வேதநூல் பிராயம் நூறு' என்று ஆயு:பர்யாயமாகச் சொல்லிற்றிறே வத்ஸரத்தை. இந்த ப₄ஹுவசநத்துக்கு அஸங்க்₂யாதத்வமே முக்₂யார்த்த₂ம் ஆகையாலே, அஸங்க்₂யாதமான வர்ஷங்கள் இவ்வழகோடே நித்யமாய்ச் செல்லவேணும் என்கிறார்.

"பல்லாண்டு" என்கிற ஶப்த₃ம் ஸ்வரூபவாசியாயும் இருக்கிறது; உத்க்ருஷ்டனாயிருப்பான் ஒருவனை அபக்ருஷ்டனாயிருப்பானொருவன் கண்டால், அவனுடைய உத்கர்ஷாநுரூபமாகச் சொல்லும்

---

உப₄யம் ஹ்ருதா" (நீண்ட ஆயுளை உடையவனே! எந்த ஸீதாதேவியை பெருங்காட்டில் மருந்தைத் தேடுவது போல் தேடுகிறாயோ, அவளும், என் உயிரும் இராவணனாலே அபகரிக்கப்பட்டன) (ரா.ஆ.67-15) என்று கூறும்போது, இராமனுக்கு நீண்ட ஆயுளை வேண்டினார் பெரியவுடையார் என்று வழங்கப்படுகிற ஜடாயு மஹாராஜர். ''வேதநூற் பிராயம் நூறு" (திருமாலை-3) என்று, ஆண்டானது ஆயுளுக்குரிய சொல்லாகக் கூறப்பட்டுள்ளதன்றோ! பல ஆண்டுகள் என்கிற பன்மைக்கு, எண்ணமுடியாத ஆண்டுகள் என்பதே முக்கியப் பொருளாகையாலே, எண்ண முடியாத ஆண்டுகள் இவ்வழகுடன் நிலையாக இருக்க வேண்டும் என்கிறார் பெரியாழ்வார்.

பல்லாண்டு எனும் சொல் ஒருவனுடைய தன்மையைத் தெரிவிப்பதாகவும் அமைந்துள்ளது. மேன்மையுடையவன் ஒருவனைத் தாழ்ந்தவன் கண்டால் அவனுடைய மேன்மைக்குத் தக்கவாறு

பாசுரமாகையாலே, ஸர்வேஶ்வரனுடைய உத்கர்ஷத்துக்கு அவதி$_4$ இல்லாமை யாலும், அவனைக் குறித்துத் தம்முடைய நிகர்ஷத்துக்கு அவதி$_4$யில்லாமையாலும், இந்த உத்கர்ஷ அபகர்ஷரூப வைஷம்யம் ஸ்வரூப ப்ரயுக்தமாகையாலே 'பல்லாண்டு' என்கிற ஶப்த$_3$ம் ஸ்வரூபவாசியாகிறது. மேல் பண்ணுகிற மங்க$_3$ளாஶாஸநம் ஸ்வரூபப்ரயுக்தம் என்கைக்காக சொல்லிற்று. 'ஜிதம்' என்றும், 'நம:' என்றும், 'தோற்றோம்' என்றும், 'போற்றி' என்றும், 'பல்லாண்டு' என்றும், இவை பர்யாயம். இந்தப் பதங்களுக்கு அர்த்த$_2$பே$_4$த$_3$ம் இல்லையோ? என்னில்; ப்ரவ்ருத்திநிமித்த பே$_4$த$_3$த்தாலே வரும் விஶேஷம் உண்டானாலும் விழுக்காட்டில் ஆத்மஸ்பர்ஶியாய்த் தலைக்

---

தாழ்ந்தவன் வாழ்த்துவது இயல்பானவொன்று. எம்பெருமானுடைய மேன்மைக்கு எல்லை இல்லை ஆதலாலும், தம்முடைய தாழ்வுக்கும் எல்லை இல்லாததாலும், இந்த மேன்மையும் தாழ்வும் இயற்கையான தன்மைகளாதலாலும், அவற்றிற்குச் சேர பல்லாண்டு என்கிற சொல் ஸ்வரூபத்தை (தன்மையை) தெரிவிப்பதாகவும் அமைகிறது. மேலே செய்கின்ற மங்களாஶாஸநம் இவருடைய தன்மைக்குச் சேர்ந்ததே என்பதற்காகக் கூறப்பட்டது. 'ஜிதம்' (வென்றாய்), 'நம:' (எனக்கு நான் உரியேன் அல்லேன்), 'தோற்றோம்', 'போற்றி', 'பல்லாண்டு' இவை யனைத்தும் ஒரே பொருளைக் கொண்ட பல்வேறு சொற்களாகும். இச்சொற்களுக்குப் பொருளில் சிறிதும் வேறுபாடு இல்லையோ எனில், சிறிது வேறுபாடு இருந்தாலும் முடிவில் அவை ஒரே

கட்டுகையாலே பர்யாயமாகிறது. 'ஜிதம்' என்று, அவனாலே தம் அபி$_4$மானம்போனபடியை இசைந்து, அத்தலையில் வெற்றிக்கு மேலெழுத்திடுமவன் வ்யவஹாரம். இத்தால், ஸ்வரூப ப்ரகாஶத்தாலல்லது அபி$_4$மானம் போகாமையாலே, இஶ்ஶப்தமும், விழுக்காட்டால் ஸ்வரூபவாசியாகிறது. 'நம:' என்று 'எனக்குரியேனல்லேன்' என்றபடி. இது நிவ்ருத்த ஸ்வாதந்த்ர்யனுடைய வ்யவஹாரம். இதுவும் ஸ்வரூப ப்ரகாஶத்தாலல்லது கூடாமையாலே ஸ்வரூப ஸ்பர்ஶி யாகிறது. 'தோற்றோம்' என்கிறது, 'அத்தலையில் வெற்றியே தனக்கு ப்ரயோஜனம்' என்றிருக்குமவனுடைய

---

பொருளைக் குறிக்கின்றனவே அன்றி வேறில்லை. 'ஜிதம்' என்பது எம்பெருமானால் தன் அகங்காரம் தொலைந்தபடியை ஒப்புக்கொண்டு, அவனுடைய வெற்றிக்குத் தானும் மேலெழுத்து (கையெழுத்து) இடுபவன் கூறும் சொல். தன்னுடைய தன்மையை உள்ளபடி உணர்ந்தாலல்லது அகங்காரம் தொலையாதாகையால், இச்சொல் முடிவில் ஜீவாத்மாவின் தன்மையைத் தெரிவிப்ப தாகவே ஆகிறது. 'நம:' என்ற சொல் 'எனக்கு நான் உரியேன் அல்லேன் (எம்பெருமானுக்கே உரியேன்)' என்ற பொருளுடையது. இது சுதந்திரத் தன்மை தனக்கு இல்லை என்று ஒப்புக் கொண்டவன் கூறும் சொல். இதுவும் தன்னுடைய தன்மையை உள்ளபடி உணர்ந்தாலல்லது ஏற்படாது ஆகையால், இதுவும் தன்னுடைய தன்மையையே தெரிவிக்கின்றது. 'தோற்றோம்' என்கிறது, 'எம்பெருமானுடைய வெற்றியே தனக்குப் பயன்' என்றிருப்பவன் கூறும்

வ்யவஹாரம்; இதுவும், அஹங்கார நிவ்ருத்தியிலே யல்லது ஸம்ப$_4$வியாமையாலே ஸ்வரூபஸ்பர்ஶியாகிறது. ‘போற்றி’ என்று, தன்னைப் பேணாதே அத்தலையில் ஸம்ருத்$_3$தி$_4$ யையே பேணுமவன் வ்யவஹாரம்; இதுவும் ஸ்வரூபாநு ரூபமிறே. ‘பல்லாண்டு’ என்றது, தன்னைப் பாராதே ‘அத்தலையில் ஸம்ருத்$_3$தி$_4$யே நித்யமாய்ச் செல்ல வேணும்’ என்றிருக்குமவன் வ்யவஹாரம். ஆக, இஶ்ஶப்த$_3$ங்கள் ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் ப்ரகாஶிப்பிக்கையாலே ஸ்வரூபாநுப$_3$ந்தி$_4$யே ஆகிறது.

(பல்லாண்டு) மறித்து ‘பல்லாண்டு’ என்கிறதென் என்னில்; அகவாய் அறியாதவனுக்குத் தெரியாமையாலே

---

சொல்லாகும். இதுவும் அகங்காரம் தொலைந்தால் அல்லது ஏற்படாது ஆகையால், ஜீவாத்மாவின் தன்மையைத் தெரிவிப்ப தாகவே ஆகிறது. ‘போற்றி’ என்பது தன்னுடைய நன்மையை விரும்பாமல் எம்பெருமானுடைய நன்மையை விரும்புபவன் கூறும் சொல். இதுவும் ஆத்மாவின் தன்மைக்குச் சேர்ந்ததே. ‘பல்லாண்டு’ என்பது, தன்னுடைய நன்மைகளைப் பாராமல், ‘எம்பெருமானுடைய நன்மைகளே எப்பொழுதும் குறைவில்லாமல் இருக்கவேண்டும்’ என்றிருப்பவன் கூறும் சொல். எனவே இச் சொற்கள் அனைத்தும் ஜீவாத்மாவின் தன்மையையும், அத் தன்மைக்குச் சேர்ந்த செயலையும் தெரிவிப்பதால், இவை ஜீவாத்மாவின் தன்மையுடன் சேர்ந்ததேயாகும்.

*(பல்லாண்டு)* ஒருமுறை ‘பல்லாண்டு’ என்றவர், மறுபடியும் ‘பல்லாண்டு’ என்று கூறுவது

பலகால் சொல்லவேண்டியிருக்கும்; ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனாய், எதிர்சூழல் புக்குத் திரிகிறவனுக்கு இருகால் சொல்ல வேண்டா; இப்புநருக்திக்குப் பொருள் என்? என்னில்; அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தில் குறையாலல்ல; 'ஒருகால் சொன்னோம்' என்று ஆறி யிருக்க மாட்டாத தம்முடைய ஆத$_3$ராதிஶயத்தாலும், பலகால் சொல்லுமத்தாலும் பர்யாப்தி பிறவாத விஷய வைலக்ஷண்யத்தாலும் அருளிச் செய்கிறார். த்ருஷார்த்த$_2$னானவன் தண்ணீர் பெறுமளவும் 'தண்ணீர், தண்ணீர்' என்னுமாபோலே, தம்முடைய ப$_4$யம் ஶமிக்கும் அளவும் 'பல்லாண்டு, பல்லாண்டு' என்ன ப்ராப்தமிறே.

---

ஏன்? உள்ளத்தில் உள்ளதை அறியாதவனுக்குப் பலமுறை சொல்லவேண்டியிருக்கும். இயற்கையாகவே எல்லாம் அறிந்தவனும், நம்மைப் பெறுவதற்காக எதிர்கொண்டு வருபவனுமான எம்பெருமானுக்கு இருமுறை சொல்ல வேண்டாவே! இப்படிக் கூறியதையே கூறுவதற்குப் பொருள் என்ன எனில், அவனுடைய எல்லாமறியும் தன்மையில் குறையால் அல்ல. 'ஒருமுறை சொல்லி விட்டோம்' என்று ஆறியிருக்கமாட்டாத தம்முடைய ஈடுபாட்டின் காரணமாகவும், பலமுறை சொன்னாலும் திருப்தி ஏற்படாத அளவுக்கு அவனுடைய பெருமை மிகுந்திருப்பதாலும், அப்படி அருளிச்செய்கிறார். தாகமுள்ளவன் தண்ணீர் பெறும் வரை ''தண்ணீர், தண்ணீர்'' என்று கேட்டுக் கொண்டிருப்பது போல, இவரும் தம்முடைய அச்சம் நீங்கும்வரை ''பல்லாண்டு, பல்லாண்டு'' என்று கூறிக்கொண்டிருப்பது தகுதியானதே ஆகும்!

(பல்லாயிரத்தாண்டு) கீழில் பூஹுவசனத்திலே, வர்ஷங்களினுடைய அஸங்க்யாதத்வம் சொல்லியிருக்க, இதுக்கு உதயமில்லையே? என்னில்; அவச்சேதகங்களுக்கு ஸங்க்யை இல்லாமையாலே காலாவச்சேத்யத்துக்குத் தொகை இல்லை; ஆகையாலே அருளிச் செய்கிறார். அவச்சேதகங்களாவன:- ஸூர்யபரிஸ்பந்தாதிகள்; அவச்சேத்யங்களாவன:- க்ஷணலவாதிகள். வர்ஷத்துக்கு அவச்சேதகர் தேவர்கள்; அத்தைப் பற்றச் சொன்னார் கீழ்; பல வர்ஷத்துக்கு அவச்சேதகன் ப்ரஹ்மா; அத்தைப் பற்ற அருளிச் செய்கிறார் (பல்லாயிரத்தாண்டு) என்று.

(பலகோடி நூறாயிரம்) என்று ப்ரஹ்மாக்களுக்குத் தொகை இல்லாமையாலே அருளிச் செய்கிறார்.

---

*(பல்லாயிரத்தாண்டு)* கீழே ஏற்கெனவே எண்ண முடியாத வருடங்கள் என்று பன்மையில் கூறியிருக்க, மீண்டும் 'பல்லாயிரத்தாண்டு' என்று கூறுவது ஏன்? என்னில், காலத்தின் பிரிவுகளுக்கு எண்ணிக்கை இல்லாமையால் அவ்வாறு கூறுகிறார். காலத்தின் பிரிவுகளுக்குக் காரணமானவை சூரியனுடைய சுழற்சி முதலியவை. நொடி, நிமிடம், மணி போன்றவை பிரிவுகள். மனிதர்களுடைய ஒருவருடம் என்பது தேவர்களுக்கு ஒருநாளாகும். அதைக் கருத்தில் கொண்டு கீழே சொன்னார். தேவர்களுடைய பலவருடங்கள் சேர்ந்தது பிரமனுக்கு ஒருநாளாகும். அதைக் கருத்தில் கொண்டு 'பல்லாயிரத்தாண்டு' என்கிறார்.

*(பலகோடி நூறாயிரம்)* பிரம்மாக்களுக்கும் எண்ணிக்கையில்லாமையால் 'பலகோடிநூறாயிரம்'

காலக்ருத பரிணாமமில்லாத தே$_3$ஶத்தில் உள்ளார்க்கும் ஸ்வஸத்தை உள்ளவளவும் விஷயவைலக்ஷண்யத்தைப் பற்ற அதிஶங்கையும் மங்க$_3$ளாஶாஸனமும் நித்யமாய்ச் செல்லா நின்றது; காலக்ருத பரிணாமமுள்ள தே$_3$ஶத்திலே இருக்கிறவர்க்கு அதிஶங்கையும், அத்தால் வந்த ப$_4$யமும், ப$_4$யநிவ்ருத்திக்காகக் காலத்தைப் பெருக்கி,

---

என்கிறார். காலத்தின் கட்டுப்பாடில்லாத பரமபதத்தில் உள்ள நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும்கூட எம்பெருமானுடைய பெருமைகளைக் காணும்போது 'இவனுக்கு யாரால் என்ன தீங்கு வந்துவிடுமோ?' என்ற அச்சமும், அதற்குச் சேர அவனுக்கு மங்களாஶாஸனம் செய்யும் பரிவும் ஏற்படுகிறது. (பரமபதத்தில் எழும் சாமவேத ஒலியை, எம்பெருமானுக்குத் தீங்கிழைக்க வந்த அரக்கர்களின் ஒலியாகக் கருதி, ஆதிஶேஷன், அவர்களை விரட்டுவதற்காக விஷத்தை உமிழ்கிறான்- 'ஆங்காரவாரம் அது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு' என்று திருமழிசையாழ்வார் (நான்முகன் திருவந்தாதி-10) அருளிச்செய்துள்ளமை நினைவுகூரத்தக்கது.) இப்படிப் பரமபதத்தில் உள்ளவர்களுக்கே இந்நிலை ஏற்படும் எனில், காலத்தின் கட்டுப்பாடுள்ள இந்நில வுலகில் இருக்கும் பெரியாழ்வாருக்கு எம்பெருமானுக்கு என்ன தீங்கு வருமோ என்ற ஐயமும், அதனால் ஏற்பட்ட அச்சமும், அந்த அச்சத்தைப் போக்கிக் கொள்வதற்காக காலத்தைப் பெருக்கி, காலம் எனும் தத்துவம் உள்ளவரை, எம்பெருமானுக்கு யாதொரு குறையும் வாராதிருக்கவேண்டும் என்று

இக்காலம் உள்ளதனையும் இப்படி மங்க$_3$ளாஶாஸனம் பண்ணச் சொல்ல வேணுமோ?

இப்படி மாறிமாறி ப$_4$யத்தை விளைத்த காலத்தைப் பெருக்கி இதுவே தமக்கு யாத்ரையாய்ச் செல்லப் புக்கவாறே, அவன், 'இவருடைய ப$_4$யத்தைப் பரிஹரிக்க வேணும்' என்று பார்த்து, "புலிகிடந்த தூற்றுக்கு அஞ்சிக் காவல் தேடுவாரைப் போலே, நீர் நமக்கு அஞ்சக்கடவீரோ? மல்லவர்க்க$_3$த்தை நிரஸித்த தோளிருக்கிறபடி பாரீர்" என்று தோள் வலியைக் காட்டினான்; ராவணாஜனைக் குறித்து

---

மங்களாஶாஸம் செய்வதற்குக் கூறவும் வேண்டுமோ!

இப்படி மாறிமாறி அச்சத்தை விளைக்கின்ற காலத்தைப் பெருக்கி, 'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடிநூறாயிரம்' ஆண்டுகள் எம்பெருமானுக்கு ஒருகுறையும் வாராதிருக்கவேணும் என்று மங்களாஶாஸநம் செய்வதே காரியமாகச் செல்வதைக் கண்ட எம்பெருமான், ஆழ்வாருடைய அச்சத்தைப் போக்கவேண்டும் என்று நினைத்தான். ''புலி வசிக்கும் குகைக்குக் காவல் தேடுவார் உண்டோ? (புலியின் வலிமையே ஒருவரையும் அருகில் நெருங்க விடாதன்றோ!) கம்ஸனால் ஏவப்பட்ட மல்லர்களை அழித்த என்னுடைய தோள்வலிமையைப் பாரும். (இப்படிப்பட்ட தோள்வலிமையுடைய எனக்கு யார் என்ன தீங்கு விளைக்கமுடியும்?)'' என்று தன் தோள் வலிமையைக் காட்டினான். இராவணனுடைய தம்பியான விபீஷணனால் என்ன ஆபத்து விளையுமோ என்று அஞ்சிய சுக்ரீவ மஹாராஜர்க்குத்

மஹாராஜர்க்குப் பிறந்த ப$_4$யத்தைப் போக்குகைக்காகத் தம் மிடுக்கைக் காட்ட அவர் ப$_4$யம் ஶமிக்கக் காண்கையாலே, ‘இவ்விஷயத்திலும் ப$_2$லிக்கும்’ என்று மிடுக்கைக்காட்ட, இவர்க்கு இதுதானே ப$_4$யஹேது ஆய்த்து. மஹாராஜர் ப$_4$யத்தைத் தீர்த்தபடி எங்ஙனே? என்னில் पिशाचान् दानवान् यक्षान् (பிஶாசாந் த$_3$ாநவாந் யக்ஷாந்) கள்ளர், பள்ளிகள், வலையர் என்னுமாபோலே ஹிம்ஸகருடைய அவாந்தர பி$_4$தை$_4$ இருக்கிறபடி. पृथिव्यान् चैव राक्षसान् (ப்ருதி$_2$வ்யாந் சைவ ராக்ஷஸாந்) லங்கையிலுள்ள ராக்ஷஸரல்லவன்றிக்கே, பஞ்சாஶத் கோடி விஸ்தீர்ணை யான பூ$_4$மியிலுள்ள ராக்ஷஸர் எல்லாரும் எதிரிகள்

---

தன் தோள் வலிமையைக் காட்டவே அவர் பயம் தெளிந்ததைக் கண்டான். அதுபோல இங்கும் தன் தோள் வலிமையைக் காட்டினால் ஆழ்வாருடைய பயமும் நீங்கும் என்று நினைத்து தன்னுடைய தோள்வலிமையை (மல்லாண்ட திண் தோளை) ஆழ்வாருக்குக் காட்ட, அது ஆழ்வாருடைய அச்சத்தைப் போக்குவதற்கு பதிலாக அதுவே அவருடைய பயத்தை அதிகரிக்கக் காரணமாகி விட்டது. சுக்ரீவ மஹாராஜருடைய பயத்தைத் தீர்த்தது எப்படி என்றால்; (சுக்ரீவனிடம் இராமன் பின்வருமாறு கூறினான்.) “**பிஶாசாந் தாநவான் யக்ஷாந்**” (பிசாசங்கள் தானவர்கள், யக்ஷர்கள்) கள்வர், பள்ளிகள், வலையர் என்று கொடியவர்களுடைய உட்பிரிவுகள் இருகிறபடி. “**ப்ருதி$_2$வ்யாந் சைவ ராக்ஷஸாந்**” (பூமியிலுள்ள அரக்கர்கள் எல்லோரும்) இலங்கையில் உள்ள அரக்கர்கள் மட்டுமின்றி, ஐநூறுகோடி சதுரமைல் பரப்பளவுள்ள பூமியிலுள்ள

ஆனாலும்; अङ्गुल्यग्रेण तान् हन्यां (அங்கு₃ல்யக்₃ரேண தாங் ஹங்யாம்) ஆக, ஶத்ருவர்க்க₃ங்களெல்லாம் ஒரு கலத்திலே உண்டு எதிரிட்டாலும் இவற்றினுடைய நிரஸனத்துக்கு அஸ்த்ர ஶஸ்த்ரங்கள் வேணுமோ? க்ஷுத்₃ர க்ரிமிகளை நிரஸிக்குமோபாதி அங்கு₃ல்யக்₃ரத்தாலே நிரஸிக்க வல்லோம் காணும் என்றார். ஆனால், நம்மை நலிந்த ப்ரதிபக்ஷம் நஶியாதே கிடக்கிறதென்? என்னில்; 'அழிப்போம்' என்னும் இச்சை₂ இல்லாமை; இச்சை₂ உண்டானால் அழிக்கையில் அருமை இல்லை. அது தனக்கு அடியென்? என்னில்; 'உயிரோடே தலை சாய்க்குமானால் அழிக்கிறதென்?' என்னும்

---

அரக்கர்கள் அனைவரும் எதிரிகளானாலும். ''அங்கு₂ல்யக்₂ரேண தாந் ஹந்யாம்'' (விரல் நுனியாலே அவர்களைக் கொல்வேன்) ஆக, விரோதிகள் அனைவரும் ஒரே கலத்தில் உண்பவர்களாய் மிகவும் ஒற்றுமையுடன் வந்து என்னை எதிரிட்டாலும் அவர்களை அழிப்பதற்கு அஸ்த்ரங்களும் ஆயுதங்களும் வேண்டுமோ? சிறியபுழுக்களை அழிப்பதுபோல விரல் நுனியாலே அழிக்கவல்லவன் நான் என்கிறார். ஆனால் நம்மைத் துன்புறுத்தும் (இராவணன் முதலிய) எதிரிகள் இன்னும் அழியாமல் இருப்பதற்குக் காரணம் என்ன எனில், ''இச்சந்'' அழிப்போம் எனும் நினைவு இல்லாமையால்; நினைவு உண்டானால், அழிப்பதில் அருமை ஒன்றும் இல்லை. அப்படி நினையாமைக்குக் காரணம் என்ன எனில், அவ்விரோதிகளும் உயிரோடு வந்து திருவடிகளில் தலைசாய்ப்பார்களானால், அவர்களைக் கொல்வது

இரக்கத்தாலே. இவ்வார்த்தை ராமப$_4$ாக்$_3$யத்தாலே மஹாராஜர் நெஞ்சில் பட்டு ப$_4$யநிவ்ருத்திக்கு உடலாய்த்து; இவர்க்கு இதுதானே ப$_4$யஹேதுவாய்த்து.

(மல்லாண்ட திண்டோள்) மல்ல வர்க்க$_3$த்தை ஸ்வாதீ$_4$னமாகப் பண்ணின திண்ணிய தோள். பிற்பாடரான கம்ஸாதி$_3$களை அநாயாஸேந கொல்லுகையாலே திண்ணிய தோள் என்கிறது. 'மல்' என்று மிடுக்காய், அத்தை அடிமை கொண்ட திண்ணிய தோள் என்கிறதாகவுமாம். இம்மிடுக்கு இவர்க்கு ப$_4$யஹேது ஆவானென்? என்னில் ஶூரனான புத்ரனைக் கண்டால், பெற்றதாய் 'இவன் மதியாதே யுத்த$_3$த்$_4$திலே புகும்; என்

---

எதற்காக என்னும் இரக்கத்தால்தான். இப்படி இராமபிரான் கூறியது அவனுடைய பாக்யத்தால் சுக்ரீவமஹாராஜர் நெஞ்சில் பட்டு அவருடைய பயம் நீங்குவதற்குக் காரணமாகியது. ஆனால் இதேபோல் தன் தோள்வலிமையை எம்பெருமான் ஆழ்வாருக்குக் காட்ட அதுவே ஆழ்வாருடைய பயத்திற்குக் காரணமாகிவிட்டது.

**(மல்லாண்ட திண் தோள்)** மல்லர்கூட்டத்தைத் தன்வயப்படுத்திய திண்மையுடைய தோள். மல்லர்களை அழித்த பிறகு, கம்ஸன் முதலியவர்களை மிகவும் எளிதாகக் கொன்றபடியால் திண்மையுடைய தோள் எனப்பட்டது. 'மல்' என்பது மிடுக்கைக் குறித்து, மிடுக்கை அடிமைகொண்ட தோள் என்றும் கூறலாம். எம்பெருமானுடைய மிடுக்கு ஆழ்வாருடைய பயத்திற்குக் காரணமானது எவ்வாறு எனில், வலிமையுள்ள பிள்ளை ஒருவனைப் பெற்ற தாய், 'இவன் தன் தோள்வலிமை காரணமாக

வருகிறதோ?" என்று ப$_4$யப்படுமா போலே ப$_4$யப்படுகை யுக்தம். மல்லரை அழியச்செய்த தோள் என்று இவர் அறிந்தபடி என்? என்னில், காதில் தோடு வாங்கினாலும், தோடிட்ட காது என்று அறியுமாபோலே.

(மணிவண்ணா) நீலமணிபோலேயிருக்கிற திருநிறத்தை உடையவனே! அதிரமணீயமாய், அத்யுஜ்ஜ்வலமாய், அதிஸுகுமாரமாய், அதிஸுலப$_4$மாய் இருந்துள்ள வடிவைக் கொண்டு முரட்டு அஸுரர்களுடைய ஸகாஶத்திலே செல்லுவதே! क्व यैवनोन्मुखीभूतसुकुमारतनुर्हरिः। क्व वज्रकठिनाऽभोग शरीरोऽयं

---

எவரையும் மதியாமல் எல்லோரிடமும் சண்டைக்குச் செல்வான். இவனுக்கு யாரால் என்ன ஆபத்து விளையுமோ?' என்று எப்போதும் அச்சம் கொள்வாளல்லவா? அதுபோலவே இங்கும் ஆழ்வார் எம்பெருமானுடைய வலிமையைக் குறித்து அச்சம் கொண்டது பொருந்தும். மல்லரை அழியச் செய்த தோள் என்று ஆழ்வார் அறிந்து கொண்டது எவ்வாறு எனில், காதில் அணிந்திருந்த தோட்டை அவிழ்த்து விட்டாலும், தோடிட்டகாது என்று அடையாளம் காட்டிக் கொடுத்து விடுவதுபோல, மல்லர்களை அழித்து முடித்த பின்பும் தோளில் உள்ள வலிமையின் அடையாளம், அது மல்லர்களை அழித்த தோள் என்று காட்டிக் கொடுக்கும்.

***(மணிவண்ணா)*** நீலமணிபோல் இருக்கின்ற திருநிறத்தை உடையவனே! மிகவும் அழகாய், மிகவும் ஒளியுள்ளதாய், மிகவும் மென்மையுள்ளதாய், மிகவும் எளிமையானதாய் உள்ள வடிவைக் கொண்டு முரட்டு அசுரர்களுடைய அருகில்

महासुर:।। (க்வ யௌவநோந்முகீ$_2$பூ$_4$த ஸுகுமாரதநுர் ஹரி: க்வ வஜ்ரகடி$_2$நாபே$_4$ாக$_3$ ஶரீரோயம் மஹாஸுர:) என்று, வெண்ணெயமுது செய்து வளர்ந்த சிறு பிள்ளையை, முரட்டு வடிவையுடைய மல்லரோடே ஒக்கப் பொரவிடுவதே! न समं युद्धमित्याहु: (ந ஸமம் யுத்$_3$த$_4$மித்யாஹு:) என்று கூப்பிட்டார் களிறே ஸ்ரீமதுரையின் பெண்கள். ஸௌகுமார்யம் ப$_4$ய ஹேதுவாகிறது, ஸௌலப்$_4$யம் ப$_4$யஹேதுவோ? என்னில், அஸுரநிரஸநார்த்த$_2$மாக தே$_3$வதைகள் ஶரணாகதியைப் பண்ணினமாத்ரத்திலே,

---

செல்வதே! "**க்வயௌவந உந்முகீ$_2$பூ$_4$தஸுகுமார தநுர் ஹரி: க்வ வஜ்ரகடி$_2$நாபே$_4$ாக$_3$ ஶரீரோயம் மஹாஸுர:**" (யௌவனத்தை நெருங்கும் மென்மையான திருமேனியுடைய ஹரி எங்கே? வயிரம்போல் கடினமானதும் விசாலமானதுமான உடலை உடைய இந்த மஹாஸுரர்கள் எங்கே?) (வி.பு.5.20.60) என்று கூறியுள்ளபடி, வெண்ணெய் அமுது செய்து வளர்ந்த சிறுபிள்ளையான கண்ணபிரானை முரட்டு உடலை உடைய மல்லர்களுடன் சமமாக மற்போர் புரிய விடுவதே! "**ந ஸமம் யுத்$_3$த$_4$ம் இத்யாஹு:**" (இது சமமான யுத்தமல்ல என்றார்கள்) (ரா.யு. 103-5) என்று கதறினார்கள் வடமதுரையில் வசித்த பெண்கள். எம்பெருமானுடைய மென்மை ஆழ்வாருடைய பயத்திற்குக் காரணமாகியது என்பது சரி. அவனுடைய எளிமையும் ஆழ்வாருடைய பயத்திற்குக் காரணமாகுமோ எனில், அசுரர்களை அழிக்க வேண்டும் என்று தேவதைகள் ஶரணாகதி செய்தவுடனே, அவன் மிகவும் எளியவனாய்,

ஸுலப₄னாய் அஸுரர்களாஸ்யத்திலே புகும் என்னுமத்தாலே பயப்படுகிறார்.

"ஆஶ்ரிதர்க்குத் தஞ்சமான ஸௌலப்₄யத்தையும் மிடுக்கையும் கண்டால் நீர் இங்ஙனே அஞ்சக்கடவீரோ?" என்ன, (உன் செவ்வடி) "அது என்னால் வருகிறதன்று. உன் வடிவின் வைலக்ஷண்யத்தாலே வருகிறது. நீதான் உன்னைக் கண்ணாடிப்புறத்திலே கண்டால், ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான நீயும் கலங்கிப் பரியவேண்டும்படி அன்றோ உன் வடிவிருப்பது!" (செவ்வடி) செவ்விய அடி என்னுதல். சிவந்த அடி என்னுதல். குடிலஹ்ருத₃யர்க்கும் செவ்விதாகையும், திருமேனிக்குப் பரபாகமாகையும்,

---

அசுரர்கள் வாயிலே புகுவான் என்று அஞ்சுகிறார் ஆழ்வார்.

''அடியவர்களுக்குத் தஞ்சமான எளிமையையும் மிடுக்கையும் கண்டால் நீர் இப்படி அச்சம் கொள்வீரோ?" என்று எம்பெருமான் கேட்க, (உன் செவ்வடி) ''அது என்னால் வருகிறதன்று. உன் வடிவின் பெருமையால் வருகிறது. உன்னைக் கண்ணாடியில் கண்டால் எல்லாமறிந்தவனான நீயே கலங்கி, 'இவ்வழகுக்கு என்ன குறைவருமோ? ஒரு குறையும் வாராதிருக்கவேண்டும்' என்று நீயும் பரியவேண்டும் படியாக அன்றோ உன் வடிவின் பெருமையிருப்பது!" (செவ்வடி) செம்மையை உடைய அடி என்னுதல். சிவந்த அடி என்னுதல். கொடிய நெஞ்சு படைத்தவர்களுக்கும் செம்மையாக இருப்பதும், எம்பெருமானுடைய கரிய திருமேனிக்குப் பகைத்தொடையாக சிவந்து இருப்பதும், இரண்டுமே இவர்க்கு பயத்திற்குக்

இரண்டும் இவர்க்கு ப$_4$யஸ்த$_2$ாநமாகிறதிறே. ஶேஷபூ$_4$தன் ஶேஷி வடிவைக் கண்டால் 'திருவடிகள்' என்றிறே வ்யவஹரிப்பது. ஆஶ்ரயண வேளையோடு, போ$_4$கவேளையோடு, மங்க$_3$ளாஶாஸந வேளையோடு வாசியற ஆஶ்ரிதர் இழியும் துறை திருவடிகளிறே. (செவ்வி) 'அரும்பினை அலரை' என்னுமாபோலே நித்ய யௌவனமாய் இருக்கை.

(திருக்காப்பு) குறைவற்ற ரக்ஷை. உண்டான அமங்க$_3$ளங்கள் போகைக்கும் இல்லாத மங்க$_3$ளங்கள் உண்டாகைக்கும் பண்ணின ரக்ஷை என்கை. ஒரு க்ரியை இன்றிக்கே குறைந்திருப்பானென் என்னில், தாழ்ந்தாரைக்

---

காரணமாகிறது. அடியவன் தலைவனின் திருமேனியைக் கண்டால் 'திருவடிகள்' என்றன்றோ கூறுவது! எம்பெருமானைப் பற்றும் வேளையோடு, அப்படிப் பற்றிய எம்பெருமானை அனுபவிக்கும் வேளையோடு அவ்வெம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்யும் வேளையோடு வேறுபாடு இல்லாமல் அடியவர் இழியும் துறை திருவடிகளே அன்றோ! (செவ்வி) 'அரும்பினை அலரை' (பெரியதிரு. 7-10-1) என்று அருளிச் செய்துள்ளது போல எப்போதும் யௌவனமாக இருத்தல் கூறப்படுகிறது.

(திருக்காப்பு) குறைவற்ற காப்பு. உண்டான அமங்களங்கள் போவதற்கும், இதுவரை இல்லாத மங்களங்கள் உண்டாவதற்கும் பண்ணின காப்பு. 'காப்பு உண்டாயிடுக' என்ற வினைச்சொல் இல்லாமைக்குக் காரணம் என்ன எனில், தாழ்ந்தவர்களை வாழ்த்தும் போது 'காப்பு

குறித்து 'ரக்ஷை உண்டாயிடுக!' என்றும், ஸமரைக் குறித்தும் பரிச்சிந்நமான உத்கர்ஷமுடையாரைக் குறித்தும் 'ரக்ஷை உண்டாகவேணும்' என்றும் சொல்லக் கடவது. தமக்கும் ஈஸ்வரனுக்கும் உண்டான நிரவதி₄கமான உத்கர்ஷ அபகர்ஷங்களில் பாசுரமில்லாமையாலே குறைந்து கிடக்கிறது. வேதா₃ந்தத்தாலே நாட்டையடைய வென்றிருக்கிற இவர் லக்ஷணத்தில் விழக் கவிபாட மாட்டாமை அன்றிறே. இன்னமும் இவ்விஷயத்தில் மங்க₃ளாஶாஸநம் பண்ண இழிந்தார்க்கு 'மங்க₃ளாஶாஸநம் பண்ணினோம்' என்று கை வாங்கவொண்ணாத அபர்யாப்திக்கு ஸூசகமாயிருக்கிறது.

எல்லாப்பாட்டுக்கும் இதுதான் முகவுரை போலே இருக்கிறது. 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா!

---

உண்டாயிடுக' என்றும், சமமானவரை யும், அளவுபட்டமேம்பட்டவரையும் வாழ்த்தும் போது 'காப்பு உண்டாக வேணும்' என்றும் கூற வேண்டும். தம்முடைய தாழ்வுக்கும், எம்பெருமானுடைய மேன்மைக்கும் தகுந்த சொற்களில்லாததால், வினைச் சொல் இன்றியே இருக்கிறது. வேதாந்த அர்த்தங்களை நிலைநாட்டி, நாடு முழுவதையும் வென்றிருக்கிற ஆழ்வாருக்கு இலக்கண முறைப்படிக் கவிபாட முடியாமை இல்லையன்றோ? மேலும் எம்பெருமானை வாழ்த்த நினைப்பவர்கள் 'மங்களாஶாஸநம் செய்துவிட்டோம்' என்று திருப்தியுடன் கைவாங்க முடியாது என்பதையும் இது உணர்த்துகிறது.

பின்வரும் பாசுரங்கள் அனைத்திற்கும் இப்பாசுரம் முகவுரை போல அமைந்துள்ளது.

பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு, பலகோடி நூறாயிரம், உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' என்று அங்வயம்.

இரண்டாம் பாட்டு. கீழ் விக்$_3$ரஹ யோக$_3$த்தையும் கு$_3$ணயோக$_3$த்தையும் குறித்து மங்க$_3$ளாஶாஸநம் பண்ணினார். இதில் உப$_4$ய விபூ$_4$தி யோக$_3$த்தைக் குறித்து மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறார்.

---

'மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா! பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம் உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' என்று அந்வயம்.

இரண்டாம் பாட்டு. கீழே முதல் பாசுரத்தில் 'செவ்வடி' என்று எம்பெருமானுடைய திருமேனியையும், 'மணிவண்ணா' என்று குணத்தையும் குறித்து மங்களாஶாஸநம் செய்தார் பெரியாழ்வார். இந்த இரண்டாம் பாசுரத்தில் லீலாவிபூதியாகிய இவ்வுலகில் உள்ள தம்மை 'அடியோம்', என்றும், நித்யவிபூதியாகிய பரமபதத்தில் உள்ளவர்களை 'ஆழி' 'பாஞ்சசன்னியம்' என்றும் கூறி மங்களாஶாஸனம் செய்கின்றபடியால் இரண்டு விபூதிகளுடன் (உலகங்களுடன்) கூடிய எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்கிறார்.

*அடியோமோடும் நின்னோடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு*
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு*

வடிவார்சோதி வலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு
படைபோர்புக்கு முழங்கும்
அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே. 2

| | |
|---|---|
| அடியோமோடும் | - அடியவர்களான எங்களோடும் |
| நின்னோடும் | - தலைவனான உன்னோடும் |
| பிரிவின்றி | - பிரிவில்லாமல் |
| ஆயிரம் பல்லாண்டு | - எந்நாளும் நித்தியமாய்ச் செல்லவேணும். |
| வடிவாய் | - அழகே உருவெடுத்தவளாய் |
| நின் வலமார்வினில் | - உன் வலத்திருமார்வினில் |
| வாழ்கின்ற | - நித்தியவாசம் செய்கிற |
| மங்கையும் பல்லாண்டு | - பிராட்டியும் என்றும் கூடியிருக்க வேணும். |
| வடிவார்சோதி | - மிக்க ஒளியையுடைய |
| வலத்துறையும் | - உன் வலது திருக்கையில் உறையும் |
| சுடராழியும் பல்லாண்டு | - சக்கரத்தாழ்வானும் என்றும் கூடி இருக்கவேணும். |
| படைபோர்புக்கு | - போரிலே படையாகப் புகுந்து |
| முழங்கும் | - பேரொலி எழுப்புகின்ற |
| அப் பாஞ்சசன்னியமும் | - அந்த பாஞ்சசன்னியமாகிய சங்கும் |
| பல்லாண்டே | - நித்தியமாயிருக்கவேணும். |

(அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு) (அடியோமோடும்) தம்மைப் பேணாதே

---

**(அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு) அடியோங்களாகிய நாங்களும், நீயும் பிரிவு ஏதுமின்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் இருக்கவேண்டும். (அடியோமோடும்)**

மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிற இவர், தம்முடைய நித்யதையைப் ப்ரார்த்தி$_2$ப்பானென்? என்னில், ஒரு ஸாத்$_4$யத்தைக் குறித்து ஸாத$_4$நாநுஷ்டா$_2$நம் பண்ணுமவர்கள் आयुराशास्ते (ஆயுராஶாஸ்தே) என்று ஆயுஸ்ஸை தத$_3$ங்க$_3$மாக ப்ரார்த்தி$_2$யாநின்றார்களிறே. அதுபோலே 'மங்க$_3$ளாஶாஸநத் துக்குத் தாம் வேணும்' என்று தம்மையும் கூட்டிக் கொள்கிறார். அத்தலைக்குப் பரிகைக்குத் தாமல்லது இல்லாமையாலே தாமில்லாத போது அத்தலைக்கு அபாயம் ஸித்$_3$தி$_4$க்கும்

---

தம்முடைய நன்மையை விரும்பாமல் எம்பெருமானுடைய நன்மைகளையே விரும்புகின்ற ஆழ்வார், இப்போது தாமும் நித்தியமாய் இருக்க வேண்டும் என்று வேண்டுவதற்குக் காரணம் யாது எனில், ஒரு பயனை விரும்பி ஒரு செயலைச் செய்பவன் அதற்கு அங்கமாக வேறு பயன்களையும் விரும்புவது உண்டு. உதாரணமாகச் செல்வம் அடைவதற்கு யாகம் செய்பவன் ''**ஆயுராஶாஸ்தே**'' என்று அச்செல்வத்தை அனுபவிப்பதற்கு நீண்ட ஆயுளையும் அங்கமாக வேண்டுவதுண்டு. அதுபோல எம்பெருமான் நித்தியமாக எழுந்தருளியிருக்க வேண்டுமானால், அதற்காக மங்களாஶாஸநம் செய்வதற்குத் தாமும் நித்தியமாய் இருக்கவேண்டும் என்று தம்மையும் கூட்டிக் கொள்கிறார். எம்பெருமான் மீது பரிவு கொண்டு மங்களாஶாஸநம் செய்வதற்குத் தம்மைத் தவிர வேறு யாரும் இல்லாமையால், தாம் இல்லாதபோது (மங்களாஶாஸநம் செய்வார் இல்லாமல்) எம்பெருமானுக்குத் தீங்கு விளைவது

என்றிருக்கிறாரிறே. ஆனால், 'என்னோடும்' என்னாதே, 'அடியோமோடும்' என்பானென் என்னில், தே$_3$ஹாத்மாபி$_4$மானி தே$_3$ஹத்தில் ஆத்மபு$_3$த்$_3$தி$_4$ பண்ணும். ஸாங்க்$_2$யன் अहमर्थं प्रकृते:परं स्वयंप्रकाशं स्वतन्त्रम् (அஹமர்த்த$_2$ம் ப்ரக்ருதே:பரம் ஸ்வயம்ப்ரகாஶம் ஸ்வதந்த்ரம்) என்றிருக்கும். அங்ஙன் கலங்கினவர் அன்றிறே இவர். கர்மௌபாதி$_3$கமாக வந்த அவஸ்தை$_2$கள் எல்லாம் மறைந்தாலும் மறையாத ஸ்வபா$_4$வம் தா$_3$ஸ்யம் என்றிருக்குமவரிறே இவர். ஆனால், 'அடியோம்' என்கிற ப$_3$ஹுவசநத்துக்குக் கருத்தென்? என்னில், தாம் தமியராய்

---

நிச்சயம் என்றே எண்ணியிருக்கிறார் ஆழ்வார். ஆனால் 'என்னோடும்' என்று கூறாமல் 'அடியோமோடும்' என்று கூறுவதற்குக் காரணம் என்ன? எனில், (ஜீவாத்மவானது எம்பெருமானுக்கு அடிமைப்பட்டது என்ற உண்மையை உணர்ந்தவர் ஆகையாலே அடியோம் என்கிறார்.) தேஹாத்மாபிமானி உடலையே ஆத்மா என்று தவறாக நினைக்கிறான். ஸாங்க்யன் ஆத்மா என்பது ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டது, ஸ்வயம் ப்ரகாஶமானது, சுதந்திரமானது என்று நினைக்கிறான். ஆனால் ஆழ்வார் அவர்களைப் போல் கலங்கினவர் அல்லர். ஆத்மாவானது எம்பெருமானுக்கு அடிமைப் பட்டது என்ற முறையை அறிந்தவர் ஆதாலால், 'அடியோம்' என்கிறார். வினைப்பயன் காரணமாக வந்தவைகள் ஆத்மாவை விட்டு நீங்கினாலும், நீங்காதது அடிமைத் தன்மையே என்பதை நன்கு உணர்ந்தவர் ஆழ்வார். ஆனால், அடியேன் என்று தம்மை மட்டும்

நின்று மங்க₃ளாஶாஸநம் பண்ணும் இத்தால் பர்யாப்தி பிறவாமையாலும், ஸர்வாத்மாக்களுக்கும் ஶேஷத்வம் அவிஶிஷ்டமாகையாலும், இப்ரதிபத்தி அவர்களுக்கு இன்றிக்கே இருக்கச் செய்தேயும் ஸ்வாபி₄ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார். (நின்னோடும்) வ்யாவ்ருத்தமான ஶேஷித்வம் மங்க₃ளாவஹமாகையாலே ஸர்வரும் கூடிப் பரிந்தாலும் போராதபடியாயிறே இருப்பது. இதனால்

---

கூறிக்கொள்ளாமல் அடியோம் என்று பன்மையில் கூறுவதற்குக் காரணம் யாது? எனில், தாம் மட்டும் தனியாகநின்று மங்களாஶாஸனம் செய்வதால் திருப்தி அடையாததாலும், எல்லா ஆத்மாக்களுக்கும் அடிமைத்தன்மை என்பது பொதுவானது ஆகையாலும், மற்றவர்களுக்கு இந்த நினைவு (அதாவது பகவானுக்குத் தாங்கள் அடிமைப் பட்டவர்கள் என்ற நினைவு) இல்லாதிருந்த போதும் எல்லோருமே எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்யக் கடமைப்பட்டவர்கள் என்ற தம்முடைய நினைவாலே, மற்றவர்களையும் தம்முடன் கூட்டிக் கொண்டு, அடியோம் என்று பன்மையில் அருளிச் செய்கிறார் ஆழ்வார். **(நின்னோடும்)** ஶேஷத்வத்தை(அடிமைத் தன்மையை)க் காட்டிலும் வேறுபட்டதான சேஷித்வம் (தலைமை) வாழ்த்தத் தகுதியானது ஆகையால் எல்லோரும் கூடிப் பரிவு கொண்டு மங்களாஶாஸனம் செய்தாலும் போதாதபடியன்றோ இருப்பது! (எனவே அடியோங்களைப் போல நீயும் உனக்குப் பரிவு கொள்வதற்கு நித்தியமாக இருக்கவேண்டும் என்கிறார்) நின்னோடும் என்ற

தி₃வ்யாத்ம ஸ்வருபத்தைப் பற்றி மங்க₃ளாஶாஸனம் பண்ணுகிறார். (பிரிவின்றி) இரண்டுதலையும் நித்யமானவோபாதி ஸம்ப₃ந்த₄மும் நித்யமாயிறே இருப்பது. அதுவும் தம்முடைய மங்க₃ளாஶாஸநத்தாலே உண்டாவதாக நினைத்திருக்கிறார். (ஆயிரம் பல்லாண்டு) 'காலதத்வம் உள்ளதனையும் இஸ்ஸம்ப₃ந்த₄ம் நித்யமாய்ச் செல்ல வேணும்' என்கிறார்.

(வடிவாயித்யாதி) "உண்டான அமங்க₃ளங்கள் போகைக்கும் இல்லாத மங்க₃ளங்கள் உண்டாகைக்கும் தன் கடாக்ஷமே அமைந்திருக்கிற இவள், 'அகலகில்லேன் இறையும்' என்று நம்மைப் பிரியமாட்டாதே இருக்க, நமக்கு

---

இதனால் எம்பெருமானுடைய திவ்ய ஆத்ம ஸ்வரூபத்திற்கு மங்களாஶாஸநம் செய்கிறார். (**பிரிவின்றி**) பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஆகிய இரண்டும் நித்தியம் என்பது போலவே அவ்விருவருக்கும் இடையே உள்ள தொடர்பும் நித்தியமே. ஆனால் அதுவும் தம்முடைய மங்களாஶாஸனத்தினாலேயே உண்டாவதாக நினைத்து, 'பிரிவின்றி' என்று மங்களாஶாஸநம் செய்கிறார். (**ஆயிரம் பல்லாண்டு**) காலம் என்கிற தத்துவம் உள்ளவரை இத்தொடர்பு நித்தியமாகச் செல்லவேண்டும் என்கிறார்.

(**வடிவாய் இத்யாதி**) "உண்டான அமங்களங்கள் போவதற்கும் இல்லாத மங்களங்கள் ஏற்படுவதற்கும் தன் அருளே காரணமாக அமைந்திருக்கிற பிராட்டி 'அகலகில்லேன் இறையும்' என்று ஒருபோதும் நம்மை விட்டுப் பிரியாமல் இருக்கும்போது நமக்குத் தீங்கு ஏதேனும்

வருவதொரு அமங்க$_3$ளமுண்டோ? என்றியபடுகிறீர்?" என்ன, "தேவரீரும் பிராட்டியுமான சேர்த்தி நித்யமாய்ச் செல்ல வேணும்" என்று மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறார். (வடிவாய்) வடிவு என்று நிறமாய், இவளோட்டைச் சேர்த்தியாலே திருமேனிக்குண்டான புகரைச் சொல்லுகிறது. अप्रमेयं हि तत्तेजो यस्य सा जनकात्मजा (அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா) என்று 'ஸ்ரீஜனகராஜன் திருமகளை எனக்கென்ன இட்டுப் பிறந்த தத்வத்தோடே எதிரிட்டு வெல்ல நினைக்கிறாயோ?' என்றானிறே மாரீசன். श्रद्धया देवो देवत्वमश्नुते (ஶ்ரத்$_3$த$_4$யா

---

உண்டாகுமோ? எதற்காக இப்படி அச்சப்படுகிறீர்?" என்று எம்பெருமான் ஆழ்வாரைக் கேட்க, '' நீயும் பிராட்டியுமாகச் சேர்ந்த சேர்த்தியானது யாதொரு குறைவுமில்லாமல் நித்தியமாகச் செல்ல வேண்டும்" என்று மங்களாஶாஸநம் செய்கிறார். (**வடிவாய்**) வடிவு என்பது நிறத்தைக் குறிக்கும்; பிராட்டியுடன் சேர்ந்திருப்பதனால் எம்பெருமானுடைய திருமேனிக்கு உண்டான ஒளியைக் குறிக்கிறது. ''**அப்ரமேயம் ஹி தத் தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா**" (யாதொரு ராமபிரானிடத்தில் ஜனகன் பெண்ணாகிய சீதை இருக்கிறாளோ அந்த ராமபிரானாகிற ஒளி அளவிடமுடியாததன்றோ?) (ஸ்ரீரா.ஆ.37-18) என்று மாரீசன் கூறியிருக்கிறான் அன்றோ? ''ஸ்ரீஜனகராஜன் திருமகளான சீதையைத் தனக்காகவே கொண்டிருக்கிற தத்துவமான ராமனுடன் போர் செய்து வெல்ல நினைக்கிறாயோ?" என்று (இராவணனிடம்) மாரீசன் கூறியிருக்கிறான் அன்றோ? ''**ஶ்ரத்$_3$த$_4$யா**

தே₃வோ தே₃வத்வமஶ்நுதே) என்னக் கடவதிறே. ஆனால் இவளாலே அவனுக்கு உத்கர்ஷமாகில் அவனுடைய ஶேஷித்வம் குலையாதோ? என்னில், மாணிக்கம் ஒளியாலே பெருவிலையனாங்காட்டில் மாணிக்கத்தி னுடைய ப்ராத₄ாந்யம் அழியுமோ? பூ மணத்தாலே பெருவிலையனாங் காட்டில், பூவுக்கு ப்ராத₄ாந்யம் அழியுமோ? (வடிவாய்) ஸ்ரீகௌஸ்துப₄ாதிகள்போலே ஆப₄ரணபூ₄தையாய், அத்தால் வந்த அழகைச்

---

**தே₃வ: தே₃வத்வம் அச்நுதே"** (ஶ்ரத்தை எனும் பெயருடைய பிராட்டியினாலேயே தேவனான பகவான் தேவத் தன்மையை அடைகிறான்) (காடகம் 3-11) என்று கூறப்பட்டுள்ளதன்றோ! ஆயின், பிராட்டியால்தான் எம்பெருமானுக்குப் பெருமை என்றால், எம்பெருமானே தலைவன் என்ற நிலை குலைந்து விடாதோ எனில், குலையாது. மாணிக்கம் அதன் ஒளியால் தான் விலைமதிப்புள்ளதாகிறது என்றால், அந்த ஒளிக்குத்தான் பெருமை, மாணிக்கத்திற்குப் பெருமை கிடையாது என்று கூற முடியுமோ? பூவானது மணத்தால்தான் விலைமதிப்பு உள்ளதாகிறது என்றால், பூவிற்கு முதன்மை குறைந்து விடுமோ? (மாணிக்கத்திற்கு ஒளிபோலவும், பூவிற்கு மணம் போலவும் எம்பெருமானுக்குப் பெருமை சேர்க்கும் விஶேஷணமாகப் பிராட்டி அமைந்து உள்ளாள்.) **(வடிவாய்)** வடிவு என்பது அழகைக் குறிக்குமாதலால், எம்பெருமானுடைய திருமார்வில் ஸ்ரீகௌஸ்துபமணி போன்ற அணிகலன்கள்போல் பிராட்டியும் எழுந்தருளி இருப்பதால் வந்த அழகைக்

சொல்லுகிறதாகவுமாம். (நின் வலமார்பினில்) ஸர்வாதி$_4$கனான உன்னுடைய வலமார்பினில். ஸர்வ யஜ்ஞ மயமாய், யோகி$_3$சிந்த்யமாயிறே வடிவிருப்பது. (வலமார்வினில்) அணைக்கைக்கு அணித்தாயிருக்கை. (வாழ்கின்ற) மார்விலிருப்புதானே நித்யமாய் பே$_4$ாக$_3$ரூபமாய் இருக்கை. அம்மார்விலே இருக்கச் செய்தேயும் 'இறையும் அகலகில்லேன்' என்று அதிஶங்கை பண்ணும்படியிறே பே$_4$ாக்யதை இருப்பது. (மங்கையும்) யுவதிஶ்ச குமாரிணி (யுவதிஶ்ச குமாரிணீ) என்கிற பருவத்தைச் சொல்லுகிறது. யுவா குமார: (யுவா

---

கூறுவதாகவும் கொள்ளலாம். ***(நின் வலமார்வினில்)*** எல்லோருக்கும் மேம்பட்டவனான உன்னுடைய வலமார்பினில். அனைத்து யாகமயமாகவும், யோகிகளால் சிந்திக்கத் தகுந்ததாகவும் அன்றோ உன் வடிவிருப்பது. அப்படிப் பட்ட உன்னுடைய வல மார்வினில். ***(வலமார்வினில்)*** அணைத்துக் கொள்வதற்கு ஏற்ப அருகிலேயே பிராட்டி எழுந்தருளி யிருப்பதைச் சொல்லுகிறது. ***(வாழ்கின்ற)*** மார்வில் இருப்பதே நித்யமான, இனிமையான வாழ்ச்சி என்பதைக் கூறுகிறது. அம்மார்வில் நித்யமாக இருக்கின்ற போதும் ''இறையும் அகலகில்லேன்'' என்று (அகன்று விடுவோமோ) என்று ஐயப்படும் படியாகவன்றோ அவ்விடத்தின் இனிமை இருப்பது! ***(மங்கையும்)*** ***''யுவதிஶ்ச குமாரிணீ''*** (யௌவனப் பருவம் உடையவளாகவும் இளம் பெண்ணாகவும் இருப்பவள்) (ருக். அஷ்ட 2-8-25) என்று கூறியுள்ளபடி பிராட்டியின் பருவத்தைச் சொல்லுகிறது. ***''யுவா***

குமார:) என்று இவ்விரண்டு அவஸ்தை$_2$யுமுண்டே அவனுக்கு. இவளுக்கு கௌமார அவஸ்தை$_2$யால் வந்த மௌக்$_3$த்$_4$யமே உள்ளது; யுவதியுமாகக் கடவள். எங்ஙனே என்னில், பே$_4$ாக$_3$ஸ்ரோதஸ்ஸில் வந்தால், இவள் தளர்த்திக்கு அவன் கை கொடுக்கவேண்டும்படியான மௌக்$_3$த்$_4$யத்தைச் சொல்லுகிறது. மங்கையும் என்கிற ச ஶப்த$_3$த்தாலே மஹிஷ்யங்கரத்தைச் சொல்லுதல், மங்க$_3$ளாவஹையான இவளும் ஆஶாஸ்யை என்னுதல். (பல்லாண்டு) காலதத்வம் உள்ளதனையும் இச்சேர்த்தி நித்யமாய்ச் செல்லவேணும்.

(வடிவார்சோதி இத்யாதி) "இச்சேர்த்திக்கு ஒரு தீங்கு வாராதே கல்மதிளிட்டாற்போலேயிருக்கிற ஆழ்வார்களைப்

---

*குமார:*" (வாலிபனாகவும் சிறுவனாகவும் இருப்பவன்) என்று கூறியுள்ளபடி, இரண்டு நிலைகளுமே எம்பெருமானுக்கு உண்டு. பிராட்டிக்கு சிறு பெண்ணாக இருப்பதால் வரும் இளமை மட்டுமே உள்ளது. ஆனால் பிராட்டி யுவதியும் ஆகக் கடவள். எங்ஙனே எனில், எம்பெருமானோடு கலக்கும்போது இவளுடைய தளர்த்திக்கு அவன் கை கொடுக்க வேண்டும்படியிருக்கும் இவளுடைய இளமையைச் சொல்லுகிறது. மங்கையும் என்கிற உம்மையினால் மங்களங்களுக்கு இருப்பிடமான பிராட்டியும் வாழ்த்தத் தகுதியானவளே என்பது கூறப்படுகிறது. **(பல்லாண்டு)** காலம் என்கிற தத்துவம் உள்ளவரை எம்பெருமானும் பிராட்டியுமான இச்சேர்த்தி நித்யமாகச் செல்ல வேண்டும் என்று வேண்டுகிறார்.

**(வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு)** "இச்சேர்த்திக்கு ஒரு தீங்கும் வராமல்

பாரீர்" என்ன, 'அவர்களோட்டைச் சேர்த்திக்கு என்ன தீங்கு வருகிறதோ?' என்று மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறார். (வடிவார் சோதி) காளமேக$_4$நிப$_4$ ஶ்யாமமான திருமேனி, ஸ்வ தேஜஸ்ஸாலே வ்யாப்தமாம்படி இருக்கை. பூருஷ க்ருஷ்ணபிங்கலம் (புருஷம் க்ருஷ்ணபிங்க$_3$ளம்) என்னும்படியா யிறே இருப்பது. தேஜோராஶியாயிருக்கும் வடிவை உடையவன் என்னவுமாம். (வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு) வலவருகே நித்யவாஸம் பண்ணுமவனாய்,

---

காப்பதற்குக் கல்மதில் அமைத்தது போன்று இருக்கின்ற திருவாழி, திருச்சங்கு ஆழ்வார்களைப் பாரும்!" என்று எம்பெருமான் கூற, அத் திருவாழி திருச்சங்குகளோடு சேர்ந்த சேர்த்திக்கு என்ன தீங்கு வந்துவிடுமோ என்று அஞ்சி அவர்களுக்கு மங்களாஶாஸனம் செய்கிறார். **(வடிவார் சோதி)** கரிய மேகம் போன்ற எம்பெருமானுடைய திருமேனியைத் திருவாழி யாழ்வான் தன்னுடைய ஒளியால் பரவும்படியைச் சொல்லுகிறது. **"புருஷம் க்ருஷ்ண பிங்க$_3$லம்"** (புருஷன் என்ற பெயரை உடையவனாகவும், கறுப்பும் மஞ்சளும் கலந்த நிறத்தை உடையவனாகவும்) (தை. நா. 12) என்று கூறப்பட்டுள்ளபடியன்றோ அவனுடைய நிறம் உள்ளது. (எம்பெருமானுடைய கறுப்பு நிறத்துடன் திருவாழி ஆழ்வானுடைய ஒளியின் மஞ்சள் நிறமும் சேர்ந்துள்ளது என்பது கருத்து.) அல்லது, வடிவார் சோதி என்பதற்கு ஒளித்திரள்களாயிருக்கும் வடிவை உடையவன் (திருவாழியாழ்வான்) என்றும் கூறலாம். **(வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு)** வலது புறத்தில் எப்பொழுதும் வாசம்

பிறர்க்கு அநபி$_4$ப$_4$வநீயனாயிருக்கிற ஆழ்வானோட்டைச் சேர்த்தி நித்யமாய்ச் செல்லவேணுமென்கிறார். ஆழியும் என்கிற 'ச' ஶப்த$_3$த்தாலே ஆயுதா$_4$காரத்தாலே ரக்ஷகமாகக் காட்ட ஆப$_4$ரணபு$_3$த்$_3$தி$_4$யாலே அவனையும் குறித்து மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறாரென்கை.

(படைபோர் இத்யாதி) "நம் கையை விடாதே த்$_4$வநியாலே எதிரிகளை அழிக்கும் இவனைப் பாரீர்!" என்ன (படை போர் புக்கு முழங்கும்) ஸேநையையுடைய யுத்$_3$த$_4$த்திலே புக்கு முழங்கும் என்னுதல்; யுத்$_3$த$_4$த்திலே

---

செய்பவனாகவும் பிறரால் வெல்லமுடியாதவனாகவும் இருக்கின்ற திருவாழியாழ்வானேடு சேர்ந்துள்ள சேர்த்தி நித்யமாகச் செல்ல வேண்டும் என்று மங்களாஶாஸநம் செய்கிறார். எம்பெருமான் ஆழ்வாருடைய அச்சத்தைப் போக்குவ தற்காக ஆயுதமான திருவாழியைக் காப்பாகக் காட்ட, ஆழ்வார், அத்திருவாழியின் அழகையும் ஒளியையும் கண்டு ஆபரணமாக நினைத்து அத்திருவாழி ஆழ்வானுக்கும் மங்களாஶாஸனம் செய்கிறார் என்பது 'ஆழியும்' என்கிற உம்மையினால் உணர்த்தப்படுகிறது.

**(படைபோர் புக்கு முழங்கும் அப் பாஞ்சசன்னியமும் பல்லாண்டு)** "நம் கையை ஒருபோதும் விடாமல் இருந்துகொண்டு, தன்னுடைய ஒலியாலேயே எதிரிகளை அழிக்கும் இவனைப் பாரீர்" என்று எம்பெருமான் சங்கைக் காட்டினான். **(படை போர் புக்கு முழங்கும்)** படையை (சேனையை) உடைய போரிலே புக்கு முழங்கும் என்றோ அல்லது போரிலே

ஆயுத$_4$மாய்ப் புக்கு முழங்கும் என்னுதல். (முழங்கும்) स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् (ஸ கோ$_4$ஷோ த$_4$ார்தராஷ்ட்ராணாம் ஹ்ருத$_3$யாநி வ்யத$_3$ாரயத்) என்றும், यस्य नादेन दैत्यानां बलहानिरजायत (யஸ்ய நாதே$_3$ந தை$_3$த்யாநாம் ப$_3$லஹாநிரஜாயத) என்றும் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும், அநுகூலர் வாழும்படியுமாயிறே த்$_4$வநி இருப்பது. இத்$_4$வநி இவர்க்கு ப$_4$யஸ்த$_2$ாநமானபடி என்? என்னில் த்$_4$வநிவழியே நின்று இடம் காட்டிக் கொடுக்கும் என்று ப$_4$யப்படுகிறார். (அப்

---

படைக்கலமாக (ஆயுதமாக)ப் புக்கு முழங்கும் என்றோ பொருள் கொள்ளலாம். ''**ஸ கோ$_4$ஷ: த$_4$ார்த்தராஷ்ட்ரா ணாம் ஹ்ருத$_3$யாநி வ்யத$_3$ாரயத்**'' (கண்ணன் ஊதிய அந்தச் சங்கின் ஒலியானது திருதராஷ்டிரனுடைய பிள்ளைகளின் இதயங்களைப் பிளந்தது) (கீதை 1-19) ''**யஸ்ய நாதே$_3$ந தை$_3$த்யாநாம் ப$_3$ல ஹாநி: அஜாயத**'' (எந்தப் பாஞ்சஜந்யம் என்ற சங்கின் ஒலியினால் அசுரர்களுக்கு பலம் குறைந்ததோ) (வி.பு. 5-21-29) என்றும் கூறியுள்ளபடி எதிரிகள் மண்ணைக் கவ்வும்படியாகவும், அன்பர்கள் வாழும்படியாகவும் அன்றோ சங்கின் ஒலி இருப்பது! இப்படிப்பட்ட ஒலி ஆழ்வாருக்கு அச்சத்தை விளைத்து மங்களாஶாஸநம் செய்யத் தூண்டியதற்குக் காரணம் என்ன எனில், எம்பெருமானுடைய விரோதிகளுக்கு, அவன் இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுப்பது இவ்வொலியன்றோ? எனவே அதனால் எம்பெருமானுக்கு ஒரு தீங்கும் வராதிருக்க வேண்டுமே என்று அஞ்சுகிறார். (அப்

பாஞ்சசன்னியமும்) முன்னிலையாயிருக்க, பரோக்ஷ நிர்தே₃ஶம் பண்ணுவான் என்? என்னில், புத்ரனை அலங்கரித்த தாய், தன் கண்படிலும் கண் எச்சிலாம் என்று பார்க்கக் கூசுமாபோலே மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிற தம்முடைய கண்களையும் செறித்து முகத்தை மாறவைத்துச் சொல்லுகிறார். அன்று யுத்₃த₄த்திற் பிறந்த ப்ரமாத₃த்துக்கு இன்று மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிறார் என்றுமாம்.

இவ்விரண்டு பாட்டும் திருமந்த்ரார்த்த₂மாயிருக்கிறது. 'அடியோமோடும்' என்கிறவிடத்திலே ப்ரணவார்த்த₂த்தைச்

---

**பாஞ்சசன்னியமும்)** கீழே பாசுரத்தில் 'நின்' என்று முன்னிலையில் கூறியிருக்க, இங்கு 'அப்' பாஞ்சசன்னியம் என்று படர்க்கையில் கூறுவதற்குக் காரணம் என்ன எனில், ஒரு தாயானவள் தன் மகனை நன்கு அலங்காரம் செய்தபிறகு தன் கண்பட்டாலும் அது கண்ணெச்சிலாய் (த்ருஷ்டியாய்) விடும் என்று கருதித் தன்மகனை உற்றுப் பார்ப்பதற்குக் கூசுவது போல, ஆழ்வாரும், எம்பெருமானும் பாஞ்சசன்னிய மும் சேர்ந்த சேர்த்தியின் அழகைத் தம் கண்களால் கண்டால் எங்கே தம் கண்ணே பட்டு விடுமோ என்று அஞ்சி, தம்முடைய கண்களை மூடிக் கொண்டு, முகத்தையும் திருப்பி, 'அப் பாஞ்ச சன்னியம்' என்கிறார். அல்லது, அன்று பாரதப்போரில் ஏற்பட்ட ஆபத்திற்கு இன்று மங்களாஶாஸநம் செய்ய எண்ணி, 'அப் பாஞ்சசன்னியமும் பல்லாண்டு' என்கிறார் என்றுமாம்.

இவ்விரண்டு பாசுரங்களும் 'ஓம் நமோ நாராயணாய' என்கிற திருமந்திரத்தின் பொருளை

சொல்லிற்று. முதற்பாட்டில் 'பல்லாண்டு' என்கிற ப்ரத$_2$ம பத$_2$த்தாலே நமஸ்ஸப்தா$_3$ர்த்த$_2$ம் சொல்லிற்று. 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா' என்று அப்பாட்டில் விக்$_3$ரஹ யோக$_3$த்தையும், ஶௌர்ய வீர்யாதி$_3$ கு$_3$ணயோக$_3$த்தையும், இரண்டாம் பாட்டில் விபூ$_4$தியோக$_3$த்தையும் சொல்லுகையாலே நாராயணஸப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் சொல்லிற்று. 'உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' என்கையாலே சதுர்த்தி$_2$யில் ப்ரார்த்தி$_2$க்கிற அர்த்த$_2$த்தைச் சொல்லிற்றாய்த்து.

மூன்றாம் பாட்டு. (வாழாள் இத்யாதி$_3$) கீழ் இரண்டு பாட்டாலே தாம் திருப்பல்லாண்டு பாடினார். இனி மேல்,

---

உடையனவாயிருக்கின்றன. 'அடியோமோடும்' என்றவிடத்தில் 'ஓம்' என்கிற ப்ரணவத்தின் பொருளான ஜீவாத்மாவின் அடிமைத் தன்மை கூறப் பெறுகிறது. பல்லாண்டு என்கின்ற முதல் சொல்லால் நம: என்கிற பதத்தின் பொருள் கூறப்படுகிறது. "மல்லாண்ட திண்டோள் மணி வண்ணா - உன் சேவடி" என்கிறவிடத்தில் எம்பெருமானுடைய வீரம் முதலிய குணங்களும், திருமேனியும் கூறப் படுவதாலும், 'அடியோம், ஆழி, பாஞ்சசன்னியம்' என்கின்ற இடங்களில் எம்பெருமானுடைய உபய விபூதிகளும் கூறப் படுவதாலும் அங்கு நாராயண சப்தத்தின் பொருள் கூறப்படுகிறது. 'உன்சேவடி செவ்வி திருக் காப்பு' என்று 'ஆய' என்கின்ற நான்காம் வேற்றுமையில் பிரார்த்திக்கின்ற கைங்கர்யத்தைக் காட்டுகிறது.

மூன்றாம் பாட்டு. முதல் இரண்டு பாசுரங்களால், பெரியாழ்வார் பகவானுக்குத் தாம்

தம்முடைய மங்க₃ளாஶாஸநத்தாலே தமக்குப் பர்யாப்தி பிறவாமையாலே, चतुर्विधा भजन्ते मां (சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம்) என்கிறபடியே ஐஶ்வர்ய கைவல்ய பகவச் சரணார்த்தி₂கள் மூவரையும் கூட்டிக் கொள்வதாக நினைத்து, அதில் மங்க₃ளாஶாஸநத்துக்கு ப₄க₃வத் ப்ராப்திகாமர் ப்ரத்யாஸந்நராகையாலே அவர்களை

---

மங்களாஶாஸநம் செய்தார். தாம் ஒருவர் மட்டும் மங்களாஶாஸநம் செய்ததால் திருப்தி அடையாததால் மற்றவர்களையும் மங்களாஶாஸநம் செய்ய அழைக்கிறார் இனி வரும் பாசுரங்களில். "சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோர்ஜுந, ஆர்த்தோ₂ ஜிஜ்ஞாஸு: அர்த்தார்த்தீ₂ ஜ்ஞாநீ ச ப₄ரதர்ஷப₄" (அர்ஜுனா! இழந்த செல்வத்தை அடைய விரும்புபவன், புதிதாகச் செல்வத்தைப் பெற விரும்புபவன், தன் ஆத்மாவையே அநுபவிக்க விரும்புபவன், பகவானான என்னையே அடைய விரும்புபவன் என்று நான்குவிதமான புண்ணிய வான்கள் என்னை வேண்டுகிறார்கள்) (கீதை 7-16) என்று கண்ணபிரான் கூறியுள்ளான். எனவே பகவானை வேண்டுபவர்களான செல்வத்தை விரும்பும் ஐஶ்வர்யார்த்திகள், ஆத்மாநுபவத்தை விரும்பும் கைவல்யார்த்திகள், பகவானை அடையவிரும்பும் பகவத்ப்ராப்திகாமர் ஆகிய மூவகையாளரையும் மங்களாஶாஸநம் செய்வதற்கு அழைக்க விரும்புகிற பெரியாழ்வார், மற்றவர்களைவிட, பகவானை அனுபவிக்க விரும்புபவர்கள் (பகவத்ப்ராப்திகாமர்) பகவானுக்கு மிகவும் நெருக்கமானவர்களாகையால்

அழைக்கிறார். एकस्वादु न भुञ्जीत (ஏகஸ்வாது$_{3}$ ந பு$_{4}$ஞ்ஜீத) என்கிற ந்யாயத்தாலே இம்மங்க$_{3}$ளாஶாஸந ரஸம் எல்லாரும் பு$_{4}$ஜிக்க வேணும் என்னும் நினைவாலே அழைக்கிறார் என்றுமாம். அவர்களோடே கூட மங்க$_{3}$ளாஶாஸநம் பண்ணுகை தமக்கு த$_{4}$ாரகமாகையாலே என்றுமாம். "அடியார்தம் இன்பமிகு பெருங்குழுவு கண்டு" என்றும், "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்று கொலோ" என்றும், கண்ணாலே காண்கையும் அத்திரளிலே புகுருகையும் இவையெல்லாம் உத்$_{3}$தே$_{3}$ஶ்யமாயிறே இருப்பது.

---

*அவர்களை முதலில் அழைக்கிறார். "ஏக: ஸ்வாது$_{3}$ ந பு$_{3}$ஞ்ஜீத" (இனியவைகளை ஒருவனாக உண்ணக் கூடாது) என்று கூறப்பட்டுள்ளபடியால், இம் மங்களாஶாஸநத்தின் சுவையை எல்லோரும் அநுபவிக்க வேண்டும் என்னும் நினைவால் மற்றவர்களையும் அழைக்கிறார் என்றும் கொள்ளலாம். அவர்களுடன் சேர்ந்து மங்களாஶாஸநம் செய்வது தமக்கு இருப்பை உண்டாக்குவது என்பதனால் அவர்களையும் அழைக்கிறார் என்றும் கொள்ளலாம். "அடியார்தம் இன்பமிகு பெருங்குழுவு கண்டு" (பெருமாள் திருமொழி 1-10) என்று குலசேகராழ்வார் அருளிச்செய்துள்ளபடியும், "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்றுகொலோ" (திருவாய்மொழி 2-3-10) என்று நம்மாழ்வார் அருளிச்செய்துள்ளபடியும், அடியவர்களைக் கண்ணால் காண்பதும், அவர்கள் திரளில் புகுவதும் விரும்பத்தக்கதாகவன்றோ இருப்பது!*

வாழாட்பட்டுநின்றீர் உள்ளீரேல்
வந்து மண்ணும் மணமும் கொண்மின்*
கூழாட்பட்டு நின்றீர்களை
எங்கள் குழுவினில் புகுதலொட்டோம்*
ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர்வாழ்* இலங்கை
பாழாளாகப் படைபொருதானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 3

| | |
|---|---|
| வாழ் ஆள் | - தொண்டு செய்வதாகிய பயனில் |
| பட்டு | - பொருந்தி |
| நின்றீர் | - நிலைநின்றவர்களாய் |
| உள்ளீரேல் | - இருப்பீர்களானால், |
| வந்து | - (விரைவாக) வந்து |
| மண்ணும் | - திருமுளைக்குப் புழுதிமண் சுமத்தலையும் |
| மணமும் | - அக் கல்யாணத்திற்கு உகந்தவர்களாக இருத்தலையும் |
| கொண்மின் | - கொள்ளுங்கள். |
| கூழ் ஆள்பட்டு | - சோற்றுக்காகப் பிறர்க்கு அடிமைப்பட்டு |
| நின்றீர்களை | - எங்கும் நிற்கும் உங்களை |
| எங்கள் குழுவினில் | - எங்கள் கூட்டத்தில் |
| புகுதல் ஒட்டோம் | - புக விடமாட்டோம். |
| நாங்கள் | - நாங்களோ என்றால், |
| ஏழாட்காலும் | - ஏழேழு தலைமுறைகளிலும் |
| பழிப்பு இலோம் | - ஒருவிதமான குற்றமும் இல்லாதவர்கள்; |
| இராக்கதர் வாழ் | - அரக்கர்கள்வாழ்ந்து வந்த |
| இலங்கை | - இலங்கையானது |
| பாழ் ஆள் ஆக | - பாழடைந்த ஆள்களை உடையதாகும்படி |
| படை பொருதானுக்கு | - போர் செய்தவனுக்கு |
| பல்லாண்டு கூறுதும் | - இன்று திருப்பல்லாண்டு பாடுபவர்கள். |

(வாழாள்) என்று நிரதிஶயஸுக ரூபமான வ்ருத்தியைச் சொல்லுகிறது. வ்யதிரிக்த விஷயங்களில் அடிமை து$_3$ராராத$_3$மாகையாலும், து$_3$ஶ்ஶகமாகையாலும், அத்யல்ப ப$_2$லமாகையாலும் து$_3$:க்க$_2$ ரூபமாயிறே இருப்பது. सर्वं परवशं दुःखं (ஸர்வம் பரவஶம் து$_3$:க்க$_2$ம்) सेवा श्ववृत्तिः (ஸேவா ஶ்வவ்ருத்தி:) என்னக் கடவதிறே. இவ்விஷயந் தன்னிலும் ப்ரயோஜநாந்தரபரராய் இழிந்தால் ப$_2$லம் ப$_3$ந்த$_4$கம் ஆகையாலும், அநந்யப்ரயோஜநரோபாதி அநவரத ப$_4$ாவநையும் அந்திம ப்ரத்யயமும்

---

*(வாழாள்)* என்று எல்லையற்ற சுகமே வடிவான செயலை (கைங்கர்யத்தை)ச் சொல்லுகிறது. எம்பெருமானைத்தவிர மற்ற விஷயங்களில் தொண்டு செய்வது எளிதாகச் செய்யக் கூடியதல்ல என்பதாலும், மிகவும் கடினம் என்பதாலும், பயனும் மிகமிகக் குறைவு என்பதாலும் அது துன்பத்தோடு கூடியதாகவே இருக்கும். **“ஸர்வம் பரவஶம் து$_3$:க்க$_2$ம்”** (பிறருக்கு அடிமைப்பட்டிருத்தல் துன்பமயமானது) (மநு. 4-160) என்றும் **“ஸேவா ஶ்வ வ்ருத்திராக்$_2$யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்”** (மநு.4-6) (அடிமைசெய்வது நாயின் தொழிலாகச் சொல்லப் பட்டுள்ளது. அதனால் அதை விலக்க வேண்டும்) என்றும் கூறப்பட்டுள்ளதன்றோ! எம்பெருமானுக்குத் தொண்டு செய்கிறவிடத்திலும் வேறுபயன்களுக்காகத் தொண்டு செய்தால், அதனால் கிடைக்கும் பயன் நம்மை இவ்வுலக வாழ்க்கையில் கட்டுவதற்குக் காரணமாக அமைந்துவிடுகிறது; மேலும் வேறுபயன்கருதாதவர்களைப் போலவே

வேண்டுகையாலும் து$_3$:க்க$_2$ ப்ராயமாயிருக்கும்; ஸாத$_3$நாந்தர நிஷ்டனுக்கும் கர்த்தவ்ய பு$_3$த்$_3$தி$_4$யாலே ரஸமில்லை. இக்குறைகளொன்றுமின்றிக்கே ப்ராப்த விஷயத்திலே தன்னைப் பேணாதே பரஸம்ருத்$_3$தி$_4$யை ஆஶாஸிக்க, ஸர்வ நிரபேக்ஷனான ஈஶ்வரன் இத்தைக் கண்டு 'இதொரு ப்ரேம ஸ்வபா$_4$வம் இருந்தபடி என்!' என்று ப்ரீதனாக, இவனுக்கு அந்த ப்ரீதியே புருஷார்த்த$_2$மாயிறே இருப்பது. (பட்டு) என்றது,

---

இவர்களுக்கும் எம்பெருமானை இடைவிடாமல் நினைத்தல், மரணகாலத்தில் அவனையே நினைத்திருத்தல் போன்றவையும் அவசியம் வேண்டும். இக்காரணங்களால் (வேறு பயன் கருதி எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதும்) துன்பமயமாகவே இருக்கும். எம்பெருமானுடைய அருளைக் கொண்டு அவனைப் பெற நினையாமல் தங்களுடைய செயல்களாலே அவனைப் பெற நினைப்பவர்களுக்கும் தங்கள் முயற்சியால் செயல்களை வருந்திச் செய்கின்றபடியால் வருத்தத்தையே உண்டாக்கும். இக்குறைகள் எதுவும் இல்லாமல், மங்களாஶாஸநம் செய்பவர்கள், தங்கள் நன்மைகளை விரும்பாமல், தங்களுக்கு வகுத்த தலைவனான எம்பெருமானுக்கு நன்மை உண்டாக வேண்டும் என்று விரும்ப, ஒன்றையும் எதிர்பாராதவனான எம்பெருமானும் இதைக்கண்டு "இவர்களுக்குத்தான் நம் மீது எவ்வளவு அன்பு!". என்று மகிழ்சியடைகிறான்; அந்த மகிழ்ச்சியை அன்றோ மங்களாஶாஸநம் செய்பவனும் வேண்டுவது! (பட்டு) என்றது உப்புக் கடலில்

‘உவர்க்கடலில் முத்துப்பட்டது’ என்றது போலே. ‘நான்’ ‘எனக்கு’ என்றிருக்கிற ஸம்ஸாரத்திலே ப$_4$க$_3$வத் ஸம்ருத்$_3$தி$_4$யை ஆஶாஸிக்கும்படி கையொழிந்திருப்பார் சிலரைப் பெறுகையாவது அலப்$_4$யலாப$_4$ம் என்னுமிடம் தோற்ற அருளிச் செய்கிறார். (நின்றீர்) வாயு பரவஶமாய்த் திரிகிற த்ருணம் போலே பரதந்த்ரனாய்த் திரிகிற ஸம்ஸாரி சேதநனுக்கு, ப$_4$க$_3$வத் ஜ்ஞாந பூர்வகமாக தத்ஸம்ருத்$_3$தி$_4$யை ஆஶாஸிக்கப் பெற்றாலிறே ஸ்தி$_2$தி உண்டாவது.(உள்ளீரேல்) स महात्मा सुदुर्लभः (ஸ

---

முத்துப் பட்டது என்று கூறுவது போன்றது. அதாவது ஒவ்வொருவரும் ‘நான், எனக்கு’’ என்றிருக்கின்ற இவ்வுலகில், எம்பெருமானுடைய நன்மையை விரும்புபவர்கள் சிலரைப் பெறுவது கிடைத்தற்கு அரியது என்னும் கருத்து தோன்ற ஆழ்வார் ‘பட்டு’ என்று அருளிச்செய்கிறார். **(நின்றீர்)** காற்றில் அலைகிற புல் போலே வினைப் பயனால் அலைப்புண்டு திரிகிற ஸம்ஸாரியான சேதநனுக்கு, எம்பெருமானைப் பற்றிய அறிவும், அவனுக்கு மங்களாஶாஸநம் பண்ண வேண்டும் என்ற எண்ணமும் உண்டானால் அன்றோ நிலைநிற்றல் என்பது உண்டாகும்! **(உள்ளீரேல்)** (வாழ வேண்டும் என்ற ஆசை உள்ளவர்கள்) எவரேனும் இருப்பீர்களே யானால் என்கிறார். ‘‘**ப$_3$ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்$_3$யந்தே, வாஸுதே$_3$வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது$_3$ர்லப$_4$:**’’ (பல பிறவிகளுக்குப் பின் ஞானியானவன் ‘வாஸுதேவனே (எனக்கு) எல்லாம்’ என்று உபாஸிக்கிறான். அப்படிப்பட்ட ஞானி கிடைத்தற்கு

மஹாத்மா ஸுது$_3$ர்லப$_4$:) என்று, அநந்யப்ரயோஜநரைக் கிடையாதென்று ஸர்வேஶ்வரன் கை விட்ட ஸம்ஸாரம் ஆகையாலே மங்க$_3$ளாஶாஸநத்துக்கு ஆள் தேட்டமாயிறே இருப்பது. நாக$_3$பாஶத்தினன்று அடைய மோஹித்துக் கிடக்க, திருவடியும் ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வானும் 'ப்ராணன் உடையார் உண்டோ?' என்று தேடினாப் போலே, ஸம்ஸாரத்தில் ஸ்வரூபஜ்ஞாநமுடையார் தேட்டமாயிறே இருப்பது. இந்த யதி$_3$ ஶப்$_3$த$_3$த்தாலே, ஸம்ஸாரத்தில் வைஷ்ணத்வம் துர்லப$_4$ம் என்றதாய்த்து.

அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவர்களும் 'நம்மை விரும்புவார் சிலருண்டாவதே!' என்று ஸங்கிஹிதராக;

---

மிக மிக அரியவன்) (கீதை 7-19) என்று அவனே கூறியுள்ளபடி, எம்பெருமானையே எல்லாமாகக் கொண்டவர்கள் கிடைப்பதரிது என்று ஸர்வேஶ்வரனே கைவிட்ட உலகமாகையால், மங்களாஶாஸநத்திற்கு ஆள் தேடும்படியாகவன்றோ இருப்பது! இலங்கையில் நடந்த போரின்போது நாகபாசத்தினால் (பிரம்மாஸ்த்ரத்தினால் என்று அரும்பதத்தில் திருத்தம் காட்டப் பெற்றுள்ளது) கட்டுண்டு அனைவரும் மயங்கிக் கிடக்க "யாரேனும் உயிருடன் இருக்கிறார்களோ?" என்று அனுமனும் விபீஷணனும் தேடியதுபோல இவ்வுலகில், உண்மை அறிவுடன் மங்களாஶாஸநம் செய்பவர்கள் தேடிக் கண்டுபிடிக்க வேண்டிய நிலையிலன்றோ உள்ளனர்! 'உள்ளீரேல்' என்றதனால், வைஷ்ணவத்வம் இவ்வுலகில் மிகவும் அரிது என்பது கூறப்படுகிறது.

எம்பெருமானையே எல்லாமாகக் கொண்டவர்களும் "நம்மையும் விரும்புபவர்கள் சிலர்

(வந்து) அவர்களுடைய ஸ்வருபஸ்வப$_4$ாவம் ஆராய்வதற்கு முன்பே அவர்களோடே கலந்து கொடு நிற்க வேண்டும்படியான த்வரை சொல்லுகிறது. (மண்ணும் மணமும் கொண்மின்) என்கிறார். மண்ணுக்கும் மணத்துக்கும் உரியார் அந்தரங்க$_3$மான அடியாரிறே. அடிமை விலையோலை எழுதும் போதும் 'மண்ணுக்கும் மணத்துக்கும் உரியனாக வேணும்' என்றிறே எழுதுவது. மண்ணாவது, ஸ்வாமிக்கு ஒரு மங்க$_3$ளமுண்டானால் அங்குரார்ப்பணத்துக்குப் புழுதி மண் சுமக்கை; அந்த ங்யாயத்தாலேயிறே நம் ஆழ்வார்களுக்கு இது

---

இருக்கின்றார்களே" என்று அருகில் வர; **(வந்து)** அவர்களுடைய தன்மை, இயல்பு இவற்றை ஆராய்வதற்குமுன் அவர்களுடன் கலந்துகொண்டு நிற்க வேண்டும்படி யான விரைவு கூறப்படுகிறது. **(மண்ணும் மணமும் கொண்மின்)** என்கிறார். இவர்கள் மண்ணுக்கும் மணத்திற்கும் உரிய நெருக்கமான அடியவரன்றோ! அடிமை விலை ஓலை எழுதும்போது "மண்ணுக்கும் மணத்திற்கும் உரியவனாக வேண்டும்" என்று எழுதும் வழக்கம் உள்ளதன்றோ! மண்ணாவது - தலைவனுக்கு ஒரு மங்களம் உண்டானால், திருமுளைத் திருநாளுக்குப் புழுதி மண் சுமக்கை. (ஏதேனும் சுபகாரியங்கள் நிகழ்ந்தால், முதலில் அங்குரார்ப்பணம் என்ற நிகழ்ச்சிக்காகப் புழுதிமண் எடுத்து வருதல் மரபு. அதைத் தலைவனுக்கு மிகவும் நெருங்கிய அடியவரே எடுத்துவருவர்.) அதனால்தான் ஸேநாபதியாழ்வான் (விஷ்வக்ஸேநர்) முதலியவர்களும் இதைச் செய்கிறார்கள். (கோயில்களில் உத்ஸவங்களின்

க்ருத்யமாகிறது. மணமாவது, அந்தக் கல்யாணத்துக்குத் தான் அபி$_4$மாநியாயிருக்கை. இவ்விரண்டும், ஸர்வ கைங்கர்யத்துக்கும் உபலக்ஷணம். 'கொண்மின்' என்றத்தால், அடிமை செய்யுமிடத்தில் கிடந்த ஆனை கண்டு ஏறுகையன்றிக்கே, சிலர் தரக் கொள்ளவேணும் என்கையும், தருமவர்களும் 'உங்களதான அடிமையை நீங்கள் ஸ்வீகரியுங்கோள்' என்று சீரிதாகக் கொடுக்கக்கடவர்கள் என்கையுமாகிற ஶாஸ்த்ரார்த்த$_2$த்தை வெளியிடுகிறது.

(சூழாளித்யாதி) இவர் அழைத்த வாசியறியாதே ப்ரயோஜநாந்தரபரரடையப் புகுரத் தொடங்கிற்று;

---

போது அங்குரார்ப்பணத்திற்கு மண் எடுத்துவர சேனை முதன்மையார் எழுந்தருளும் மரபு இன்றும் உள்ளது.) மணம் கொள்ளுதலாவது, அந்தச் சுப நிகழ்ச்சியானது தனக்கே நடைபெறுவதுபோல் மகிழ்ந்திருக்கை. இவ்விரண்டாலும் எல்லாத் தொண்டுகளையும் சொன்னதாகும். தரையில் கிடக்கின்ற யானையின் கழுத்தில் நாமே ஏறிவிட்டால் அவ்வானை நம்மைக் கீழே தள்ளிவிடும் அபாயமுண்டு. அப்படி அல்லாமல், யானையின் இசைவுடன் அதன்மீது ஏறுவதன்றோ சிறந்தது! அதுபோலக் கைங்கர்யமும் சிலரால் தரப் பெற்று நாம் கொள்ள வேண்டும் என்பதும், கொடுப்ப வர்களும் "உங்களுடைய அடிமையை (கைங்கர்யத்தை) நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று சீரிய முறையில் கொடுக்க வேண்டும் என்பதுமான ஶாஸ்த்ரார்த்தம் "கொண்மின்" என்ற சொல்லால் வெளியிடப்படுகிறது.

அவர்களை நிஷேதி₃க்கிறார். 'கூழாள்' என்று, சோற்றுக்காக ஆரேனுக்கும் தன்னை எழுதிக் கொடுக்கை; இது ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உபலக்ஷணம். தன்னை 'ப₄கவத் தா₃ஸ்யைகபே₄ாகன்' என்னுமிடம் அறியாதே ப்ரயோஜநாந்தரங்களைக் குறித்து அவன்றன்னையே ஆஶ்ரயிக்கிறார்களிறே. 'கூழாள்' என்று, அநந்ய ப்ரயோஜநராயிழிந்து, ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிக் கொள்ளும் இருகரையரைச் சொல்லுகிறதென்றுமாம். 'பட்டு' என்கிறது, அகப்பட்டென்றபடி. அதாவது ப₃ந்த₄கமாகையாலே ஸ்வரூபவிரோதி₄யாய்

---

(**கூழாள் பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுதல் ஒட்டோம்**) பெரியாழ்வார், வேறுபயன் கருதாதவர்களை மட்டுமே அழைத்தார் என்ற வேறுபாடு தெரியாமல், வேறு பயன்களை விரும்புபவர்களும் அங்கே புகத் தொடங்கினார்கள்; அவர்களைத் தடுக்கிறார். '**கூழாள்**' என்பது சோற்றுக்காகத் தன்னை யாருக்கும் எழுதிக் கொடுத்துவிடுபவனைக் கூறுகிறது. மற்ற பயன்களை விரும்புபவர்களையும் இது குறிக்கும். பகவானுக்கு அடிமை செய்வதையே பயனாக உடையவன் தான் என்பதை அறியாமல், வேறு பயன்களைக் குறித்து எம்பெருமானையே வேண்டுகின்றார்களே இவர்கள்! 'கூழாள்' என்பது வேறுபயன் கருதாதவர் களைப்போல எம்பெருமானிடம் வந்து, வேறுபயன்களைக் கேட்கின்றவர்களைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். 'கூழாள் பட்டு' என்பதில் 'பட்டு' என்பது அகப்பட்டு என்பது போன்றது. அதாவது சோற்றில் ஆசையானது,

அநர்த்தஹேத்தைப் பண்ணும் என்னுமத்தாலே சொல்லுகிறது. (நின்றீர்களை) ப₃ஹு₂ வசநத்தாலே 'உள்ளீரேல்' என்று தேடவேண்டாதே பார்த்த இடமெங்கும் ப்ரயோஜநாந்தரபரராயிருக்கை. 'எங்கள் குழு' என்று இத்திரளுக்குண்டான வ்யாவ்ருத்தி தோற்ற அருளிச் செய்கிறார். தே₃ஹாத்மாபி₄மாநிகள். தே₃வதாந்தர ப்ரவணர், இவ்விஷயந் தன்னிலே புகுந்து ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷிப்பார், அநந்ய ப்ரயோஜநராய் ஸாத₃நாந்தரங்களிலே அந்யபரராய் இருப்பாராகிற திரள்களெல்லாவற்றிலும் வ்யாவ்ருத்தமாய்

---

ஜீவாத்மாவை இவ்வுலக வாழ்வில் கட்டுப்படுத்திவிடுகிறபடியால், ஜீவாத்மாவின் தன்மைக்குச் சேராததாய், தீங்கை விளைவிக்கும் என்பதனால் 'சோற்றின் ஆசையில் அகப்பட்டு' என்று கூறப்படுகிறது. **(நின்றீர்களை)** நின்றீர்கள் என்று பன்மையில் கூறுகிறபடியால், கீழே 'உள்ளீரேல்' என்று வேறுபயன்கருதாதவர்களைத் தேடியதுபோல் தேட வேண்டாமல் பார்த்த பார்த்த இடமெங்கும் பிற பயன்களை விரும்புபவர்களே நிறைந்திருப்பது கூறப்படுகிறது. **(எங்கள் குழுவினில்)** எங்கள் குழு என்று மற்றவர்களைவிட தங்கள் திரளுக்கு உள்ள வேறுபாடு தோன்றும்படி அருளிச்செய்கிறார். உடலையே ஆத்மாவாக நினைப்பவர்கள், வேறு தேவதைகளைத் தொழுபவர்கள், எம்பெருமானிடத்திலேயே வந்து வேறு பயன்களைக் கேட்பவர்கள், எம்பெருமானை அடைவதற்கும் அவனருளையே உபாயமாகக் கொள்ளாமல், வேறு ஸாதநங்கள் மூலம் அவனை அடைய

அன்றோ எங்கள் திரளிருப்பது என்கிறார். (புகுதல் ஒட்டோம்) 'ஆரே புகுவார்' என்று ப்ரார்த்திக்கிற இவர், நிர்த்தயரைப்போலே 'புகுரலொட்டோம்' என்பானென்? என்னில்; வஸிஷ்டன் பரம தயாளுவானாலும் சண்டாளனை அக்நி கார்யத்திலே கூட்டிக் கொள்ளானிறே. இத்தால் அநந்யப்ரயோஜநர்க்கு ப்ரயோஜநாந்தரபரரோட்டை ஸஹவாஸம் அஸஹ்யமாய் இருக்குமென்றதாய்த்து.

'எங்கள் திரளிற்காட்டிலும் உங்கள் திரளுக்கு வாசியென்?' என்னில் (ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்) என்கிறார். 'ஏழாள்' என்று, தமக்குக் கீழே மூன்றும், மேலே ஒரு மூன்றும், தாமுமாக ஏழுபடியைச்

---

நினைப்பவர்கள் போன்ற எல்லோருடைய திரளைக் காட்டிலும் வேறுபட்டன்றோ எங்கள் திரள் இருப்பது என்கிறார். (**புகுதல் ஒட்டோம்**) 'யாரேனும் எங்கள் திரளிலே புகுவார்களோ?' என்று வேண்டுகின்ற இவர் கருணை இல்லாதவரைப் போல் 'புகுரல் ஒட்டோம்' என்பது ஏன் என்னில், வஸிஷ்டர் மிகவும் கருணையுள்ளவர் என்றாலும் தாம்செய்கின்ற யாககாரியங்களில் தகுதியற்றவனைக் கூட்டிக் கொள்ள மாட்டாரன்றோ! எனவே அநந்ய ப்ரயோஜநர்க்கு, வேறுபயன்களை விரும்புவர்களுடன் தொடர்பு பொறுக்கமுடியாதது என்பது கூறப்படுகிறது.

'எங்கள் திரளைக் காட்டிலும் உங்கள் திரளுக்கு உள்ள வேறுபாடு என்ன?' எனில், (**ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்**) என்கிறார். 'ஏழாள்' என்று, தமக்குக் கீழே மூன்று தலைமுறைகள், மேலே மூன்று

சொல்லுகிறது. இஸ்ஸமுத₃ாயத்தைப் பற்றி ஶாஸ்த்ரங்கள் सप्त सप्तच सप्तच (ஸப்த ஸப்தச ஸப்தச) என்று, இந்த ஏழையும், இதுக்குக் கீழே ஓரேழையும், இதுக்கு மேலே ஓரேழையும், ஆக, இருபத்தொரு படிகாலைச் சொல்லுகிறது. दशपूर्वान् दशापरान् आत्मानञ्चैक विंशतिं पङ्क्तिञ्च पुनाति (த₃ஶபூர்வாங் த₃ஶாபராங் ஆத்மாநஞ்சைக விம்ஶதிம் பங்க்திஞ்ச புநாதி) என்று முக₃பே₄தே₃ந ஶாஸ்த்ரம் சொல்லிற்று. 'ஏழாட்காலும்' என்கிற ஶப்த₃ம் இவ்வளவை நினைக்கிறது. இத்தால், ஒரு ஸந்தாநத்திலே ஒருவன் அநந்யப்ரயோஜநனானால், அவனைப் பற்றி, ப₄க₃வத் ப்ரப₄ாவம், ஸம்ப₃ந்தி₃

---

தலைமுறைகள், தாம் ஒருவர் என்று ஏழு தலைமுறை களைச் சொல்லுகிறார். சாத்திரங் களும் **"ஸப்த ஸப்த ச ஸப்த ச"** என்று இந்த ஏழையும் இதுக்குக் கீழே ஓர் ஏழு தலைமுறைகளையும் இதுக்கு மேலே ஓர் ஏழு தலைமுறைகளையும் ஆக இருபத்தொரு தலைமுறை களைச் சொல்லுகின்றன. **"த₃ஶ பூர்வாந் த₃ஶாபராந் ஆத்மாநஞ்ச விம்ஶதி பங்க்திஞ்ச புநாதி"** (தனக்கு முன் பதின்மரையும், தனக்குப் பின் பதின்மரையும், தன்னையும் ஆக இருபத்தொரு தலைமுறைகளைப் புனிதப் படுத்துகிறான்) (போதாயந தர்மம்) என்று இதையே வேறுவகையாகவும் சாத்திரம் கூறியுள்ளது. 'ஏழாட்காலும்' என்ற சொல்லால் இவ்வளவும் சொல்லப்படுகிறது. இதனால் ஒரு குலத்தில் ஒருவன் வேறுபயன் கருதாதவனாக இருந்தால், அவன் மூலமாக எம்பெருமானுடைய அருள் அவனோடு தொடர்பு உடையவர்கள் அனைவரிடமும் கீழும்

ஸம்ப$_3$ந்தி$_3$களளவும் செல்லக் கீழும் மேலும் வெள்ளமிடு மென்கிறது. (பழிப்பிலோம்) விஷயாந்தரப்ராவண்ய மென்ன, தே$_3$வதாந்தரபஜநமென்ன, இவை தூ$_3$ரதோ நிரஸ்தம் ஆகையாலே, புதர் கூட்டித் தூற்ற வேண்டா; இனி அநந்ய ப்ரயோஜநராய் அநந்யஸாத$_3$நராயிருப்பார்க்குப் பழிப்பாவது, ப்ரயோஜநாந்தரபரதையும் ஸாத$_3$நாந்தர பரதையுமிறே; அவற்றை உடையோமல்லோமென்கிறார். (நாங்கள்) 'எங்கள் குழு' என்றபோதைச் செருக்குப் போலே, ப$_4$க$_3$வத் விஷயீகாரத்தால் வந்த செருக்குத் தோற்றச் சொல்லுகிறாரிறே.

---

மேலும் வெள்ளமிடும் என்பது கூறப்படுகிறது. **(பழிப்பிலோம்)** உலகியல் விஷயங்களில் ஆசை, பிறதேவதைகளிடம் பற்று, இவை முன்பே கழிக்கப் பட்ட விஷயங்கள் ஆகையால் அவற்றை இப்போது பழிப்பு என்று கூறுவது பதரைக் கூட்டித் தூற்றுதல் போலாகும்; எனவே அவை இப்போது கூறப்பெறவில்லை. அநந்யப்ரயோஜநராயும் (எம்பெருமானைத் தவிர வேறு பயன்களை விரும்பாதவராயும்), அநந்ய ஸாதநராயும் (எம்பெருமானைத் தவிர வேறு ஸாதநங்களைக் கொள்ளாதவர்களாயும்) உள்ளவர்களுக்குப் பழிப்பாவது வேறு பயன்களைக் கருதுவதும் வேறு ஸாதனங்களைக் கொள்வதுமேயாகும். அப்படிப் பட்டவற்றை உடையோமல்லோம் என்கிறார். **(நாங்கள்)** 'எங்கள் குழு' என்று கூறியபோது செருக்குடன் கூறியது போலவே, பகவானுடைய அருளைப் பெற்றதால் வந்த செருக்குடன் 'நாங்கள்' என்கிறார்.

"உங்கள் ஸ்வரூபம் நீங்கள் சொன்னவளவிலே விஶ்வஸித்திருக்கும் அத்தனையளவுடையோமல்லோம்; உங்கள் வ்ருத்தி விஶேஷத்தைக் கொண்டு உங்களை அறிய வேணும்" என்ன; "அது நீங்களறியும் புடையல்ல, எங்ஙனே என்னில்; ஒரு கார்யப்பாடாக, உள்ள அமங்க₃ளங்கள் போக மங்க₃ளாஶாஸநம் பண்ணும்படி யாதல், இல்லாத மங்க₃ளங்கள் உண்டாக வேணுமென்று மங்க₃ளாஶாஸநம் பண்ணுதல் செய்யுமளவிறே நீங்களறிவது; முன் வ்ருத்தமாய்க் கழிந்த செயலுக்கு இன்றிருந்து வயிறு பிடிக்கும் திரள் காண் எங்களது". (இராக்கதர் வாழ்) து₃ர்வர்க்க₃ம் களித்து வர்த்திக்கும் தே₃ஶம்; புறம்பேபோய் பரஹிம்ஸை பண்ணி, குளவிக்

---

"உங்களுடைய தன்மைகளை நீங்கள் கூறியவுடனே நம்பிவிடுபவர்கள் நாங்கள் அல்லோம். உங்கள் செயல்களைக் கொண்டே நாங்கள் உங்களைப் பற்றி அறியவேண்டும்" என்று கூற, அதற்குப் பெரியாழ்வார், "அது நீங்கள் அறியமுடியாதது. ஏன் என்னில், ஒரு பயனைக் குறித்து, உள்ள அமங்களங்கள் போக வேண்டும் என்றோ அல்லது, இல்லாத மங்களங்கள் உண்டாக வேண்டும் என்றோ மங்களா ஶாஸநம் செய்வதை மட்டுமே நீங்கள் அறிவீர்கள். என்றைக்கோ நடந்து முடிந்த செயல்களுக்கும் இன்று அஞ்சி வயிறுபிடித்து மங்களாஶாஸநம் செய்பவர்கள் நாங்கள்" என்கிறார். **(இராக்கதர் வாழ் இலங்கை)** தீயவர்களான அரக்கர்கள் களிப்புடன் வாழும் தேசம். குளவியானது பிறரைத் துன்புறுத்தி விட்டுத் தனது கூட்டுக்குள் பாதுகாப்பாக வந்து ஒளிந்து கொள்வது போல,

கூடுபோலே திரண்டு கடலையும் மதிளையும் அரணாக்கி, அமணக் கூத்தடிக்கும் தே$_3$ஶமென்கை. (இலங்கை பாழாளாக) லங்கையில் ஆள் பாழாம்படியாக. இலங்கை தான் விபீ$_4$ஷண விதே$_4$யமிறே. இனி न नमेयं (ந நமேயம்) என்ற ராவணனையும் அவனுடைய அதிக்ரமத்துக்குத் துணையான ராக்ஷஸரையும் அழியச் செய்து, श्मशान सदृशी भवेत् (ஶ்மஶாந ஸத்$_3$ருஶீ பவேத்)

---

அரக்கர்கள் வெளியில் சென்று பிறரைத் துன்புறுத்திவிட்டுப் பாதுகாப்பாக வந்து வசிக்கும் தேசம் இலங்கை. பிறர் உள்ளே புகமுடியாதபடி கடலையும் மலைகளையும் அரணாகக் கொண்டு வெட்கமில்லாமல் அரக்கர்கள் அமணக்கூத்து ஆடும் தேசம். (**இலங்கை பாழ் ஆளாக**) இங்கையில் ஆள் பாழாக. இலங்கையை விபீஷணனுக்குக் கொடுத்து விட்டபடியால், அத்தேசத்தைப் பாழாக்காமல் அதிலிருந்த ஆட்களை மட்டும் பாழாக்கிய. அதாவது **“த்$_3$வித$_4$ா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்”** (இரண்டாகப் பிளக்கப் பட்டாலும் ஒருவனையும் வணங்கமாட்டேன்) (ரா.யு.36-11) என்ற இராவணனையும், அவனுடைய தீய செயல்களுக்குத் துணைநின்ற அரக்கர்களையும் அழியச் செய்து, **“சிதா தூ$_4$மாகுலபத$_2$ா க்$_3$ருத்$_4$ர மண்ட$_3$லஸங்குலா, அசிரேண து லங்கேயம் ஶ்மஶாந ஸத்$_3$ருஶீ ப$_4$வேத்”** (ரா.ஸு.26-24) (சிதைகளின் புகையினால் கலங்கின வழிகளை உடையதும், கழுகுக் கூட்டங்களினால் கலங்கினதுமாக இந்த இலங்கை வெகு விரைவிலேயே சுடுகாட்டைப் போலாகும்) என்று

என்று பிராட்டி அருளிச் செய்தபடியே அவ்வூரை மூலையடியே போம்படி பண்ணினான். (படை பொருதானுக்கு) இப்படிச் செய்தது ஈஶ்வரத்வப் பிரான ஸங்கல்பத்தாலன்றிக்கே, எதிரிகள் அம்பு மார்விலே தைக்கும்படி பொருதவனுக்கு. (பல்லாண்டு கூறுதுமே) அப்போதை கையும் வில்லுமாய்ச் சீறிச் சிவந்து எதிரிகள் மேலே வ்யாபரிக்கும்போதை ஆகர்ஷமான வடிவழகுக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணிப் போருவோம் சிலர் காண் நாங்களென்கிறார். राघवार्थे पराक्रान्ताः न प्राणे कुरुते दयां (ராக₄வார்த்தே₂ பராக்ராந்தா: ந ப்ராணே குருதே த₃யாம்) என்கிறபடியே அக்காலத்தில் முதலிகளுக்கு அம்புக்கு இறாய்க்கப் பணி போருகையாலே அக்காலத்திலே

---

சீதைப்பிராட்டி அருளிச்செய்தது போலவே, அவ்வூரை நாசமாகப் போகும்படி செய்தான். **(படை பொருதானுக்கு)** இப்படிச் செய்தது தன்னுடைய மேன்மையான பரம்பொருள் தன்மைக்கு உரிய நினைவினால் அல்லாமல், எதிரிகள் எய்த அம்பு தன் மார்வில் தைக்கும்படியாக போர் பொருதவனுக்கு. **(பல்லாண்டு கூறுதுமே)** யுத்தத்தின் போது கையும் வில்லுமாய், கோபத்தினால் சீறி, கண்கள் சிவந்து எதிரிகள்மீது பாயும்போது மனங்கவரும் வடிவழகுடன் இருந்த இராமபிரானுக்கு மங்களாஶாஸநம் செய்பவர்கள் நாங்கள் என்கிறார். **"ராக₄வார்த்தே₂ பராக்ராந்தா: ந ப்ரணே குருதே த₃யாம்"** (ரா.27-1) (ராமனுக்காகப் போரிடும் வானர வீரர்கள், தங்கள் உயிரையும் பொருட்படுத்தவில்லை) என்று கூறப்பட்டு உள்ளபடியால், போரின்போது அம்புகள் படாத வண்ணம் தவிர்ப்பதற்கே நேரம்

மங்க₃ளாஶாஸநம் பண்ணுவாரைப் பெற்றதில்லை; பிராட்டி பிரிந்த போதே 'நம் குடியிருப்பு பெற்றோம்' என்கிற ப்ரீதியாலே ப்₃ரஹ்மாதிகள் அந்யபரரானார்கள்; அக்காலத்தில் மங்க₃ளாஶாஸநம் பண்ணப் பெறாத குறைதீர இன்றிருந்து மங்க₃ளாஶாஸநம் பண்ணுவோம் சிலர்காண் நாங்கள்! என்கிறார்.

நாலாம்பாட்டு. (ஏடிக்யாதி) கீழே, அநந்யப்ரயோஜநரை அழைத்தார்; அவர்கள் மங்க₃ளாஶாஸநத்துக்கு ப்ரத்யாஸந்நராகையாலே, நீரிலே நீர் சேர்ந்தாற்போலே சேர்ந்திருக்குமிறே. அவ்வளவிலும் பர்யாப்தி பிறவாமையாலே 'ஈஶ்வரன் கைபார்த்திருக்குமவர்கள்'

---

சரியாக இருந்த படியால், வானரர்கள் இராமனுக்கு மங்களாஶாஸநம் செய்யவில்லை. சீதைப் பிராட்டி பிரிந்தபோதே 'இனி ராவணன் ஒழிந்தான்; நாம் நம்முடைய ராஜ்யத்தைப் பெற்றுவிடுவோம்' என்ற மகிழ்ச்சியினால் பிரமன் முதலிய தேவர்கள் மங்களாஶாஸநம் செய்ய மறந்தார்கள். எனவே, அக்காலத்தில் ஒருவரும் மங்களாஶாஸநம் செய்யாத குறைதீர இன்று இருந்து மங்களாஶாஸநம் செய்பவர்கள் காண் நாங்கள் என்கிறார் பெரியாழ்வார்.

நான்காம் பாட்டு. கீழே மூன்றாம் பாசுரத்தில் வேறுபயன்கருதாதவர்களை முதலில் அழைத்தார், அவர்கள் மங்களாஶாஸநத்திற்கு மிகவும் நெருங்கியவர்களாகையால், அவர்களோடு சேர்வது நீரோடு நீர் சேர்வது போன்றது. ஆனால் அத்துடன் திருப்தி அடையாமல் மற்றும் பலரையும் மங்களாஶாஸனம் செய்வதற்கு அழைக்க

என்னுமிவ்வளவைக் கொண்டு, ஆத்மப்ராப்தி காமரையும் ஐஶ்வர்ய காமரையும் அழைக்கக் கோலி, அதில் முந்துற ஆத்மப்ராப்தி காமரை அழைக்கிறார். ஐஶ்வர்யத்திற் காட்டில் ஆத்மப்ராப்தி உத்க்ருஷ்டமென்னும் நினைவாலே அழைக்கிறாரல்லர்; அந்த மோக்ஷத்தை இவர் அநர்த்த$_2$ம் என்றிருக்கையாலே. இனி எத்தால் முற்பட அழைக்கிறதென்? என்னில்; ப$_4$க$_3$வத் ஸம்ப$_3$ந்த$_4$த்துக்கு உபகரணமான ஶரீரமோக்ஷம் அணித்தாகையாலும், அம்மோக்ஷத்தை ப்ராபித்தால் மீளவொண்ணாமையாலும், ஐஶ்வர்ய காமனுக்குக் காலாந்தரத்திலேயாகிலும் ப$_4$க$_3$வத்

---

விரும்பினார் பெரியாழ்வார். எம்பெருமானிடம் வந்து வேண்டுபவர் என்ற ஒரே காரணத்திற்காக, ஆத்மாவை மட்டும் அநுபவிக்க விரும்புகின்ற கைவல்யார்த்திகளையும், செல்வத்தை அடைய விரும்புகின்ற ஐஶ்வர்யார்த்திகளையும் அழைக்கிறார் பெரியாழ்வார். முதலில் கைவல்யார்த்திகளை அழைக்கிறார். ஐஶ்வர்யத்தைவிட கைவல்யம் உயர்ந்தது என்ற நினைவால் அவர்களை முதலில் அழைக்கவில்லை. பின் எதனால் அவர்களை ஐஶ்வர்யார்த்திகளுக்கு முன் அழைத்தார் எனில், கைவல்ய மோக்ஷம் என்பது மிகவும் தீமைபயப்பது என்னும் காரணத்தால் அவர்களை (அவர்களை உடனே காப்பாற்றவேண்டி) முதலில் அவர்களை அழைக்கிறார். கைவல்யத்தை விரும்புபவர்கள் தங்கள் உடலிலிருந்து விரைவில் விடுபட்டு விடுவார்கள் ஆகையாலும், கைவல்யமாகிற மோக்ஷத்தை அடைந்து விட்டால், அதிலிருந்து மீள முடியாது ஆகையாலும், செல்வத்தை

ஸம்ப$_3$ந்த$_4$ம் பண்ண யோக்$_3$யதை உண்டாகையாலும், இவனுக்கு அந்த யோக்$_3$யதையும் அழிகையாலே து$_3$ர்க்க$_3$தியைக் கண்டு முற்பட அழைக்கிறார். ப்ரயோஜநாந்தரபரர், 'மங்க$_3$ளாஶாஸநம் பண்ண வாருங்கோள்' என்றால் வருவார்களோ? என்னில்; ப$_4$க$_3$வத்ப்ராப்தியின் உத்கர்ஷத்தையும், அத்தைப் பற்ற, கைவல்யத்தினுடைய நிகர்ஷத்தையும் அறிவித்தால், 'விட்டுப் பற்ற வேணும்' என்னும் ஆத்ம கு$_3$ணோபேதரையிறே இவரழைக்கிறது.

---

விரும்புபவனுக்கு வேறு காலத்திலாகிலும் எம்பெருமானை அடைவதற்குத் தகுதியுண்டு ஆகையாலும், கைவல்யத்தை விரும்புபவன் கைவல்யத்தை அடைந்துவிட்டால் மறுபடியும் எம்பெருமானிடம் வருவதற்கு முடியாமலே போய்விடுகிறபடிபடியாலும், அவனுடைய இந்த நிலையைக் கண்டு அவனை முதலில் காப்பாற்ற வேண்டி, முதலில் அழைக்கிறார். கைவல்யம் முதலிய வேறு பயன்களை வேண்டுபவர்களை நோக்கி "மங்களாஶாஸநம் செய்ய வாருங்கள்" என்றால் வருவார்களோ என்றால், எம்பெருமானை அடைவதின் மேன்மையையும், அதை நோக்கும் போது கைவல்யத்தின் தாழ்வையும் தெரிவித்தால், தாழ்ந்ததை விட்டு உயர்ந்ததைப் பற்றவேண்டும் என்றிருக்கும் உயர்ந்த குணத்தை உடையவர்களை அன்றோ இவர் அழைப்பது!

ஏடுநிலத்தில் இடுவதன் முன்னம் வந்து
எங்கள்குழாம் புகுந்து

கூடும் மனமுடையீர்கள் வரம்பொழி
வந்து ஒல்லைக் கூடுமினோ
நாடுநகரமும் நன்கறிய
நமோநாராயணாயவென்று
பாடுமனமுடைப் பத்தருள்ளீர்
வந்து பல்லாண்டு கூறுமினே. 4

| | |
|---|---|
| ஏடு நிலத்தில் | - பொல்லாங்கான நிலமாகிய சுடுகாட்டில் |
| இடுவதன் முன்னம் | - (உங்களைச்) சேர்ப்பதற்கு முன், |
| வந்து | - (உங்கள் திரளிலிருந்து) வந்து, |
| எங்கள் குழாம் | - எங்கள் குழுவிலே, புகுந்து |
| கூடும் மனம் உடையீர்கள் | -கூடுவோமெனும் நினைவுள்ளவர்கள் |
| வரம்பு ஒழி வந்து | - (ஆத்மாவை மட்டும் அனுபவிப்பது என்னும்) வரம்பை விட்டு வந்து, |
| ஒல்லை கூடுமினோ | - விரைவாக எங்களுடன் கூடுங்கள்; |
| நாடும் | - நாட்டுப் புறங்களிலுள்ள சாமானியரும், |
| நகரமும் | - நகரத்திலுள்ள அறிவாளிகளும், |
| நன்கு அறிய | - நன்றாக அறியும்படி, |
| நமோ நாராயணாய என்று | - அஷ்டாக்ஷர மந்திரத்தைக் கூறி |
| பாடும் மனம் உடை | - பாடக்கூடிய நினைவுள்ள, |
| பத்தர் உள்ளீர் | - பக்தியை உடையவர்களாகில், |
| வந்து | - எங்களோடு வந்து |
| பல்லாண்டு கூறுமினே | - திருப்பல்லாண்டு பாடுங்கள். |

(ஏடுநிலத்திலிடுவதன் முன்னம்) ஏடு என்பது, பொல்லாங்கு. 'உங்களைப் பொல்லாத நிலத்திலே

---

*(ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம்) ஏடு என்பது பொல்லாங்கு. 'உங்களைப் பொல்லாத நிலத்தில் (சுடுகாட்டில்) இடுவதற்கு முன்னம்' என்று*

இடுவதற்குமுன்னம்' என்று பிள்ளையமுதனார். 'ஏடு' என்கிறது, ஸூக்ஷ்ம ஶரீரத்தை. ஸ்தூ₂ல ஶரீரத்திற் காட்டில் ப்ரத₄ாநமாய் அதினுடைய ப்ரயோஜநரூபமாய் நிற்கையாலே, 'பாலில் ஏடு' என்னுமாப்போலே சொல்லுகிறது. (நிலத்தில் இடுவதன் முன்னம்) ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பதற்கு முன்னே. இது நிர்வஹித்துப் போரும்படி: -'ஏடு' என்று, உடம்புக்குப் பேராய், ஸ்த்தூ₂ல ஸூக்ஷ்மரூபமான ஶரீரம், ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பதற்கு முன் என்னவுமாம். இவ்வாக்யந்தான், அவர்களுடைய அநர்த்த₂த்தைக் கண்டு அழைக்கிறார் என்னுமிடம் தோற்ற இருக்கிறதிறே. (வந்து) ஸ்வதந்த்ராயிருப்பார்க்குத்

---

பிள்ளை அமுதனார் பொருளுரைத்தார். அல்லது ஏடு என்பது சூக்கும உடலைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். ஸ்தூலசரீரத்தைக் காட்டிலும் முக்கியமானதாய், அதனுடைய பயனாய் நிற்பதால், 'பாலில் ஏடு' என்பதுபோல் ஸூக்ஷ்ம உடலைச் சொல்லுகிறது. **(நிலத்தில் இடுவதன் முன்னம்)** அந்த ஸூக்ஷ்ம உடல், தனது காரணமான மூலப்ரக்ருதியில் லயிப்பதற்கு முன்னம். அல்லது 'ஏடு' என்று உடலுக்குப் பெயராகவும், ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபமான உடல், காரணமான மூலப்ரக்ருதியில் லயிப்பதற்கு முன்னர் என்றும் பொருள் கொள்ளலாம். இப்படி உங்களுடைய உயிர் உடலை விட்டு நீங்குவதற்கு முன் வந்துவிடுங்கள் என்றழைப்பது, அவர்களுக்கு ஏற்படவிருக்கும் அநர்த்தத்தைக் கண்டு அழைக்கிறார் என்பதை வெளிப்படுத்துகிறது. **(வந்து)** சுதந்திரத் தன்மை

தம்மளவில் வருமிடத்தில் உண்டான தூ₃ரத்தைச் சொல்லுகிறது. (எங்கள் குழாம் புகுந்து) கேவலரும் ஒரு ஸமஷ்டியாயிறே இருப்பது; அது ஸ்வதந்த்ரமாகையாலே அந்யோந்யம் சேர்த்தியற்றிருக்கும். ஒருத்தருடைய ஸம்ருத்₃தி₄ ஒருத்தரதாயிறே இத்திரள் இருப்பது. परस्परनीचभावैः (பரஸ்பர நீசபா₄வை:) என்னக் கடவதிறே. இத்திரளில் புகுவார்க்கு எவ்வளவு அதி₄காரம் வேணும்?

---

உடையவர்களாகத் தங்களை நினைத்திருப்பவர்கள் தம்மிடத்தில் வருமளவில் உண்டான தூரத்தைச் சொல்லுகிறது. (அதாவது மங்களாஶாஸனம் செய்வதையே குறிக்கோளாக உடைய தமக்கும், தங்களுடைய ஆத்மாவை அனுபவிப்பதையே குறிக்கோளாக உடைய அவர்களுக்கும் இடையில் இடைவெளி அதிகம் இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார். **(எங்கள் குழாம் புகுந்து)** கைவல்யம் விரும்புபவர்களும் ஒரு கூட்டமாகவே இருப்பர்கள். ஆயினும் ஒவ்வொருவரும் தத்தம் ஆத்மாவைமட்டும் அநுபவிக்கவேண்டும் என்ற எண்ணமுடையவர்கள் ஆதலின் ஒருவரோடொருவர் சேராமல் இருப்பர்கள். ஆனால், எங்கள் திரளோ மற்றவர்களுக்கு ஏற்படும் நன்மைகளையும் தங்களுக்கு ஏற்பட்டதாகவே கொண்டிருக்கும் திரளாகும். **“நித்யாபி₄வாஞ்சித பரஸ்பர நீச ப₄ாவை:”** (எப்போதும் ஒருவர்க்கொருவர் அடிமையாயிருப்பதை ஆசைப் படுபவர்கள்) (ஸ்ரீவை. ஸ்த. 77) என்று நித்யமுக்தர்களைப் பற்றி கூரத்தாழ்வான் அருளிச்செய்துள்ளார் அன்றோ! இத் திரளில் புகுவார்க்கு என்ன தகுதிகள் வேண்டும்

என்னில் (கூடும் மனமுடையீர்கள்) 'புகுருவோம்' என்னும் நினைவே வேண்டுவது. அவிலக்ஷணங்களான புருஷார்த்தஂங்களுக்கு புரஶ்சரணங்கள் கனக்க வேண்டியிருக்க, அதில் விலக்ஷணமான இத்திரளிலே புகுருகைக்கு புரஶ்சரணம் வேண்டாதிருப்பதென்? என்னில்; அவை அப்ராப்த புருஷார்த்தஂங்களாகையாலே புரஶ்சரணாதிஂகள் அபேக்ஷிதங்களாயிருக்கிறன; இது ஸ்வரூபப்ராப்தம் ஆகையாலே வேண்டா. மாதாபிதாக்களை அநுவர்த்திக்கைக்கு இச்சைஂயேயிறே வேண்டுவது. (உடையீர்கள்) இந்த இச்சைஂயால் வந்த ப்ரயோஜநாதிஶயத்தாலே 'வைஶ்ரவணன்' என்னுமா

---

என்னில், (**கூடும் மனமுடையீர்கள்**) நாமும் இத்திரளில் புகுவோம் என்னும் நினைவுமட்டும் இருந்தாலே போதுமானது. தாழ்ந்த பயன்களை அடைவதற்கும் செய்ய வேண்டிய செயல்கள் அதிகமாக வேண்டி யிருக்க, மிகவுயர்ந்த பயனாகிய கைங்கர்யத்தைப் பெறுவதற்குச் செயல்கள் ஏதும் செய்யவேண்டிய தேவையில்லை என்பது ஏன் என்னில், அவை தகுதியற்ற பயன்களாகையால் அவற்றிற்குச் செய்ய வேண்டிய செயல்களும் அதிகம். இது நமது ஸ்வரூபத்திற்கு (தன்மைக்கு) சேர்ந்தது ஆகையால், எந்தத் தகுதியும் தேவையில்லை. நமக்குத் தொடர்பில்லாதவர்களை மகிழ்விக்க, அரிய செயல் களைச் செய்ய வேண்டி யிருக்கும். ஆனால் தாய் தந்தையரைப் பின்தொடரத் தகுதி ஏதும் தேவை இல்லை; மனமிருந்தால் மட்டுமே போதுமானது. (**உடையீர்கள்**) கூடவேண்டும் என்ற நினைவால் வந்த பயனின் பெருமையைக் கூறுகிறார்.

போலே அருளிச்செய்கிறார். கூட நினைப்பார்க்குச் செய்யவேண்டுவது, முன்பு நின்ற சிறுமையைக் குலைத்து வரவேணும். (வரம்பொழிவந்து) 'வரம்பொழிய' என்கிற இது, 'வரம்பொழி' என்று கிடக்கிறது. ஸர்வேஶ்வரனுக்கு ப்ரகாரபூ₄தனாய், அவனுடைய ஸ்வரூபரூபகு₃ண விபூ₄திகளை அநுபவிக்க இட்டுப் பிறந்தவன், जरामरणमोक्षाय (ஜராமரண மோக்ஷாய) என்று ஸ்வாநுப₄வத்தளவிலே ஒரு வரம்பை இட்டுக் கொண்டானிறே; அத்தையொழிந்து வாருங்கோள் என்கிறார்.

---

வைஶ்ரவணன் (குபேரன்) - செல்வத்தை உடையவன் என்பது போல், கூடவேண்டும் என்ற மனமுடையவன் என்று கூறுகிறார். கூடவேண்டும் என்று நினைப்பவர் களுக்குச் செய்யவேண்டியது, முன்பு இருந்த சிறுமையைக் கழித்துக் கொண்டு வரவேண்டும். **(வரம்பொழி வந்து)** வரம்பொழிய என்பது வரம்பொழி என்று குறைந்துளது. எம்பெருமானுக்கு அடிமையாய், அவனுடைய ஸ்வரூபம் (தன்மை), ரூபம் (திருமேனி), குணங்கள், ஐஶ்வர்யம் (செல்வங்கள்) இவற்றை அநுபவிப்பதற்காக உள்ளவன் அவற்றைத் தவிர்ந்து, **"ஜராமரண மோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே"** (கிழத்தனம் மரணம் என்பவை நீங்கி ஆத்ம ஸ்வரூபத்தைக் காண்பதற்காக என்னைப் பற்றுகிறார்கள்) (கீதை 7-29) என்று கண்ணபிரான் கூறியுள்ளபடி, தங்கள் ஆத்மாவை மட்டும் அநுபவிப்பது என்று ஒரு வரம்பை இட்டுக் கொண்டுள்ளார்கள். அந்த வரம்பை அழித்துக் கொண்டு வாருங்கள் என்கிறார் பெரியாழ்வார்.

(ஒல்லைக்கூடுமினோ) பற்றுகிற புருஷார்த்தத்தினுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்தால் பதறிக் கொண்டு வந்து விழவேண்டாவோ? 'ஏடு நிலத்திலிடுவதன் முன்னம்' என்றது, ஶரீரத்தில் அஸ்தைர்யத்தைப்பற்ற; இங்கு 'ஒல்லை' என்கிறது, பற்றுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தைப் பற்ற. 'கூடுமனமுடையீர்கள்' என்றும், 'கூடுமினோ' என்றும் அருளிச் செய்கிறாரிறே யோக்யதையைப் பற்ற. 'அத்திரளில் நின்றும் பிறிகதிர்ப் பட்டார் சிலர் இவர்கள்' என்று தோற்றுமிறே, ஸ்வரூபம் வெளிச்செறிக்கக்கால்.

(நாடுநகரமும் நன்கறிய) இத்திரளிலே புகுருகைக்கு வேண்டுவன அருளிச்செய்தார்; இதுக்கு மேல்

---

**(ஒல்லைக் கூடுமினோ)** பற்றுகிற பயனாகிய கைங்கர்யத்தின் பெருமையை உணர்ந்தால் பதறிக் கொண்டு விரைவில் வந்து சேரவேண்டாமோ? 'ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம்' என்றது உடலின் நிலையாமையைக் கருத்தில் கொண்டு. இங்கு 'ஒல்லை' என்றது, பற்றப்படும் பயனின் பெருமை யைக் கருத்தில் கொண்டு. கைவல்யத்தில் ஆசையை விட்டு, தங்களுடன் கூடவேண்டும் என்ற எண்ணமு டையவர்களின் தகுதியைக் கருத்தில் கொண்டு 'கூடும் மனம் உடையீர்கள்' என்றும், 'கூடுமினோ' என்றும் அருளிச்செய்கிறார். அவர்கள் தங்கள் தன்மையை நன்கு உணர்ந்து கொண்டு விட்டால், 'கைவல்யம் விரும்புகிற கூட்டத்திலிருந்து பிரிந்து நிற்பவர்கள் இவர்கள்' என்று மற்றவர்களுக்கு நன்கு தெரியும்.

**(நாடும் நகரமும் நன்கறிய)** இதுவரை இத்திரளிலே புகுவதற்கு வேண்டுவன அருளிச்

மங்க$_3$ளாஶாஸநத்துக்கு வேண்டுவன அருளிச்செய்கிறார். 'நாடு' என்று, அவிஶேஷஜ்ஞரைச் சொல்கிறது; 'நகரம்' என்று, விஶேஷஜ்ஞரைச் சொல்லுகிறது. ராஜாவுக்கு ப்ரத்யாஸந்நரிறே நக$_3$ரஸ்த$_2$ர்; நாட்டார் தூ$_3$ரஸ்த$_2$ரிறே; ஆகையாலே அருளிச்செய்கிறார். (நன்கறிய) நன்றாக அறிய. ப$_4$க$_3$வத்ப்ரத்யாஸத்தியாலே அவிஶேஷஜ்ஞர் விடும்படியாகவும், அதுதானே ஹேதுவாக விஶேஷஜ்ஞர் பரிக்$_3$ரஹிக்கும்படியாகவும், (நன்கறிய) இந்நன்மையை அறியவென்னுமாம். (நமோ நாராயணாய என்று)

---

செய்தார். இனி மங்களாஶாஸனத்திற்கு வேண்டுவன அருளிச் செய்கிறார். 'நாடு' என்பது உயர்ந்த அறிவில்லாதவர் களையும் 'நகரம்' என்பது உயர்ந்த அறிவு படைத்தவர்களையும் கூறுகிறது. அரசனுக்கு மிகவும் அருகில் இருப்பவர்கள் நகரத்தார். நாட்டார் வெகு தூரத்தில் உள்ளவர்கள். எனவே நகரத்தில் உள்ளவர்கள் உயர்ந்த அறிவுள்ளவர்கள் என்றும் நாட்டில் (கிராமத்தில்) உள்ளவர்கள்அவ்வளவு உயர்ந்த அறிவில்லாதவர்கள் என்றும் கூறுவதுண்டு. அதை ஒட்டி, ஆழ்வாரும் 'நாடு, நகரம்' என்றருளிச் செய்கிறார். **(நன்கறிய)** நன்றாக அறியும்படியாக. இவர்கள் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்களாகி விட்ட படியால், மற்ற கைவல்யார்த்திகளான அறிவில் குறைந்தவர்கள் கைவிடும்படியாகவும், அதுவே காரணமாக எம்பெருமானுடைய அடியவர்களான உயர்ந்த அறிவுள்ளவர்கள் கைக் கொள்ளும்படியாக வும். **(நன்கறிய)** இந்த நன்மையை நன்கு உணர்ந்து என்றும் பொருள் கொள்ளலாம். **(நமோ**

இவ்வளவும் போராது, தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து 'ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப் பெறவேணும்' என்று, வைஷ்ணவனாய் வரவேணுமென்று. अहमपि न मम भगवत एवाहमस्मि (அஹமபி ந மம ப₄க₃வத ஏவாஹமஸ்மி) என்றிறே நமஶ்ஶப்₃த₃த்துக்கு அர்த்த₂மிருப்பது. ஸ்வாமி பக்கல் பண்ணும் அநுகூலவ்ருத்தியேயிறே புருஷார்த்த₂மாவது. (பாடுமனமுடைப்பத்தருள்ளீர்) நினைத்திருக்கும் அவ்வளவு போராது. ப்ரீதிக்குப் போக்கு விட்டுப் பாடுவோமென்னும் நெஞ்சுண்டாம்படியான ப்ரேமத்தை உடையீராகில். (வந்து பல்லாண்டு கூறுமினே) வந்து,

---

**நாராயணாய என்று)** இவ்வளவு மட்டும் போதாது. தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து கொண்டு, தன் தன்மைக்குச் சேர்ந்ததான கைங்கர்யத்தைப் பெறவேண்டும் என்று வரவேண்டும். **"அஹமபி ந மம: ப₄க₃வத ஏவாஹமஸ்மி இத்யேவ மமதாம் யோஜயத்யதோ நம இதி"** (யஜு .) ('நானும் எனக்குரியேன் அல்லேன்; பகவானுக்கே அடியன் ஆகிறேன்' என்று இப்படி மமகாரம் இல்லாமையைத் தருவதால் நம: எனப்படுகிறது) என்றன்றோ நம: என்ற சொல்லின் பொருள் கூறப்பட்டுள்ளது! ஸ்வாமியான எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யமே புருஷார்த்த மாகும். **(பாடும் மனமுடைப் பத்தர் உள்ளீர்)** நெஞ்சில் நினைத்திருப்பது மட்டும் போதாது. அன்பிற்குப் போக்குவீடாக வாய்விட்டுப் பாடவும் வேண்டும் என்ற நெஞ்சு உண்டாகும்படியான அன்பு உள்ளவர்களாயின், **(வந்து பல்லாண்டு கூறுமினே)**

திருப்பல்லாண்டு பாடுங்கோள். இத்திரளிலே புகுரவேணும் என்றிருப்பீர் அத்தைச் செய்யுங்கோள்; அவ்வளவு போராது, உங்களுடைய வ்ருத்தி விஶேஷமும் பெறவேணுமென்று இருப்பீர், திருப்பல்லாண்டு பாடுங்கோள் என்று க்ரியையை இரண்டாக்கி நிர்வஹிக்கவுமாம்.

அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி) முற்பட அநந்ய ப்ரயோஜநரை அழைத்தார். கேவலரும் ஐஶ்வர்யார்த்திகளும் ப்ரயோஜநாந்தரபரராயிருக்கச் செய்தேயும், கேவலருடைய துர்க்$_3$க$_3$தியைக் கண்டு

---

வந்து திருப்பல்லாண்டு பாடுங்கள். 'கூடும்மனம் உடையீர்கள் - வந்து கூடுமின்; பாடும் மனமுடையீர்கள் வந்து பல்லாண்டு கூறுமின்' இத்திரளில் கூடவேண்டும் என்ற நினைவுள்ளவர்கள் வந்து கூடுங்கள்; அவ்வளவு மட்டும் போதாது உங்களுடைய செயலையும் செய்ய வேண்டும் என்று இருப்பவர்கள் பல்லாண்டு பாடுங்கள் என்று இரண்டு வாக்கியமாகவும் பொருள் கொள்ளலாம்.

ஐந்தாம் பாட்டு. மூன்றாம் பாசுரத்தில் எம்பெருமானுக்குத் தொண்டு புரிவதையே வேண்டுகின்ற அநந்ய ப்ரயோஜநரை அழைத்தார். கைவல்யத்தை விரும்புபவர்களும், செல்வத்தை விரும்புபவர்களும் ஆகிய இருவருமே, எம்பெருமானை விரும்பாமல் பிறபயன்களை விரும்புபவர்கள் என்றாலும், கைவல்யத்தை விரும்புபவர்களுடைய ஆபத்தான நிலைமையை - அதாவது அவர்கள் வேண்டிய கைவல்யத்தைப் பெற்றுவிட்டால் பிறகு அதிலிருந்து மீளமுடியாது

முந்துற அழைத்தார்; இப்பாட்டிலே, ஐஶ்வர்யார்த்திகளை அழைக்கிறார்.

---

என்ற ஆபத்தைக் கண்டு அவர்களை முதலில் (நான்காவது பாசுரத்தில்) அழைத்தார். இப் பாசுரத்தில் செல்வத்தை விரும்புபவர்களை அழைக்கிறார்.

அண்டக்குலத்துக்கதிபதியாகி
அசுரரிராக்கதரை
இண்டக்குலத்தை யெடுத்துக்களைந்த
இருடீகேசன்றனக்குத்
தொண்டக்குலத்திலுள்ளீர்வந்தடிதொழுது
ஆயிரநாமம்சொல்லிப்
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து
பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே. 5

| | |
|---|---|
| அண்டக் குலத்துக்கு | - அண்டங்களின் திரளுக்கு, |
| அதிபதி ஆகி | - தலைவனாகி, |
| அசுரர் | -அசுரர்களும், |
| இராக்கதரை | - அரக்கர்களுமாகிற |
| இண்டக்குலத்தை | - நெருங்கின கூட்டத்தை, |
| எடுத்து | - திரட்டி, |
| களைந்த | - ஒழித்த, |
| இருடீகேசன் தனக்கு | - இந்திரியங்களுக்கு அதிபதியான எம்பெருமானுக்கு. |
| தொண்டக் குலத்தில் | - அடிமை செய்பவர்கள் குலத்திலே, |
| உள்ளீர் | - உள்ளவர்களான நீங்கள், |
| வந்து | - எங்கள் கோஷ்டிக்கு வந்து, |
| அடி | - அவனுடைய திருவடிகளை |
| தொழுது | - சேவித்து, |

| | |
|---|---|
| ஆயிரநாமம் | - அவனுடைய ஆயிரம் நாமங்களை |
| சொல்லி | - வாயாரச்சொல்லி, |
| பண்டைக் குலத்தை | -முன்பிருந்த நிலை |
| தவிர்ந்து | - நீங்கி, |
| பல்லாண்டு | - பலகால் மங்களாசாஸனம் |
| பல்லாயிரத்தாண்டு என்மின் | - செய்யுங்கள். |

(அண்டக்குலத்துக்கதிபதியாகி) தே$_3$வதைகளுடைய ஐஶ்வர்யத்துக்கெல்லாம் மேலான அண்ட$_3$ாதி$_4$பத்யமிறே ஐஶ்வர்யத்துக்கு மேலெல்லை; அந்த ப்$_3$ரஹ்மாதி$_3$கள் ஈஶ்வரனை ஆஶ்ரயிக்கும் ப்ரகாரம் சொல்லுகிறது. अण्डाधिपतये नमः (அண்ட$_3$ாதி$_4$பதயே நம:) என்றிறே இப் பத$_3$ப்ராப்திக்கு ஸாத$_4$நமான மந்த்ரம். அந்த அண்டை$_3$ஶ்வர்ய விசிஷ்ட$_2$னாகவிறே ஸர்வேஶ்வரனை அநுஸந்தி$_3$ப்பது. व्याहरन् मामनुस्मरन् (வ்யாஹரந்

---

*(அண்டக்குலத்துக்கு அதிபதி ஆகி)* தேவதைகளுடைய செல்வங்களுக்கெல்லாம் மேம்பட்டது அண்டங்களுக்கு அதிபதியாயிருத்தல். அதுதான் செல்வங்களுக்குள்ளே உயர்ந்த செல்வம். அப்படிப்பட்ட அண்டத்திற்கு அதிபதியாக இருக்கும் பிரமன் எம்பெருமானை வேண்டும்போது கூறுகின்ற வார்த்தைகளையே இங்கு கூறுகிறார். அதாவது அண்டங்களுக்கு அதிபதியாக வேண்டுவோர் எம்பெருமானை நோக்கி **"அண்ட$_3$ாதி$_3$பதயே நம:"** என்ற மந்திரத்தையே கூறியே வணங்கவேண்டும். அண்டங்களுக்கு அதிபதியானவன் எம்பெருமான் என்றே அவனை நினைத்து வணங்கவேண்டும். **"வ்யாஹரந் மாமநுஸ்மரந்"** (என்னை நினைத்துக் கொண்டு) *(கீதை 8-13)* என்று கூறியுள்ளபடி,

மாமநுஸ்மரந்) என்கிறபடியே இம் மந்த்ரத்தைச் சொல்லவும், நெஞ்சாலே ஐஶ்வர்ய விசிஷ்டனாக அநுஸந்திக்கவுமாயிறே ஆஶ்ரயண ப்ரகாரமிருப்பது. அண்டக்குலத்துக்கு அதிபதியான ப்ரகாரமேயன்றோ இஶ்ஶப்தத்திலுள்ளது, ஆஶ்ரயண ப்ரகாரம் தோற்ற இருந்ததில்லையே? என்னில்; உதாரனாய் இருப்பான் ஒருவன் கையிலே எலுமிச்சம் பழமிருந்தால் "இது இருந்த அழகென்!" என்று சொன்ன வளவிலே, பாவஜ்ஞனா யிருக்குமவன் "கொள்ளலாகாதோ?" என்று கருத்தறிந்து கொடுக்குமிறே: அப்படியே, அண்டாதிபத்யத் திலே

---

'அண்டாதிபதயே நம:' என்ற மந்திரத்தைச் சொல்லியும்; நெஞ்சால் எம்பெருமானை ஐஶ்வர்யத்தோடு கூடினவனாக நினைத்தும் அவனை அடிபணிய வேண்டும். அண்டங்களுக்கு அவன் அதிபதி என்ற பொருள்மட்டும் தான் இம்மந்திரத்தில் உள்ளதே தவிர, இம்மந்திரத்தைக் கூறுபவன், தான் அண்டத்திற்கு அதிபதியாகத் விரும்புவதாக இம்மந்திரத்தில் கூறப்படவில்லையே எனில், அவனை அண்டத்திற்கு அதிபதியே என்று போற்றுவதன் மூலம், தனக்கு அந்த அண்டாதிபத்யம் வேண்டும் என்பதை மறைமுகமாகத் தெரிவிக்கிறான். வள்ளலான ஒருவன் கையில் எலுமிச்சம் பழம் இருந்தால், மற்றொருவன் வந்து, "இப்பழம் அழகாக இருக்கிறதே!" என்று கூறினால், வள்ளலானவன், அப்படிக் கூறியதன் கருத்தை உணர்ந்து, "இப்பழத்தை நீயே வைத்துக்கொள்" என்று கொடுத்துவிடுவான் அல்லவா! அதுபோலவே எம்பெருமானிடம் சென்று "அண்டத்திற்கு

அபேக்ஷையுண்டென்று தங்கள் அபேக்ஷையை ஆவிஷ்கரிக்கிறார்கள். இத்தால், ப்ரயோஜநாந்தரபரரைக் குறித்து उदाराः (உதா₃ரா:) என்னுமவனுடைய ஔதா₃ர்யம் ப்ரகாஶிக்கிறது. (அண்டக்குத்துக்கு) अण्डानान्तु सहस्राणां (அண்டா₃நாந்து ஸஹஸ்ராணாம்) என்று தொடங்கி, कोटिकोट शतानि च (கோடிகோடி ஶதாநி ச) என்று அஸங்க்₂யாதமான அண்ட₃ங்களுக்கு நிர்வாஹகனாகையாலே அபேக்ஷித்தார் அபேக்ஷித்த அண்ட₃ங்களைக் கொடுக்கைக்கு உடைமையைச் சொல்லுகிறது. (அதிபதி) உப₄யவிபூ₄திக்கும்

---

*அதிபதியே" என்று போற்றினால், அந்த அண்டாதிபத்யத்தைக் கொடுத்து விடுவான் அன்றோ என்றெண்ணி, அண்டாதிபத்யத்தில் தங்களுக்குள்ள விருப்பத்தைத் தெரிவிக்கிறார்கள்.* **"உதா₃ரா: ஸர்வ ஏவை தே"** *(என்னிடம் கேட்பவர்கள் அனைவருமே வள்ளல்கள்) (கீதை 7-18) என்று அவனே கூறியுள்ளபடி, பிற பயன்களை வேண்டித் தன்னிடம் வருபவர்களையும் வள்ளல்கள் என்று கூறிய அவனுடைய வள்ளல் தன்மை இங்கு ஒளிவிடுகிறது.* **(அண்டக் குலத்துக்கு) "அண்டா₃நாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச, ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடி கோடி ஶதாநி ச"** *(அந்த ப்ரக்ருதியில் பலகோடி நூறாயிரம் அண்டங்கள் இருக்கின்றன) (வி.பு.2.7.27) என்று கூறியுள்ளபடி, எண்ணில் அடங்காத அண்டங்களுக்குத் தலைவன் ஆகையால் வேண்டுவார் வேண்டுகின்ற அண்டங்களைக் கொடுப்பதற்கு வேண்டிய அண்டங்கள் அவனுக்கு உடைமையாக இருப்பதைக் கூறுகிறது.* **(அதிபதி)**

நிர்வாஹகனாகை. (ஆகி) ஆஸ்ரிதர் தன்னை அநுஸந்தி$_3$த்த அளவிலேயாயிருக்கை. ஐஸ்வர்யார்த்தி$_2$, ஐஸ்வர்ய விஸிஷ்டனாக அநுஸந்தி$_3$த்தால் அவ்வளவாயிருக்கும்; கைவல்யார்த்தி$_2$, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார க$_3$ந்த$_4$னாக அநுஸந்தி$_3$த்தால் அவ்வளவாயிருக்கும். (அசுரர் இராக்கதரை) இப்பத$_3$த்துக்கு அஸுரர்களாலே வேதா$_3$பஹாராதி$_3$ ஆபத்துக்களில் களையறுத்துக் கொடுக்கையும் ரக்ஷகனுக்கு ப$_4$ரமிறே. 'ஆர்த்தன்' என்றும், 'அர்த்தா$_2$ர்த்தி$_2$' என்றும் ஐஸ்வர்ய புருஷார்த்த$_2$ம் இரண்டு முக$_2$மாயிறே இருப்பது. அதில்

---

நித்ய விபூதி, லீலா விபூதி ஆகிய இரு விபூதிகளுக்கும் தலைவன். (ஆகி) அடியவர்கள் தன்னை எப்படி நினைக்கிறார்களோ அப்படியே தன்னை ஆக்கிக் கொள்ளுகிறான். செல்வத்தை விரும்புபவன், எம்பெருமானைச் செல்வத்தோடு கூடியவனாக நினைத்தால், அவனும் அப்படியே தன்னை ஆக்கிக் கொள்கிறான். கைவல்யத்தை விரும்புவன் எம்பெருமானை ஸம்ஸாரத்தோடு தொடர்பு இல்லாதவனாக நினைத்தால் அப்படியே தன்னை ஆக்கிக் கொள்கிறான். (அசுரரிர் இராக்கதரை) அண்டாதிபதி யான பிரமன் முதலியோருக்கு அசுரர்களால் வேதங்கள் அபகரித்துச் செல்லப்படுதல் போன்ற ஆபத்துகள் ஏற்பட்டால், அவற்றைப் போக்கிக் கொடுப்பதும், காப்பவனான எம்பெருமானுக்குப் பொறுப்பாகும். செல்வத்தை வேண்டுபவர்கள், ஆர்த்தன் (இழந்த செல்வத்தை வேண்டுபவன்) என்றும், அர்த்தார்த்தி (புதிதாகச் செல்வத்தை வேண்டுபவன்) என்றும் இருவகைப்

அர்த்தஊர்த்திஊயைக் கீழேசொல்லி, இவ்வம்ஶத்தாலே ஆர்த்தனைச் சொல்லுகிறது. ஜந்மப்ரப்₃ருதி ப்ராஂர்த்தஊமே பண்ணிப்போருவது இரண்டு வர்க்₃க₃மிறே. ஸம்ப₃ந்த₄ம் ஒத்திருக்க நிரஸநத்திலே இழிகிறது, ஆஶ்ரிதவிரோதி₄கள் என்றிறே. (இண்டக்குலத்தை) மிகவும் நெருங்கின திரளை. 'இண்டர்' என்று, சண்ட₃ாளர். இவர்களைச் சண்ட₃ாளர் என்று சொல்லுகிறது, நிஹீனரென்னும் நினைவாலே. உத்கர்ஷத்துக்கு எல்லை, பரஸம்ருத்₄யேக ப்ரயோஜநனாய் இருக்கை; நிகர்ஷத்துக்கெல்லை, ப்ராஂர்த்தஊமே யாத்ரையாய் இருக்கை. இவ்வாபத்துக்களிலே

---

படுவர். 'அண்டக்குலத்துக்கதிபதியாகி' என்ற இடத்தில் புதிய செல்வம் வேண்டுபவனைக் கூறி, 'அசுரர் இராக்கதரை எடுத்துக் களைந்த' என்ற இடத்தில் இழந்த செல்வத்தை வேண்டுபவனைக் கூறுகிறது. பிறவி தொடங்கிப் பிறரைத் துன்புறுத்துவதையே நோக்கமாகக் கொண்டவர்கள் அசுரரும் இராக்கதரும். தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் எம்பெருமானோடு உள்ள உறவு ஒன்றேயாயிருக்க, அசுரர்களை மட்டும் எம்பெருமான் அழிக்க முயல்வது, அவர்கள் அடியவர்களுக்கு எதிரிகள் என்ற காரணத்தினாலேயே. (இண்டக் குலத்தை) மிகவும் நெருங்கிய குலத்தை. இண்டர் என்பது சண்டாளரைக் குறிக்கும். அசுர ராக்ஷஸர்களைச் சண்டாளர் என்று கூறியது, அவர்கள் மிகவும் தாழ்ந்தவர்கள் என்ற கருத்தினால். மேன்மைக்கு எல்லை, பிறருடைய நன்மையையே விரும்புபவனாக இருத்தல். தாழ்வுக்கு எல்லை, பிறரைத் துன்புறுத்துவதையே

असुरशात्रवे नम: (அஸுர ஶத்ரவே நம:) என்றிறே இவர்களுடைய ஆஶ்ரயண ப்ரகாரமிருப்பது. (எடுத்துக் களைந்த) 'பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை' என்னுமாபோலே, ஆஶ்ரிதர் பக்கல் அழல் தட்டாதபடி நிரஸிக்கை. 'இலங்கை பாழாளாக' என்றதும் விபீ$_4$ஷண பரிக்$_3$ரஹத்துக்கு ஒரு நோவு வாராதபடியிறே; விபீ$_4$ஷணக்$_3$ருஹத்துக்கு அழல் தட்டாத படியிறே லங்காத$_3$ஹநம் பண்ணிற்றுத் திருவடியும். (இருடீகேசன்) ப்ரயோஜநாந்தரபரர்க்கு ஐஶ்வர்யாதி$_3$களிலே கர்மாநுகூலமாக ருசியைப் பிறப்பிக்கும்; தன் பக்கலிலே ந்யஸ்தப$_4$ரராயிருப்பார்க்கு ஸ்வரூபாநுரூபமாக ருசியைப்

---

இயல்வுடையவனாயிருத்தல். ஆபத்து வந்தால் "அஸுரஶத்ரவே நம:" என்று கூறிக் கொண்டுதான் தேவர்கள் எம்பெருமானை அடைவார்கள். (**எடுத்துக் களைந்த**) "பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" (திருப்பாவை-13) என்றபடி, அடியவர்கள் மீது அழல் (உஷ்ணம்) தட்டாத படியன்றோ அரக்கர்களை அழிப்பது! எனவே 'எடுத்துக் களைந்த' என்கிறார். 'இலங்கை பாழாளாக' என்றதும், விபீஷணனைச் சேர்ந்தவர்களுக்கு ஓர் ஆபத்தும் வராதபடியன்றோ இலங்கையை அழித்தது. அனுமன் இலங்கையை எரித்தபோதும் விபீஷணனுடைய இல்லத்திற்கு அழல் தட்டாதபடி யன்றோ கொளுத்தினான்! (**இருடீகேசன்**) இந்த்ரியங்களை நியமிப்பவன் என்பது பொருள். பிற பயன்களை விரும்புபவர்களுக்கு, அவர்களுடைய கர்மங்களுக்குச் சேர, செல்வம் முதலிய பயன்களில் ஆசையை விளைவிப்பான். தன்னைச் சரணம் அடைந்தவர்

பிறப்பிக்கும். ஐஸ்வர்யார்த்தமாக அவன்பக்கலிலே கண் வைக்கும்போதே அவன் வடிவழகிலே உறைக்க வையுங்கோள்; அவன் 'மமேதம்' என்கிற அபி$_4$ஸந்தி$_4$யைக் குலைத்துத் தன் பக்கலிலே ருசியைப் பிறப்பிக்கும்; அத்தாலே, அபேக்ஷித்த ஐஸ்வர்யத்தை விஸ்மரித்து அவன் தன்னையே பற்றலாம். (தனக்குத் தொண்டக்குலத்தில் உள்ளீர்) இப்படி ஐஸ்வர்யத்தில் ப்ரேமம்போய் ப$_4$க$_3$வத்ப்ரேம யுக்தருடைய திரளிலே உளரான நீங்கள். 'தொண்டக்குலம்' என்று, தனியே ஒரு ஸங்கமம்போலே காணும். 'தே$_3$ஹமே ஸ்வரூபம்' என்றிருப்பார்க்கும், 'ஶேஷத்வமே ஸ்வரூபம்' என்றிருப்பார்க்கும் இத்தனை வாசியுண்டிறே.

---

களுக்கு, அவர்களுடைய தன்மைக்குச் சேர கைங்கர்யத்தில் ஆசையை விளைவிப்பான். இப்படி அவரவர்களுடைய இந்த்ரியங்களை நியமிப்பவன் என்பது கருத்து. செல்வம் முதலிய பயன்களுக்காக அவனை நோக்கும்போது, அவன் திருமேனி அழகை உற்றுப் பாருங்கள். அவன் உங்களுடைய 'எனக்கு' என்ற ஆசையை அழித்துத் தன்னிடத்தில் விருப்பத்தை உண்டாக்குவான். அதனால், முன் விரும்பிய செல்வத்தை மறந்து, அவனையே பற்றலாம். **(தனக்குத் தொண்டக் குலத்திலுள்ளீர்)** இப்படி செல்வத்தில் ஆசை கழிந்து, எம்பெருமானிடத்தில் ஆசையுடைவர்கள் திரளில் சேர்ந்துள்ளவரான நீங்கள். 'தொண்டர் குலம்' என்று தனியே ஒரு குலம் உண்டு போலும்! 'உடலே நமக்கு வேண்டியது' என்று நினைப்பவர்களுக்கும், எம்பெருமானுக்கு அடிமைப் பட்டிருத்தலே நமக்கு

இனி, அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்குக் க்ருத்யம் இன்னது என்கிறார்மேல். (வந்தடிதொழுது) திருவடிகளே ப்ரயோஜநமாக வந்து அநுகூலவ்ருத்திகளைப்பண்ணி. ஐஶ்வர்யமே ப்ரயோஜநமாய் விஷயாநுப$_4$வமே யாத்ரையாய் இருக்கை தவிர்ந்து, திருவடிகளே ப்ரயோஜநமாய் அநுகூலவ்ருத்தியே யாத்ரையாயிருக்கும் படி பாருங்கோள். (ஆயிரநாமம் சொல்லி) இரண்டு திருநாமத்தையே நிர்ப்ப$_3$ந்தி$_4$க்க வேண்டுவது 'மமேத$_3$ம்' என்றிருக்குமன்றிறே; 'தவேத$_3$ம்' என்கிற பு$_3$த்$_3$தி$_4$ பிறந்தால், ப$_4$க$_3$வத்கு$_3$ண சேஷ்டிதங்களுக்கு வாசகமான

---

வேண்டியது என்று நினைத்திருப்பவர்களுக்கும் இடையே இவ்வளவு வேறுபாடு உள்ளதன்றோ!

இனி, வேறுபயன் கருதாதவர்கள் செய்ய வேண்டிய செயல் இன்னதென்று கூறுகிறார். (**வந்து அடி தொழுது**) திருவடிகளையே பயனாகக் கொண்டு வந்து அனுகூலமான செயல்களைச் செய்யவேண்டும். செல்வத்தையே பயனாகக் கருதி, புலன்களால் நுகரப்படும் இன்பங்களையே போதுபோக்காகக் கொண்டிருப்பதை விட்டு, எம்பெருமானுடைய திருவடிகளையே பயனாகக் கொண்டு, கைங்கர்யமே போதுபோக்காக இருக்கும்படி பாருங்கள். (**ஆயிரநாமம் சொல்லி**) "**அண்ட$_3$ாதி$_4$பதயே நம:**", "**அஸுர ஶத்ரவே நம;**" என்ற இரண்டு திருநாமங்கள் மட்டுமே சொல்ல வேண்டும் என்று வற்புறுத்துவது, 'எனக்கு' என்றிருக்கும்போதுதான். 'எம்பெருமானாகிய உனக்கு நான் அடிமை' என்ற எண்ணம் பிறந்து விட்டால், எம்பெருமானுடைய திருக்கல்யாண

திருநாமங்களெல்லாம் பே₄ாக்யமாயிறே இருப்பது; அவற்றை வாயாரச் சொல்லி. (பண்டைக் குலத்தைத் தவிர்ந்து) தொண்டக்குலத்திலே வந்து அந்வயித்தவாறே 'மமேத₃ம்' என்றிருந்த காலம் ஜந்மாந்தரமாய்த் தோற்றுமிறே. ஒரு ஜந்மத்திலே த்₃விஜந்மாவாகிறானிறே! ராஜர்ஷியான விஶ்வாமித்ரன், அந்த ஜந்மத்திலே ப்₃ரஹ்மர்ஷியானானிறே. அங்கு தபஸ்ஸாலே வர்ணபே₄த₃ம் பிறந்தது; இங்கு ப₄க₃வத் ப்ரஸாத₃த்தாலே ஸ்வரூப பே₄த₃ம் பிறந்தது. 'உனக்கு நான்' என்ற அநந்தரம், முன்பு 'நான் எனக்கு' என்றிருந்தவிது வியதிரேகமாய்த் தோற்றுமிறே. (பல்லாண்டு) இப்படி அநந்யப்ரயோஜநரான நீங்கள் மங்க₃ளாஶாஸநம்

---

குணங்களையும், திருவிளையாடல்களையும் தெரிவிக்கும் திருநாமங்கள் எல்லாம் இனிமையாகவே இருக்கும். எனவே ஆயிரம் நாமங்களையும் வாயாரச் சொல்லி. **(பண்டைக் குலத்தைத் தவிர்ந்து)** தொண்டக் குலத்தில் வந்து சேர்ந்தவுடன் 'எனக்கு' என்றிருந்த காலம் வேறு பிறவியாகவே தோன்றும். ஒரு பிறவியிலேயே மறுபிறவி எடுத்துவிடுகிறான். அரசர் குலத்தவனான விஶ்வாமித்ரன் அப்பிறவியிலேயே அந்தணர் குலத்தவனாக மாறினானன்றோ! அங்கு அவன் செய்த தவத்தால் குலம் மாறியது. ஆனால் இங்கு எம்பெருமானுடைய அருளினால் மாற்றம் ஏற்படுகிறது. எம்பெருமானை நோக்கி 'உனக்கு நான் அடிமை' என்றவுடன், இதற்கு முன்பு 'நான் எனக்கு' என்றிருந்த நிலை வேறுபட்டுத் தோன்றுமன்றோ! **(பல்லாண்டு)** இப்படி வேறுபயன்கள் எதையும்

பண்ணுங்கோள். 'ப்ரயோஜநாந்தரபரனாய்ப் போந்தவன் நமக்கு ஸம்ருத்$_3$தி$_4$யை ஆஶாஸிக்குமித்தனை பரிவனாகப் பெற்றோமே!' என்று அவன் குளிர நோக்கும். (பல்லாயிரத்தாண்டு என்மின்) பின்னை பல்லாயிரத்தாண்டு என்னுங்கோள். அங்நோக்கழகு நித்யஸ்ரீயாய்ச் செல்லவேணுமென்று மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுங்கோள். உங்களுக்கு இம்மாத்ரத்திலே ஸ்வரூபமும், அத்தாலே ஈஶ்வரனுக்கு ஸம்ருத்$_3$தி$_4$யும் உண்டாகப் பெற்றால் ஆறியிருக்கிறதென்? சடக்கென மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுங்கோளென்கிறார்.

ஆறாம்பாட்டு. (எந்தையித்யாதி) அநந்ய ப்ரயோஜநர்க்கும் ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உண்டான

---

விரும்பாமல், எம்பெருமானையே விரும்புகின்ற நீங்கள் எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்யுங்கள். 'நேற்றுவரை வேறுபயன்களையே விரும்பியிருந்தவன் இன்று நமக்கு நன்மையை விரும்புமளவுக்கு நம்மிடத்தில் பரிவு உடையவனாக ஆகிவிட்டானே!' என்று அவன் குளிர நோக்குவான். **(பல்லாயிரத்தாண்டு என்மின்)** பல்லாயிரத்தாண்டு என்று கூறுங்கள். அந்தக் குளிர்ந்த பார்வை என்றைக்கும் நித்யமாகச் செல்ல வேண்டும் என்று மங்களாஶாஸனம் செய்யுங்கள். உங்களுக்கு இதனால் மட்டுமே உங்கள் ஸ்வரூபமும் நிலைக்கப் பெற்று, எம்பெருமானுக்கும் நன்மை உண்டாகிறது என்றால் இனியும் பொறுத்திருக்க வேண்டுமோ? உடனே மங்களாஶாஸனம் செய்யுங்கள் என்கிறார்.

ஆறாம் பாட்டு. (எந்தை இத்யாதி) எம்பெருமானையே விரும்பும் அநந்யப்ரயோஜநர்க்கும்

நெடுவாசி அறிந்திருக்கச்செய்தேயும், அநந்யப்ரயோஜநரை அழைத்த ஸமநந்தரம் இவர்களை அழைக்கைக்கடி, உதாராஸ்ஸர்வ ஏவைதே (உதா₃ராஸ்ஸர்வ ஏவைதே) என்னுமவன் ஶீலத்தாலும், அவனோடு இவர்களுக்குண்டான அவர்ஜநீய ஸம்ப₃ந்த₄த்தாலும். இவர்களுக்கும் அவற்றையே நினைத்துத் தேங்காதே புகுரலாம்படியிறே இருப்பது; ஆகையாலே அநந்யப்ரயோஜநரை அழைத்தவோபாதி இவர்களையும் அழைத்தாராய் நின்றார் கீழ்; இதில், வாழாளில் அழைத்த அநந்யப்ரயோஜநர்,

---

வேறுபயன்களை விரும்புபவர்களுக்கும் இடையே உள்ள மிக்க வேறுபாட்டை நன்றாக அறிந்தவர் பெரியாழ்வார். ஆயினும் அவ்வநந்யப்ரயோஜநரை அழைத்தவுடன், வேறுபயன்களை விரும்புபவர்களான கைவல்யார்த்திகளையும் ஐஶ்வர்யார்த்திகளையும் அழைத்தார். அதற்குக் காரணங்கள் பல. “உதா₃ரா: ஸர்வ ஏவை தே” (என்னிடம் வந்து பயன்களைக் கேட்பவர்கள் அனைவருமே வள்ளல்கள்) (கீதை 7-18) என்று அவனே கூறியுள்ளபடி, பிற பயன்களை வேண்டித் தன்னிடம் வருபவர்களையும் வள்ளல்கள் என்று கூறிய அவனுடைய வள்ளல் தன்மையைக் கருத்தில் கொண்டும், எம்பெருமானோடு இவர்களுக்கு உள்ள பிரிக்கமுடியாத தொடர்பைக் கொண்டும் அவர்களையும் அழைத்தார். வேறு பயன்களை விரும்புபவர்களும், தயங்காமல் புகலாம்படியன்றோ அவனிருப்பது! எனவே அநந்ய ப்ரயோஜநர்களை அழைத்ததுபோலவே மற்றவர்களையும் அழைத்தார் கீழ் இரு பாசுரங்களில். இப்பாசுரத்தில், ‘வாழாள்

தங்கள் ஸ்வரூபத்தையும் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் சொல்லிக்கொண்டு வந்து புகுர, அவர்களைக் கூட்டிக் கொள்ளுகிறார். 'ஏழாட்காலும் பழிப்பிலோம்' என்று ப்ரயோஜநாந்தரபரரைக் குறித்துத் தாமருளிச்செய்த தம்முடைய திரளுக்குண்டான ஏற்றத்தை, புகுருகிறவர்கள், தங்களுக்கு உண்டாகச் சொல்லிக் கொண்டு வந்து புகுருகிறார்கள். தந்தாம் ஏற்றம் சொல்லிக் கொண்டு வந்து புகுருகை ஸாத்விகர்க்கு யுக்தமோ? என்னில், ஆழ்வாருடைய திருவுள்ளம் ப$_4$யம் கெடுகைக்காகச் சொல்லுகிறார்கள் ஆகையாலே யுக்தம்.

---

என்று தொடங்கும் மூன்றாம் பாசுரத்தில் அழைக்கப்பட்ட அநந்ய ப்ரயோஜநர்கள் தங்கள் தன்மையையும், அதற்குத் தகுதியான செயல்களையும் சொல்லிக் கொண்டு வந்து சேர, அவர்களையும் கூட்டிக் கொள்கிறார் பெரியாழ்வார். பிற பயன்களை விரும்புபவர்களை நோக்கி 'ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்' என்று தம்முடைய திரளின் பெருமையைக் கூறிக் கொண்டாரல்லவா! அதே பெருமை தங்களுக்கும் உண்டு என்று கூறிக்கொண்டு அநந்யப்ரயோஜநர்கள் வந்து சேருகிறார்கள். தங்களுடைய பெருமையைத் தாங்களே கூறிக் கொள்வது தற்பெருமையாகாதோ எனில், மங்களாஶாஸனம் செய்வதற்கு ஒருவரும் இல்லையே என்று ஆழ்வாருடைய திருவுள்ளத்தில் இருந்த பயம் கெடுவதற்காக அப்படிச் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். சீதைப்பிராட்டியைத் தேடிச் செல்வதற்காகக் கடலைத் தாண்டும் வல்லமை ஒருவருக்கும் இல்லையே என்று அஞ்சிய வானர வீரர்

**पन्नगाशनमाकाशे पतन्तं पक्षिसेविते। वैनतेयमहं शक्तः परिगन्तुं सहस्रशः (பந்நகா₃ஶநமாகாஶே பதந்தம் பக்ஷிஸேவிதே, வைநதேயம் அஹம் ஶக்த: பரிக₃ந்தும் ஸஹஸ்ரஶ:) என்று, திருவடி, ஸ்வஶக்தியைச் சொன்னானிறே முதலிகளுடைய ப₄யம் ஶமிக்கைக்காக.**

---

களின் பயம் கெடுவதற்காக அனுமன், "**பந்நகா₃ஶநம் ஆகாஶே பதந்தம் பக்ஷிஸேவிதே வைநதேயம் அஹம் ஶக்த: பரிக₃ந்தும் ஸஹஸ்ரஶ:**" (பாம்புகளை உணவாகக் கொள்பவனான கருடன் பறவைகள் பறக்கும் ஆகாசத்தில் பறந்து கொண்டிருக்கும்போது, அவனை நான் ஆயிரம்முறை வலம் வரவல்லவன்) என்று தன்னுடைய பெருமையைக் கூறிக் கொண்டான்றோ!

**எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பன்**
**ஏழ்படிகால்தொடங்கி***
**வந்துவழிவழியாட்செய்கின்றோம்***
**திருவோணத்திருவிழவில்**
**அந்தியம்போதிலரியுருவாகி**
**அரியையழித்தவனை***
**பந்தனைதீரப்பல்லாண்டு**
**பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே. 6**

| | |
|---|---|
| எந்தை | - நானும் என் தகப்பனும், |
| தந்தை | - அவனுடைய தகப்பனும், |
| தந்தை | - அவனுடைய தகப்பனும், |
| தந்தை | - அவனுடைய தந்தையும், |
| தம் மூத்தப்பன் | - அவனுக்குத் தந்தையும் பாட்டனுமாகிய, |
| ஏழ் படி கால் தொடங்கி | - ஏழு தலைமுறைகள் தொடங்கி, |

| | |
|---|---|
| வந்து | - தக்க காலங்களிலே வந்து, |
| வழி வழி | - முறை முறையாக, |
| ஆட்செய்கின்றோம் | - அடிமை செய்கிறோம், |
| திருவோணத் திருவிழவில் | - திருவோணமென்கிற திருநாளிலே |
| அந்தியம் போதில் | - அந்தி வேளையிலே, |
| அரி உருவாகி | - நரசிங்க உருவத்தை உடையவனாய் |
| அரியை | - விரோதியான இரணியனை, |
| அழித்தவனை | - உருவழித்தவனுக்கு, |
| பந்தனை தீர | - களைப்பு தீரும்படியாக, |
| பல்லாண்டுபல்லாயிரத்து | - காலதத்த்வம் உள்ளவரையில் |
| ஆண்டு என்று பாடுதும் | - மங்க₃ளாசாஸநம் செய்வோம். |

(எங்கை) தானும் தமப்பனுமாக இருவர். (தங்தை தங்தை தங்தை) என்று ஒரு மூவர். (தம்மூத்தப்பன்) 'தம்' என்று முடிங்தவனை அநுப₄ாஷிக்கிறது. (மூத்தப்பன்) 'அப்பன்' என்று தமப்பனார், 'மூத்தப்பன்' என்று பாட்டனார்; ஆகையாலே அங்கே இருவர்; ஆக, எழுவரையும் சொல்லுகிறது. ஆழ்வார் 'ஏழாட்காலும் பழிப்பிலோம்' என்று திரள அருளிச்செய்தார்;

---

(எந்தை) என்னுடைய தந்தை என்று பொருள் ஆகையால், தானும் தந்தையுமாக இருவர்; (தந்தை தந்தை தந்தை) என்று மூவர்; (தம் மூத்தப்பன்) தம் என்பது கடைசியாகச் சொல்லப்பட்ட தந்தையினுடைய என்ற பொருளுடையது. (மூத்தப்பன்) அப்பன் என்று தகப்பனார், மூத்தப்பன் என்று பாட்டனார்; ஆகையால் அங்கே இருவர்; ஆக எழுவரைச் சொல்லுகிறது. ஆழ்வார் 'ஏழாட்காலும் பழிப்பிலோம்' என்று மொத்தமாக அருளிச்செய்தது

இவர்களும், (ஏழ்படிகால்) என்று திரளச் சொல்லாநின்றார்கள். பிரித்துச் சொல்லுகிற இதுக்கு பலமென்? என்னில்; ஸ்வஸந்தாநத்தில் மங்க₃ளாஶாஸநம் பண்ணிப் போந்தவர்கள் பக்கலுண்டான ப்ரீத்யதிஶயத்தாலே சொல்லுகிறார்கள். सहि विद्यातस्तं जनयति तच्छ्रेष्ठं जन्म (ஸ ஹி வித்₃யாதஸ்தம் ஜநயதி தச்ச்₂ரேஷ்ட்ட₂ம் ஜந்ம) गरीयान् ब्रह्मदः पिता (க₃ரீயாந் ப்₃ரஹ்மத₃: பிதா) என்று வித்₃யாஸந்தாநத்தைக் கொண்டாடுமாபோலே, पितरं मातरं दारान् (பிதரம் மாதரம்

---

போல இவர்களும் 'ஏழ்படிகால்' என்று மொத்தமாகவும் கூறிக் கொள்கிறார்கள். ஆயினும் 'எந்தை தந்தை தந்தை தம்மூத்தப்பன்' என்று ஏழு தலைமுறைகளையும் தனித்தனியே பிரித்துக் கூறியதற்குக் கருத்து என்ன எனில், தங்கள் பரம்பரையில் வந்த அனைவருமே மங்களாஶாஸநம் செய்து வந்தவர்கள் என்ற அன்பின்மிகுதியினால் கூறுகிறார்கள். **"ஸ ஹி வித்₃யாதஸ் தம் ஜநயதி தச்ச்₂ரேஷ்ட₂ம் ஜந்ம"** (ஆசார்யனே கல்வியினால் சிஷ்யனைப் பிறப்பிக்கிறான்) (ஆப. ஸூ. 1-1-6) என்றும், **"க₃ரீயாந் ப்₃ரஹ்மத₃: பிதா"** (வேதமோதுவித்த தந்தையே உயர்ந்தவன்) (மநு 2-146) என்றும் ப்ரம்மவித்யையின் பரம்பரையைக் கூறுகிறபடி, கொண்டாடுவது உண்டு. ஆனால் **"பிதரம் மாதரம் தா₃ராந் புத்ராந் பந்தூ₄ந் ஸகீந் கு₃ரூந், ரத்நாநி த₄நதா₃ந்யாநி க்ஷேத்ராணிச க்₃ருஹாணிச, ஸர்வ த₄ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந், லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தே**

த$_3$ாராங்) என்று த்யாஜ்யமான யோநி ஸந்தாநத்தைக் கொண்டாடுகை யுக்தமோ? என்னில், யுக்தம்; கொண்டாடுகைக்கு ப்ரயோஜநம் ப$_4$க$_3$வத்ஸம்ப$_3$ந்த$_4$ம் ஆகையாலே. வித்$_3$யாஸந்தாநத்திலும் ப$_4$க$_3$வத்விமுக$_2$ன் த்யாஜ்யனல்லனோ? (ஏழ்படிகால்தொடங்கி) அர்த்த$_2$ க்ரமத்தாலே ஏழையும் சொல்லச்செய்தேயும் திரளச்

---

*அவ்ரஜம் விபே$_4$ா" (தந்தை, தாய், மனைவி, பிள்ளைகள், உறவினர், நண்பர்கள், ஆசார்யர்கள், ரத்தினங்கள், தனதான்யங்கள், வயல்கள், வீடுகள், உபாயங்கள், கைவல்யம் உள்ளிட்ட எல்லாப் பயன்கள் ஆகிய எல்லாவற்றையும் வாஸனையுடன் விட்டு, பகவானே! திருவுலகளந்த உன் திருவடிகளைச் சரணமடைகிறேன்) (விஹகே. 22) என்று கூறியுள்ளபடி, விடத் தக்கதான குடிப் பரம்பரையைக் கொண்டாடிக் கொள்வது தகுதியோ, எனில், அப்படிக் கொண்டாடிக் கொள்வதன் பயன் எம்பெருமானுடன் உள்ள தொடர்பைக் கருத்தில் கொண்டாகையால் தகுதியானதே. ப்ரம்ம வித்யையின் பரம்பரையைக் காட்டிலும், பகவானை வெறுப்பவனை விடவேண்டியது அவசியமன்றோ? (பகவானை வெறுப்பவர்க ளுடைய தொடர்பைக் காட்டிலும் ப்ரம்மவித்யையை உபதேசித்தவர் களுடன் தொடர்பு உயர்ந்தது. அதைக்காட்டிலும் பகவானுக்கு மங்களாஶாஸநம் செய்பவர்களுடைய தொடர்பு மிக உயர்ந்தது. எனவே அப்படிப்பட்ட தொடர்பையே இங்கு கூறிக் கொள்கிறார்கள்.)* **(ஏழ்படிகால் தொடங்கி)** *'எந்தை தந்தை தந்தை தம்மூத்தப்பன்' என்று தனித்தனியே ஏழு தலைமுறை*

சொல்லுகிறது, ஸ்வஸந்தாநத்திலுண்டான ஆத₃ராதிஶயத்தாலே. (வந்து) மங்க₃ளாஶாஸநம் பண்ணுகைக்கு யோக்₃யமான த₃ஶைகளிலே வந்து. (வழிவழியாட் செய்கின்றோம்) முறைமுறையாகத் தப்பாமே அடிமை செய்கின்றோம். இத்தால், இஸ்ஸந்தாநத்துக்கு மங்க₃ளாஶாஸந விச்சே₂தம் பிறந்ததில்லையென்கை. யாஜ்ஞிக ஸந்தாநத்துக்கு த்ரிபுருஷ விச்சி₂த்தியாலே அப்₃ராஹ்மண்யம் சொல்லுமாபோலே, மங்க₃ளாஶாஸந விச்சி₂த்தியால் வைஷ்ணவத்வஹாநி சொல்லும் குறை எங்கள் ஸந்தாநத்தில் இல்லை என்கிறார்கள். यस्य वेदश्च वेदी

---

களையும் கூறியிருந்தும், தம்முடைய பரம்பரையின் மீதுள்ள அன்பின் மிகுதியினால் மறுபடியும் 'ஏழ்படிகால்' என்று கூறுகிறார்கள். **(வந்து)** மங்களாஶாஸநம் செய்வதற்குத் தகுதியான நிலைகளில் வந்து. **(வழி வழி ஆட்செய்கின்றோம்)** வழிமுறைகள் தப்பாமல் அடிமை செய்கின்றோம். இதனால், தங்கள் பரம்பரையில், ஏழு தலைமுறைகளிலும் இடையறாமல் தொடர்ச்சியாக மங்களாஶாஸநம் செய்துள்ளமை கூறப்படுகிறது. மூன்று தலைமுறைகள் தொடர்ந்து வேதம் கற்காதவர்களாக இருப்பார்களாயின் அவர்கள் பிராம்மணர்கள் அல்ல என்றும், அவர்களுக்கு யாகங்கள் செய்ய அதிகாரமில்லை என்றும் சாத்திரங்கள் கூறுகின்றன. அதுபோல, தொடர்ந்து சில தலைமுறைகள் எம்பெருமானுக்கு மங்களாஶாஸனம் செய்யாமல் இருந்துவிட்டால் அத்தலைமுறையினர் வைஷ்ணவர்களே அல்லர்

च विच्छिद्येते त्रिपूरुषं। स वै दुर्ब्राह्मणो ज्ञेयस्सर्वकर्म बहिष्कृतः॥ (யஸ்ய வேத₃ஶ்ச வேதீ₃ச விச்சி₂த்₃யேதே த்ரிபூருஷம் ஸ வை துர்ப்₃ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்ம ப₃ஹிஷ்க்ருத:) என்னக்கடவதிறே. 'வழிவழி' என்று ஶாஸ்த்ர மார்க்க₃த் தாலும் ஶிஷ்டாசாரத்தாலுமென்றுமாம். शान्तिश्शान्तिश्शान्तिः (ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி:) என்றும், पश्येम शरदश्शतं (பஶ்யேம ஶரத₃ஶ்ஶதம்) என்றும்,

---

என்னும் குற்றம் எங்கள் பரம்பரைக்கு இல்லை என்கிறார்கள். "**யஸ்ய வேத₃ஶ்ச வேதீ₃ச விச்சி₂த்₃யேதே த்ரிபூருஷம் ஸவை துர்ப்₃ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வ கர்ம ப₃ஹிஷ்க்ருத:**" (எவனுக்கு வேதாத்யயனமும், யாகவேதியும் (யாகத்தில் பயன்படுத்தப்படும் மணை போன்ற ஒரு பொருள்) மூன்றுதலைமுறைகள் விட்டுப் போகின்றனவோ, அவன் கெட்ட பிராமணன் என்றும் எவ்வித வைதிக கர்மங்களுக்கும் தகுதியற்றவன் என்றும் அறியத் தக்கவன்) என்று கூறப்பட்டுள்ளது. (வழி வழி) என்று இரண்டு முறை கூறியது, மங்களாஶாஸநம் செய்வது பற்றிச் சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள வழிகளையும், பெரியவர்கள் பின்பற்றிய வழிகளையும் குறிப்பிடுகின்றது. "**ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி:**" (தை. சீக்ஷா.1) (ஶாந்தி ஏற்படட்டும், ஶாந்தி ஏற்படட்டும், ஶாந்தி ஏற்படட்டும்) என்றும், "**பஶ்யேம ஶரத₃ஶ் ஶதம்**" (மாத்யாஹ்நிக மந்த்ரம்) (நூறுவருடங்கள் பார்க்கக் கடவோம்) என்றும் சாத்திரங்களில் மங்களாஶாஸநம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. "**ஸ்த்ரியோ வ்ருத்₃த₄ாஸ்**

सर्वान्देवान् नमस्यन्ति (ஸர்வாங் தே₃வாங் நமஸ்யந்தி) என்றும், मङ्गलानि प्रयुञ्जाना: (மங்க₃ளாநி ப்ரயுஞ்ஜாநா:) என்றும் சொல்லக் கடவதிறே. (ஆட் செய்கின்றோம்) ஆட்செய்கையாவது, திருப்பல்லாண்டு பாடுகையிறே; மேலே 'பந்தனை தீரப் பல்லாண்டு' என்றத்தை வ்ருத்தியாகச் சொல்லுகையாலே. இதுக்குக்கீழ்,

---

**தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா: ஸர்வாந் தே₃வாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே₂ யஶஸ்விந:"** (புகழை உடைய பெண்களும், முதியவர்களும், யுவதிகளும், பகலும் இரவும் கூடியிருந்து ராமனுக்கு நன்மை உண்டாக வேண்டும் என்பதற்காக எல்லா தேவதைகளையும் வணங்குகிறார்கள்) (ரா.அ.2-52) என்றும், **"தே தம் ஸோமமிவோத்₃யந்தம் த்₃ருஷ்ட்வா வை த₄ர்மசாரிண: மங்க₃ளாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்₃ருஹ்ணந் த்₃ருட₃வ்ரதா:"** (அறநெறி வழுவாதவர்களும், உறுதியான விரத்தை உடையவர்களுமான அந்த (தண்டகாரண்ய) முனிவர்கள், உதிக்கும் சந்திரனைப் போன்ற இராமபிரானைப் பார்த்து மங்களாஶாஸநம் செய்து வரவேற்றார்கள்) (ரா. ஆ. 1-11) என்றும் கூறியுள்ளபடி, முன்னோர்கள் மங்களாஶாஸம் செய்துள்ளார்கள் என்ற ஆதாரமும் இதற்கு உண்டு. **(ஆட் செய்கின்றோம்)** ஆட்செய்கை என்பது திருப் பல்லாண்டு பாடுவதைக் குறிக்கும். 'பந்தனை தீரப் பல்லாண்டு' என்று திருப்பல்லாண்டு பாடுவதையே தங்களுடைய செயலாக இவர்கள் முடிவில் கூறிக்கொண்டுள்ளதையும் காணலாம். இதற்கு

தங்களுடைய ஸந்தாநத்தில் ஏற்றம் சொன்னார்களாய், மேல், தங்களுடைய வ்ருத்திவிஶேஷம் சொல்லுகிறார்கள். (திருவோணத்திருவிழவில்) விஶேஷித்து திருநக்ஷத்ரம் சொல்லாதவிடத்துக்கெல்லாம் இதுவே திருநக்ஷத்ரம் ஆகக்கடவது. 'திருவோணம்' என்கிறது ஜந்ம நக்ஷத்திரம் என்னில் உகவாதார் அறிந்து அபி$_4$சரிப்பர்கள் என்று

---

முன்பு தங்கள் பரம்பரையின் பெருமையைக் கூறினார்கள். இனி, தங்களுடைய செயலின் பெருமையைக் கூறுகிறார்கள். (**திருவோணத் திருவிழவில்**) நரசிங்கப் பெருமானுக்கு மங்களாஶாஸனம் செய்ய முற்படுபவர்கள் அவனுடைய நக்ஷத்ரமான ஸ்வாதி நட்சத்திரத்தைக் கூறாமல் திருவோணம் என்று கூறுவதற்குக் காரணம் என்ன எனில், குறிப்பிட்டு நக்ஷத்ரம் கூறப்படாத அவதாரங்களுக்கெல்லாம் திருவோணமே நக்ஷத்ரமாகக் கொள்ளலாம் என்பதனால் அப்படிக் கூறுகிறார்கள். (திருவோணம் என்பது பொதுவாக விஷ்ணுவின் நக்ஷத்ரமாகும்.) மேலும் நக்ஷத்ரம் என்று கூறாமல், திருவிழவில் (திருநாளில்) என்று கூறியதற்குக் காரணம் என்ன எனில்; விரோதிகள் எவரேனும் அபிசாரம் (சூனியம் வைத்தல் போன்றது) செய்ய நினைத்தால், அதற்கு 'இன்ன நக்ஷத்திரத்தில் பிறந்தவனுக்குத் தீங்கு உண்டாக வேண்டும்' என்று ஸங்கல்பம் செய்துகொண்டுதான் செய்யவேண்டும். திருவோணம் என்பது அவனுடைய பிறந்த நக்ஷத்ரம் என்று தம் வாயால் கூறினால், விரோதிகள் அதைத் தெரிந்துகொண்டு, அவனுக்குத் தீங்கு விளைவிக்க நினைத்து அபிசாரம்

அஞ்சி, 'திருவோணம் என்கிற திருநாளிலே' என்று மறைத்துச் சொல்லுகிறார். (அந்தியம் போதில்) தே₃வர்களுக்கு ப₃லம் க்ஷீணமாய் அஸுரர்க்கு ப₃லம் வர்த்₃தி₄க்கும் ஸமயத்திலே. (அரியுருவாகி) ஒரு கால விஶேஷம் வேண்டாதே ஸர்வ காலமும் மங்க₃ளாஶாஸநம் பண்ணவேண்டும்படியான வடிவையுடையனாய். नारसिंहवपुः श्रीमान् (நாரஸிம்ஹவபு: ஶ்ரீமாங்) என்றும், 'அழகியான்தானே அரியுருவன்தானே' என்றும், 'நரங் கலந்த சிங்கமாய்' என்றும் சொல்லக் கடவதிறே. (அரியை அழித்தவனை) 'அரி' என்று, ஶத்ரு. ஸஹஜ ஶத்ருவான ஹிரண்யனைக் குற்றுயிராக்கிவிடாதே

---

செய்து விடுவார்களோ என்று அஞ்சிப் பரிவினால் அதை மறைத்து, நக்ஷத்ரம் என்று கூறாமல் திருநாளில் என்று கூறுகிறார். **(அந்தியம்போதில்)** தேவர்களுக்கு பலம் குறைந்தும் அசுரர்களுக்கு பலம் அதிகமாகவும் இருக்கும் மாலைப் பொழுதில். **(அரியுருவாகி)** ஒரு குறிப்பிட்ட காலம் என்றில்லாமல் எல்லாக் காலத்திலும் பரிவுடன் மங்களாஶாஸநம் செய்ய வேண்டும் படியான அழகிய நரசிங்க வடிவை உடையவனாய். **"நாரஸிம்ஹவபு: ஶ்ரீமாந்"** (நரங்கலந்த சிங்க வடிவை உடையவன்; மிக்க அழகையுடையவன்) (விஷ்ணு ஸஹஸ்ரநாமம்) என்றும், 'அழகியான் தானே அரியுருவன்தானே' (நான்.திரு. 22) என்றும், 'நரங் கலந்த சிங்கமாய்' (இர.திரு.84) என்றும் கூறப்பட்டுள்ளபடி அவனுடைய திருமேனி மிகவும் அழகு உடையதன்றோ! **(அரியை அழித்தவனை)** பிறவி முதற் கொண்டே விரோதியாகத் திகழ்ந்த

உருவழித்தவனை. 'சுகிர்ந்தெங்கும் சிந்தப் பிளந்த' என்னக்கடவதிறே. அவனை அழியச் செய்தது ப₄யஸ்த₂ாநமாகிறது, பின்புள்ளார் பகை கொண்டாடுவர் என்னுமத்தாலே. (பந்தனை தீர) துஷ்ப்ரக்ருதியான ஹிரண்யனுடலைக் கீண்டு பொகடுகையால் வந்த அனுக்கம் தீர. திருவவதரித்த தி₃வஸத்திலுண்டான அபத₃ாநமாகையாலே 'அனுக்கம்' என்கிறதிறே. (பல்லாண்டு) அநுகூலர் வாயாலே ஒருகால்

---

இரணியனைக் குற்றுயிராக்கி விட்டுவிடாமல், அழித்துவிட்டவனை. 'சுகிர்ந்தெங்கும் சிந்தப் பிளந்த' (மூன்.திரு.95) என்று அருளிச் செய்யப்பட்டுள்ள தன்றோ! இரணியனை விட்டு வைக்காமல் அழித்துவிட்டது குறித்துப் பெரியாழ்வார் அஞ்சுவதற்குக் காரணம் என்ன எனில், இரணியனைச் சேர்ந்தவர்கள் அதனால் பகை கொள்ளுவர்களே என்றஞ்சுகிறார். (பந்தனை தீர) தீய தன்மைகளை உடைய இரணியன் உடலைக் கிழித்துப் போட்டதால் உண்டான அனுக்கம் (நடுக்கம்) தீரும்படியாக. நரசிங்கப்பிரானாகத் திருவவதரித்த அன்றே ஏற்பட்ட நிகழ்ச்சியாகையால் அனுக்கம் என்கிறார். (அனுக்கம் என்பது குழந்தை பிறந்தவுடன் அதற்கு ஏற்படும் ஒரு வகை நடுக்கம் என்பர். நரசிங்கப்பிரான் தூணிலிருந்து தோன்றிய அடுத்த கணமே இரணியனுடன் போரிட்டான் ஆகையால், அவனுக் கு அனுக்கம் தீர்வதற்கு முன்னமே இரணியனுடன் போரிடுகிறானே; அவனுக்கு ஓர் ஆபத்தும் நேராமல் இருக்க வேண்டுமே என்று பரிவுடன் மங்களாஶாஸனம்

மங்க₃ளாஶாஸநம் பண்ண, அவ்வஸ்துவினுடைய அனுக்கம் போய், நித்யமாய்ச் செல்லும் என்றிறே இவர்கள் நினைவு. (பல்லாயிரத்தாண்டு என்று பாடுதுமே) ஒருகால் 'பல்லாண்டு' என்றத்தால் பர்யாப்தி பிறவாமையாலே காலதத்வம் உள்ளதனையும் நித்யமாய்ச் செல்லவேணும் என்று மங்க₃ளா ஶாஸநம் பண்ணுகையே எங்களுக்கு வ்ருத்தி என்கிறார்கள்.

ஏழாம்பாட்டு. (தீயிற்பொலிகின்ற) ஏடுநிலத்திலே இவராலே ஆஹூதரான கைவல்யார்த்திகள், தங்கள் ஸ்வப₄ாவத்தைச் சொல்லிக்கொண்டு வர, அவர்களோடே ஸங்க₃தராகிறார். இவர்களை அழைத்தபோது,

---

செய்யப்படுகின்றது.) (பல்லாண்டு) அடியவர்கள் தங்கள் வாயால் ஒருமுறை மங்களாஶாஸநம் செய்தால், அதனால் அவனுடைய அனுக்கம் தீர்ந்து ஒருகுறையும் வாராமல் நித்தியமாக இருப்பான் என்றன்றோ இவர்கள் நினைவு! (பல்லாயிரத்தாண்டு) ஒருமுறை மங்களாஶாஸனம் செய்தமையால் திருப்தி ஏற்படாமையினால், காலம் உள்ளவளவும் எம்பெருமானுக்கு ஒரு தீங்கும் நேராமல் நித்தியமாகச் செல்லவேண்டும் என்று தொடர்ந்து மங்களாஶாஸநம் செய்வதே எங்கள் செயல் என்கின்றனர்.

ஏழாம்பாட்டு. **(தீயிற்பொலிகின்ற)** 'ஏடு நிலத்தில்' என்று தொடங்கும் நான்காம் பாசுரத்தில் பெரியாழ்வாரால் அழைக்கப்பட்ட கைவல்யார்த்திகள் தங்கள் தன்மைகளைச் கூறிக் கொண்டு வர, அவர்களுடன் கூடுகிறார் இப் பாசுரத்தில். அவர்களை அழைத்தபோது 'வரம்பொழி

'ஏம்பொழி வந்து ஒல்லைக் கூடுமினோ' என்று, 'நீங்கள் பற்றின புருஷார்த்தத்தை விட்டு வாருங்கோள்' என்றும், 'நமோ நாராயணாய' என்று, 'அநந்ய ப்ரயோஜநராய் வாருங்கோள்' என்றும், 'நாடுநகரமும் நன்கறிய' என்று 'விஶேஷஜ்ஞர் பரிக்₃ரஹிக்கும்படியாகவும் அவிஶேஷஜ்ஞர் உபேக்ஷிக்கும்படியாகவும் வாருங்கோள்' என்றுமிறே அவர்களை அழைத்தது. அதில் 'க்ஷுத்ர புருஷார்த்தத்தை விடுகையும் அநந்யப்ரயோஜநராகையும் நம்முடைய க்ருத்யம்; அநுகூலர் பரிக்₃ரஹிகைக்கும் ப்ரதிகூலர் கைவிடுகைக்கும் செய்ய அடுப்பதென்?' என்று பார்த்து, வைஷ்ணவ

---

வந்தொல்லைக் கூடுமினோ' என்று, "நீங்கள் விரும்பிய பயனாகிய கைவல்யத்தை விட்டுவிட்டு வாருங்கள்" என்றும், 'நமோ நாராயணாய' என்று, "எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதைத் தவிர, வேறு பயன்களை விரும்பாதவர்களாக வாருங்கள்" என்றும், 'நாடும் நகரமும் நன்கறிய' என்று, "மிக்க அறிவுள்ளவர்கள் உங்களை ஏற்றுக்கொள்ளும்படியாகவும், அறிவில்லாத வர்கள் உங்களைக் கைவிடும்படியாகவும் வாருங்கள்" என்றுமன்றோ அழைத்தார். அதைக் கேட்ட கைவல்யார்த்திகள், 'தாழ்ந்த பயனாகிய கைவல்யத்தை விடுவதும், உயர்ந்த பயனாகிய கைங்கர்யத்தைக் கொள்வதும் நாம் செய்யக் கூடிய செயல். ஆனால் எம்பெருமானுடைய அடியவர்கள் நம்மைக் கைக்கொள்வதற்கும், மற்றவர்கள் நம்மைக் கைவிடுவதற்கும் ஏற்றவாறு நாம் செய்யக் கூடியது என்ன?' என்று யோசித்தார்கள். 'ஸ்ரீவைஷ்ணவ சின்னமான

சிஹ்நமான திருவிலச்சினையைத் த$_4$ரிக்கவே த்யாக$_3$ உபாதே$_3$யங்களிரண்டும் ஸித்$_3$தி$_4$க்குமென்று பார்த்து அத்தைத் த$_4$ரித்துக்கொண்டு வந்தோம் என்கிறார்கள்.

---

திருவிலச்சினையைத் (சங்கு சக்கரங்களை) தரித்துக் கொண்டால், ஸ்ரீவைஷ்ணவர்கள் 'இவன் நம்முடையவன்' என்று கைக்கொள்வதற்கும், மற்றவர்கள் 'இவன் நம்முடையவன் அல்லன்' என்று கைவிடுவதற்கும் ஏற்றதாக அமையும் என்று முடிவு செய்து, திருவிலச்சினையான சங்குசக்கர சின்னங்களை தரித்துக்கொண்டு வந்தோம் என்கிறார்கள்.

தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி
திகழ்திருசக்கரத்தின்*
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின்று
குடிகுடியாட்செய்கின்றோம்*
மாயப்பொருபடைவாணனை
ஆயிரந்தோளும்பொழிகுருதி
பாய*சுழற்றியவாழிவல்லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 7

| | |
|---|---|
| தீயில் | - நெருப்பு, சூரியன் போன்ற ஒளிபொருள்களைவிட |
| பொலிகின்ற | - மிகவும் விளங்குகிற |
| செஞ்சுடர் | - சிவந்த ஒளியை உடையவனாய், |
| ஆழி | - வட்டமாக, |
| திகழ் | - பிரகாசிக்கிற, |
| திருச்சக்கரத்தின் கோயில் | - ஸ்ரீசக்கரத்தாழ்வானுடைய இருப்பிடத்தின் |

| | |
|---|---|
| பொறியாலே | - சின்னத்தாலே, |
| ஒற்றுண்டு நின்று | - அடையாளம் செய்யப்பட்டு நின்று, |
| குடிகுடி | - தலைமுறை தலைமுறையாக, |
| ஆள் செய்கின்றோம் | - அடிமை செய்வதற்காக வந்தோம்; |
| மாயப்பொரு படை | - வஞ்சனையாகப் போரிடும் ஸேனையை உடைய, |
| வாணனை | - பாணாஸுரனுடைய, |
| ஆயிரம் தோளும் | - ஆயிரம் தோள்களிலிருந்தும், |
| பொழி குருதி பாய | - பொழியும் ரத்தவெள்ளம் பாயும்படி |
| சுழற்றிய | - சுழற்றப்பெற்ற, |
| ஆழி | - திருவாழியாழ்வானை, |
| வல்லானுக்கு | - ஏந்தி நிற்க வல்லவனுக்கு, |
| பல்லாண்டு கூறுதும் | - திருப்பல்லாண்டு பாடுகிறோம். |

**(தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி) என்று வைஷ்ணவ கே₃ாஷ்டியிலே புகுரப்பண்ணின உபகார ஸ்ம்ருதியாலே ஆழ்வானைக் கொண்டாடுகிறார்கள். (தீயிற்பொலிகின்ற) 'தீ' என்கிற ஶப்த₃ம் சந்த்₃ராதி₃த்யாதி₃ தேஜ:பதா₃ர்த்த₂ங்கள் எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். (அதிற்காட்டில் தேஜஸ்ஸு வர்த்₃தி₄க்கையாகிறது) अत्यर्कानलदीप्तं तत्स्थानं**

---

(**தீயில் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி**) என்று, தங்களை ஸ்ரீவைஷ்ணவர் திரளிலே புகும்படி செய்த உபகாரத்தை நினைத்து திருவாழி ஆழ்வானைக் கொண்டாடுகிறார்கள். (தீயில் பொலிகின்ற) தீ என்கிற சொல், சந்திரன் சூரியன் போன்ற ஒளியுள்ள பொருள்கள் அனைத்தையும் குறிக்கிறது. "**அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்த்தா₂நம் விஷ்ணோர் மஹாத்மந:**" (மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த இடம் ஸூர்யனுடையவும், அக்னியினுடைய

(அத்யர்க்காநலதீ$_3$ப்தம் தத் ஸ்த்த$_2$ாநம்) என்கிற பரமபத$_3$த்தில் தேஜஸ்ஸூ மிக்கிருக்கக்கடவது ஆதி$_3$த்யாதி$_3$ தேஜஸ்ஸூக்களிற் காட்டில்; அதிற்காட்டில் அவனுடைய தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹதேஜஸ்ஸூ மிக்கு இருக்கக்கடவது; அதுக்கும் ப்ரகாஶகமாயிறே திருவாழி ஆழ்வானுடைய தேஜஸ்ஸிருப்பது. 'வடிவார் சோதி வலத்து உறையும் சுடராழி' என்னக்கடவதிறே. तस्य भासा सर्वमिदं विभाति (தஸ்ய ப$_4$ாஸா ஸர்வமித$_3$ம் விப$_4$ாதி) என்கிறபடியே

---

வும் ஒளியைக் காட்டிலும் விஞ்சிய ஒளியை உடையது) என்று கூறப்பட்டுள்ளபடி, பரமபதத்தின் ஒளி, சூரியன் முதலியவர்களின் ஒளியை விட மிக அதிகமானது. அப்பரமபதத்தின் ஒளியைக் காட்டிலும் எம்பெருமானுடைய திருமேனியின் ஒளி மிக மிக அதிகமானது. அத்திருமேனிக்கும் ஒளியூட்டும் படியாகவன்றோ திருவாழி ஆழ்வானின் பேரொளி இருப்பது! 'வடிவார் சோதி வலத்து உறையும் சுடராழி' என்று இவ்வாழ்வாரே அருளிச்செய்து உள்ளாரன்றோ! **"ந தத்ர ஸூர்யோ ப$_4$ாதி ந சந்த்$_3$ர தாரகம் நேமா வித்$_3$யுதோ ப$_4$ாந்தி குதோயமக்$_3$நி: தமேவ ப$_4$ாந்தமநுப$_4$ாதி ஸர்வம் தஸ்ய ப$_4$ாஸா ஸர்வமித$_3$ம் விப$_4$ாதி"** (அந்தப் பரமபுருஷனிடத்தில் ஸூர்யனும் பிரகாசிக்கிற தில்லை; சந்திரனும் நக்ஷத்ரங்களும் பிரகாசிக்கிற தில்லை; மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை; அக்னி பிரகாசிக்கிறதில்லை என்பது பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பிரகாசிக்கின்ற அவனைப் பின்பற்றியே எல்லாம் பிரகாசிக்கின்றன; அவனுடைய ஒளியினா லேயே இவையெல்லாம் பிரகாசிக்கின்றன) (கடோப. 2-5)

அவனுடைய தேஜஸ்ஸாலே ஸர்வமும் விளங்காநின்றது என்னாநிற்க, தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்துக்கு இவன் ப்ரகாஶகனாம்படி என்? என்னில் (செஞ்சுடர்) காளமேக நிப₄ஶ்யாமமான வடிவுக்கு இருட்டறையில் விளக்கேற்றினாப் போலே பரப₄ாக ரூபத்தாலே வந்த ப்ரகாஶகத்வத்தைச் சொல்லுகிறது. (ஆழி திகழ் திருச்சக்கரம்) இட்டளத்தில் பெருவெள்ளம் போலே புறம்பு போக்கற்று, தன்னிலே மண்டலாகாரமாய்க் கொண்டு விளங்கா நின்றுள்ள திருவாழியாழ்வானென்கை. (சக்கரத்தின் கோயில்) ஆழ்வானெழுந்தருளியிருக்கிற மண்ட₃லாகாரமான வாஸஸ்த₂ாநம். (பொறியாலே

---

என்றபடி, அவனுடைய ஒளியினால்தான் எல்லா ஒளிப் பொருள்களும் ஒளியுடன் விளங்குகின்றன என்று கூறப்பட்டிருக்கும்போது, அவ்வெம்பெருமானுடைய திருமேனிக்கும் திருவாழியாழ்வானே ஒளியூட்டுகிறான் என்பது எவ்வாறு பொருந்தும் எனில், **(செஞ்சுடர்)** மேகம் போல் கரிய நிறமுடைய எம்பெருமானுடைய வடிவுக்கு, பகைத்தொடை யாகப் பொன் நிறத்தை உடைய திருவாழியாழ்வான், இருட்டறையில் விளக்கை ஏற்றினாற்போல ஒளியூட்டுவதைக் கூறுகிறது. **(ஆழி திகழ் திருச்சக்கரம்)** ஆழி - வட்டம். இட்டளத்தில் (குறுகிய இடத்தில்) வெள்ளம்போல் வேறிடத்தில் போவதற்கு வழி இல்லாமல் தனக்குள்ளே வட்டமாகச் சுழன்று விளங்குகின்ற திருவாழியாழ்வான் என்கிறது. **(சக்கரத்தின் கோயில்)** திருவாழியாழ்வான் எழுந்தருளி யிருக்கின்ற வட்டமான இடம். **(பொறியாலே**

ஒற்றுண்டு நின்று) அதாகிறது, சிஹ்நத்தாலே சிஹ்நிதராய் நின்று. திருவிலச்சினையைத் த₄ரித்த பின்பிறே, இவன் ஜந்மாந்தரத்திற் போகாதே மோக்ஷாந்தரதிற் போகாதே ஸுஸ்த்தி₂ரனாகப் பெற்றது. பகவத₃ங்கீ₃காரமும் இது உண்டானாலிறே அதிஶயிப்பது. ஶ்ரீமத் த்₃வாரகையில் நின்றும் ஆஶ்ரிதவிரோதி₄நிரஸநார்த்த₂மாக எழுந்தருளுகிற போது திருவாசல் காக்கின்ற முதலிகள், "மீண்டு எழுந்தருளுமளவும் இங்குப் புகுரக்கடவார் ஆர்? அல்லாதார் ஆர்?" என்று விண்ணப்பம் செய்ய; चक्राङ्किता: प्रवेष्टव्या: यावदागमनं मम। नामुद्रिता: प्रवेष्टव्या: यावदागमनं मम ॥ (சக்ராங்கிதா: ப்ரவேஷ்டவ்யா:

---

**ஒற்றுண்டு**) அதாவது, திருவாழியாழ்வானாகிய சின்னத்தைத் தங்கள் (தோளின்) மீது பொறித்துக் கொண்டு. இச்சின்னத்தைப் பொறித்துக் கொண்டால் தான் இவன் வேறு பிறவிகள் பிறக்காமலும், வேறு மோக்ஷத்தை (கைவல்யத்தை) அடையாமலும் நிலை நிற்கப் பெறுவான். எம்பெருமானுடைய அங்கீகாரமும் இச்சின்னத்தை உடையவர்களுக்கே கிடைக்கும். கண்ணபிரான் அடியவர்களுடைய விரோதிகளை அழிப்பதற்காக துவாரகையிலிருந்து வெளியே எழுந்தருளியபோது, வாயில்காப்போர் அவனை நோக்கி "தேவரீர் திரும்பிவரும்வரையில், இங்கு யாரை உள்ளே விடவேண்டும், யாரை உள்ளே விடக்கூடாது என்று அருளிச்செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொள்ள, அதற்குக் கண்ணன், '**சக்ராங்கிதா: ப்ரவேஷ்டவ்யா: யாவத₃ாக₃மநம் மம, நாமுத்₃ரிதா: ப்ரவேஷ்டவ்யா: யாவத₃ாக₃மநம்**

யாவதா₃க₃மநம் மம நாமுத்₃ரிதா: ப்ரவேஷ்டவ்யா: யாவதா₃க₃மநம் மம) என்று, 'இங்க லக்ஷணமுடையார் யாவர் சிலர், அவர்கள் நிஸ்ஸங்கமாகப் புகுரக்கடவர்கள்; அல்லாதாரை பா₄வபரீக்ஷை பண்ணிப் புகுரவிடக்கடவது' என்றானிறே க்ருஷ்ணன். இதுதான் ஈஸ்வர அங்கீ₃காரத்துக்குமுடலாய், இதுதானும் 'நாம் அவன் உடைமை' என்று நிர்ப்ப₄ரனாய் இருக்கைக்குமுடலாய், இவன் பண்ணின பாபத்தை அநுஸந்தி₃த்து க்ரூரமாகப் பார்க்கக்கடவ யமாதி₃களும் அஞ்சும்படியாய் இருப்பது ஒன்றிறே. चक्रादि धारणं पुंसां परसंबन्ध वेदनम्। पतिव्रता निमित्तं

---

மம (சக்கரச் சின்னத்தைப் பொறித்துக் கொண்டவர்களே நான் வரும் வரையில் உள்ளே புகத் தகுந்தவர்கள். சக்கரச் சின்னம் இல்லதவர்கள் நான்வரும் வரையில் உள்ளே புகத் தக்கவரல்லர்) (ஹரி.பவிஷ்.27-24) என்று 'இந்த அடையாளம் உள்ளவர்கள் யார் சிலரோ அவர்களே ஐயமில்லாமல் உட்புகுரக் கடவர்கள். மற்றவர்களின் நெஞ்சைச் சோதித்து உள்ளே புகவிட வேண்டும்' என்றானன்றோ! இந்த அடையாளம்தான் எம்பெருமான் நம்மை ஏற்றுக் கொள்வதற்கும் உறுப்பாய், 'நாம் அவனுடைய உடைமை' என்று பொறுப்பு ஏதும் அற்றவனாய் இருப்பதற்கும் உறுப்பாய், இவன் செய்துள்ள பாபங்களை நினைத்து மிகவும் கொடிதாகப் பார்க்கும் யமன் முதலியவர்களும் நெருங்குவதற்கு அஞ்சும்படியாக இருபதொன்று அன்றோ! **"சக்ராதி₃ தா₄ரணம் பும்ஸாம் பரஸம்ப₃ந்த₄ வேத₃நம், பதிவ்ரதா நிமித்தம் ஹி வலயாதி₃ விபூ₄ஷணம்"** (சக்கரம்

हि वलयादि विभूषणम्। (சக்ராதி த₄ாரணம் பும்ஸாம் பரஸம்ப₃ந்த₄ வேத₃நம் பதிவ்ரதா நிமித்தம் ஹி வலாயாதி₄ விபூ₄ஷணம்) என்று பகவத் ஸம்ப₃ந்த₄த்துக்கு ஜ்ஞாபகமாயிறே இருப்பது. (குடிகுடி ஆட் செய்கின்றோம்) सपुत्रपौत्रस्सगण: (ஸபுத்ர பௌத்ரஸ் ஸக₃ண:) என்கிறபடியே ஸந்தாநமாக அடிமை செய்யக்கடவோமாய் வந்தோம். இப்படி அநந்யார்ஹராய் இருப்பார் செய்யுமடிமையாவது, திருப்பல்லாண்டு பாடுகையிறே. எந்த அபத₃ாநத்துக்கு நீங்கள்

---

முதலியவைகளை தரிப்பது பரமாத்மாவுடன் உள்ள தொடர்பைக் காட்டுவது. வளை முதலிய ஆபரணங்கள் பதிவ்ரதைக்கு அடையாளங்கள் அன்றோ!) (கூர்ம.) என்று கூறப் பட்டுள்ளபடி, பகவானுடன் நமக்குள்ள தொடர்பை நினைவூட்டும்படி யாக அன்றோ இச்சின்னமுள்ளது. (குடிகுடி ஆட்செய்கின்றோம்) "ஏதத₃ாக்யாநம் ஆயுஷ்யம் படந் ராமாயணம் நர:, ஸபுத்ரபௌத்ரஸ் ஸக₃ண: ப்ரேத்ய ஸ்வர்கே₃ மஹீயதே" (ஆயுளை வளர்க்கும் இந்த ராமாயணமாகிய இதிஹாஸத்தைப் படிக்கும் மனிதன், இறந்தவுடன் தன் பிள்ளை பேரர்களுடனும் உறவினர்களுடனும் கூடியவனாய், சுவர்கத்தில் சிறப்படைகிறான்) (ரா.பா.1-99) என்று கூறியுள்ளபடி, பரம்பரையாக அடிமை செய்வதாக வந்துள்ளோம். இப்படி வேறுபயன் கருதாதவர்கள் செய்யும் அடிமையாவது திருப்பல்லாண்டு பாடுகையே அன்றோ! எந்த சரித்திரத்திற்கு நீங்கள் மங்களாஶாஸனம் செய்யப் போகிறீர்கள் என்னில்,

மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறது? என்னில், (மாயப்பொருபடை இத்யாதி) எங்களைப் புகுர நிறுத்தின ஆழ்வானுடைய வீரப்ரகாஶகமான துறையிலே திருப்பல்லாண்டு பாடக்கடவோம் என்கிறார்கள். (மாயப்பொருபடை வாணனை) ஆஶ்சர்யமாகப் பொரும் ஸேனையையுடைய வாணனென்னுதல்; ஆஶ்சர்யமாகப் பொரும் ஆயுத$_4$த்தையுடைய வாணனென்னுதல். 'மாயம்' என்று க்ருத்ரிமமாய், க்ருத்ரிமமான யுத்$_3$த$_4$த்தை உடையவன் என்னவுமாம். (ஆயிரந்தோளும் பொழிகுருதி பாய) ஆயிரம் தோள்களாலும் மதகு திறந்தாப்போலே ரத்தவெள்ளம் குதிகொண்டு பூ$_4$மிப்பரப்படையப் பரம்பும்படி. (பொழிதல்-சொரிதல்) இதுக்கு இவன்

---

***(மாயப் பொருபடை வாணனை... சுழற்றிய ஆழிவல்லானுக்கு)*** எங்களை இந்த கோஷ்டியில் புகும்படி செய்த சக்கராயுத ஆழ்வானுடைய வீரத்தை வெளியிடும் (வாணாசுரனை அழித்த) துறையிலே நாங்கள் திருப்பல்லாண்டு பாடக் கடவோம் என்கின்றனர். ***(மாயப் பொரு படை வாணனை)*** மாயமாக (ஆச்சர்யமாக) பொருகின்ற படையை (சேனையை) உடைய வாணன் என்றோ, மாயமாகப் பொருகின்ற படையை (ஆயுதத்தை) உடைய வாணன் என்றோ பொருள் கொள்ளலாம். மாயம் என்பது தந்திரத்தைக் குறிப்பதாகக் கொண்டால், தந்திரமாகப் போர்புரியும் வாணன் என்றும் பொருள் கொள்ளலாம். ***(ஆயிரம் தோளும் பொழி குருதி பாய)*** மதகு திறந்தாற்போல வாணனுடைய ஆயிரம் தோள்களிலிருந்தும் ரத்தவெள்ளம் குதித்துக்கொண்டு பூமிப் பரப்பெங்கும் பரவும்படி செய்தான். இதற்கு

பண்ணின வ்யாபாரத்தளவேது? என்னில், (சுழற்றிய) திருவாழியை வீச வேண்டிற்றில்லை, சுழற்றினவித்தனை. அவன் ஒருகால் திருவாழியைச் சுழற்ற, வாணனுடைய தோள்களாயிரமும் ஒருகாலே மலைக் கொடுமுடிகள்போலே முறிந்து விழுந்தன. வாணனுடைய தலையை அறாதொழிந்தது குற்றம் போராமையன்று; உஷை பித்ருஹீநை ஆகாமைக்காகவும், 'தேவதாந்தர பஜநம் பண்ணுவார்க்கு ப₂லமிது' என்னுமிடத்துக்கு மச்சமாகவும். அதாவது, 'பரிவின்றி வாணனைக் காத்தும்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி, யுத்₃த₄த்திலே இவனைக் காட்டிக்

---

எம்பெருமான் செய்த செயலின் அளவு என்ன என்னில், (சுழற்றிய) திருவாழியை வீசி எறியவேண்டியதில்லை; சுழற்றினான் அவ்வளவே. ஒருமுறை திருவாழியைச் சுழற்ற, வாணனுடைய ஆயிரம் தோள்களும் ஒரே சமயத்தில் மலைச்சிகரங்கள் முறிந்து விழுவதைப் போல் விழுந்தன. வாணனுடைய தலையை அறுக்காமல் விட்டது, அவன் செய்த குற்றம் போராமையால் அன்று. தன் பேரன் அநிருத்தனுடைய மனைவியான உஷை தந்தையற்றவளாக ஆகிவிடக் கூடாது என்பதற்காகவும், தன்னைப் பற்றாமல் பிற தேவதைகளைப் பற்றுபவர்களுக்குக் கிடைக்கும் பயன் இதுவே என்று தெரிந்து கொள்வதற்கு அடையாள மாகவும் வாணனுடைய தலையை அறுக்காமல் தோள்களை மட்டும் அறுத்துவிட்டான். அதாவது, 'பரிவின்றி வாணனைக் காத்தும்' (திருவாய்மொழி 3-10-4) என்று உறுதிமொழி அளித்து, போரில் வாணனைக் காட்டிக்

கொடுத்து, ஸபரிகரனாய்க் கொண்டு முதுகு காட்டிப் போனான் ரக்ஷகன்; ரக்ஷ்யபூ₄தன் தோள் துணியுண்டான், "உன்னை ரக்ஷிக்கப் புக்கு நான் பட்டதோ!" என்றும், "உன்னை ஆஶ்ரயித்து நான் பட்டதோ!" என்றும் இருவரும் கூடக் கட்டிக் கொண்டு கதறுகையிறே ப₂லமாய்விட்டது. (ஆழி வல்லானுக்கு) 'வில்வல்லான்' 'வாள்வல்லான்' 'தோள் வல்லான்' என்னுமாபோலே. यस्य सा जनकात्मजा (யஸ்ய ஸா ஜநகாத்மஜா) என்கிறபடியே பிராட்டியை எனக்கென்ன இட்டுப்

---

கொடுத்துவிட்டுத் தன் பரிவாரங்களுடன் புறமுதுகு காட்டி ஓடிவிட்டான், அவனைக் காப்பவனாகக் கூறிக்கொண்ட சிவன். அவனால் காக்கப் படுபவனாகத் தன்னை நினைத்துக் கொண்ட வாணனோ தோள்கள் துணியுண்டான். "உன்னைக் காப்பாற்ற நினைத்து நான் பட்ட பாடுதான் என்னே!" என்று சிவனும், "உன்னை நம்பி அடைந்து நான் பட்ட பாடுதான் என்னே!" என்று வாணனும் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு கதறுகைதான் முடிவில் கிடைத்த பலன். (இப்படிக் கட்டிக் கொண்டு கதறுவதற்காகவே வாணனுக்கு இரண்டு கைககளை மட்டும் விட்டு வைத்தான் போலும்!) **(ஆழி வல்லானுக்கு)** வில்வல்லான், வாள்வல்லான், தோள்வல்லான் என்பதுபோல் ஆழிவல்லான் என்கிறார். "**அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா**" (யாதொரு ராமபிரானிடம் ஜனகன் பெண்ணான சீதை இருக்கிறாளோ அந்த ராமனாகிற ஒளி அளவிட முடியாததன்றோ!) (ரா.ஆ. 37-18) என்று

பிறத்தல், திருவடி தோளிலே நல்த₄ரிக்க விருத்தல், கை பேராமல் திருவாழியைப் பிடித்தல் செய்யுமதாய்த்து ஸர்வாதி₄கத்வத்துக்கு லக்ஷணம். (பல்லாண்டு கூறுதுமே) அத்த₄ஶையிலே அடிமைசெய்த ஆழ்வானுடைய வீரஶ்ரீக்கும், அடிமைகொண்ட க்ருஷ்ணனுடைய வீரஶ்ரீக்கும் மங்க₃ளாஶாஸநம் பண்ணுவாரைப் பெற்றதில்லை; அவ்விழவு தீர இன்றிருந்து திருப்பல்லாண்டு பாடுகிறோம் என்கிறார்கள்.

எட்டாம்பாட்டு. (நெய்யிடையித்யாதி₃) அண்டக் குலத்திலே அழைத்த ஐஶ்வர்யார்த்தி₂கள் இசைந்துவர,

---

கூறியுள்ளபடி பிராட்டியைத் தனக்காகவே கொண்டிருத்தல், பெரிய திருவடியாகிய கருடனுடைய தோளிலே பொருத்தமாக அமர்ந்திருத்தல், கைவிடாமல் திருவாழியைப் பிடித்தல் முதலியவைகளைச் செய்வதே பரம்பெருளுக்குரிய அடையாளங்களாகும். **(பல்லாண்டு கூறுதுமே)** வாணனுடைய தோள்களைத் துணித்து அப்போது அடிமை செய்த திருவாழி ஆழ்வானுடைய வீரத்திற்கும், அவனை அடிமை கொண்ட கண்ண பிரானுடைய வீரத்திற்கும் அப்போது எவரும் மங்களாஶாஸனம் செய்யவில்லை. அக்குறை தீர இப்போது நாங்கள் அந்த சரித்திரத்திற்குத் திருப்பல்லாண்டு பாடுகிறோம் என்கின்றனர்.

எட்டாம்பாட்டு. **(நெய்யிடை இத்யாதி)** 'அண்டக் குலத்தில்' என்ற ஐந்தாம் பாசுரத்தில் அழைக்கப்பட்ட ஐஶ்வர்யார்த்திகள் மங்களாஶாஸனம் செய்வதற்கு இசைந்து வர,

அவர்களைக் கூட்டிக்கொள்ளுகிறார். வாழாளில் அழைத்த அநந்யப்ரயோஜநர் தங்களேற்றத்தைச் சொல்லிக்கொண்டு புகுந்தார்கள் எந்தைதந்தை தந்தையிலே; ஏடுநிலத்தில் அழைத்த கைவல்யார்த்தி$_2$கள் தாங்கள் திருந்திப்புகுந்தமை சொன்னார்கள் தீயிற் பொலிகின்றவிலே; இவர்கள், தாங்கள் க்ஷுத்$_3$ர புருஷார்த்த$_2$த்தை அபேக்ஷிக்க, அநந்ய ப்ரயோஜநர்க்கு முகங்கொடுத்தாப் போலே முகம் தந்து, அந்த ஐஶ்வர்யத்தைத் தந்த ஔதா$_3$ர்யத்துக்குத் தோற்று, ஐஶ்வர்யத்தை விட்டு ஶுத்$_3$த$_4$ஸ்வபா$_4$வராய்

---

அவர்களைச் சேர்த்துக் கொள்கிறார் இப் பாசுரத்தில். 'வாழாட்பட்டு' என்ற மூன்றாம் பாசுரத்தில் அழைக்கப் பட்ட அநந்யப்ரயோஜனர்கள் 'வழிவழி ஆட் செய்கின்றோம்' என்று தங்கள் பெருமையைச் சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள் 'எந்தை தந்தை தந்தை' என்கின்ற ஆறாம் பாசுரத்தில். 'ஏடு நிலத்தில்' என்ற நான்காம் பாசுரத்தில் அழைக்கப் பட்ட கைவல்யார்த்திகள் 'சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று' என்று தாங்கள் முன்பிருந்த நிலையை விட்டுத் திருந்தி வந்தமையைக் கூறிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள் 'தீயிற் பொலிகின்ற' என்ற ஏழாம் பாசுரத்தில். இப்பாசுரத்தில் ஐஶ்வர்யார்த்திகள் (செல்வத்தை விரும்புபவர்கள்) தாங்கள் மிகவும் தாழ்ந்த பயனாகிய செல்வத்தை விரும்ப, எம்பெருமான் தன்னையே விரும்புபவர்களுக்கு முகம் கொடுப்பது போலத் தங்களுக்கும் முகம் கொடுத்த வள்ளன்மைக்குத் தோற்று, செல்வத்தில் ஆசையை

இவ்வுதா$_3$ரனை மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுவோமென்று புகுருகிறார்கள். அண்டக்குலத்திலே, அண்டா$_3$த்$_3$யக்ஷத்வம் ஐஶ்வர்யத்துக்கு மேலெல்லையாகப் பேசிற்று; அவ்வைஶ்வர்யார்த்தி$_2$கள் பேச்சான இந்தப்பாட்டிலே, ஶரீரத்துக்கு தா$_3$ரக போஷக போ$_4$க்யங்களை இரந்தார்களாய், அத்தை அவன் தந்தானாகப் பேசிற்று; இதுக்கு நிப$_3$ந்த$_4$நம் இன்று ஸ்வருபஜ்ஞாநம் பிறந்து புகுருகிறவர்களாகையாலே அதினுடைய க்ஷுத்$_3$ரதை தோற்றப் பேசுகிறார்கள். அண்டா$_3$த்$_3$யக்ஷனான ப்ரஹ்மாவுக்கும் தா$_3$ரக போஷக போ$_4$க்$_3$யங்களேயிறே ப்ரயோஜநம்; அதற்கு மேற்பட்டு ப$_4$கவத் விபூ$_4$தியை

---

விட்டு சுத்தமான தன்மையை உடையவர்களாய், வள்ளலான எம்பெருமானுக்கு மங்களாஶாஸனம் செய்வோம் என்று புகுகிறார்கள். 'அண்டக் குலத்துக்கு' என்ற பாசுரத்தில், அண்டங்களுக்கு அதிபதியாயிருத்தலே மிக உயர்ந்த செல்வம் என்று கூறப்பட்டது. அந்த ஐஶ்வர்யார்த்தி கூறும் பாசுரமாகையாலே, இதில் உடலுக்கு தாரகம் (தரித்திருப்பதற்குத் தேவையானவை), போஷகம் (வளர்வதற்குத் தேவையானவை), போக்யம் (இன்பத்திற்குத் தேவையானவை) முதலியவற்றை வேண்ட அவற்றை அவன் தந்தான் என்று கூறுகிறார்கள். இதற்குக் காரணம், இன்று உண்மை அறிவு பெற்றவர்களாகிவிட்ட படியால், அவைகளினுடைய தாழ்வு தோன்றும்படி கூறுகிறார்கள். அண்டங்களுக்கெல்லாம் அதிபதியாக இருக்கும் பிரம்மாவிற்கும் தாரக போஷக போக்யங்களே அன்றோ விரும்பப்படும் பயன்கள்!

**'எனக்கு' என்கிற அபி$_4$மானத்தால் வந்த ஸ்வருப ஹாநியேயிறே ப$_2$லம்.**

---

*அதற்கும்மேல், பகவானுடைய செல்வமான அண்டங்களை 'எனக்கு' என்று விரும்புவதால் வந்த ஸ்வரூபஹானி (ஜீவாத்மாவின் தன்மையான அடிமைத் தன்மையை இழத்தல்) அன்றோ பயனாகி விடுகிறது!*

**நெய்யிடைநல்லதோர்சோறும்**
**நியதமுமத்தாணிச்சேவகமும்***
**கையடைக்காயும்கழுத்துக்குப்பூணொடு**
**காதுக்குக்குண்டலமும்***
**மெய்யிடநல்லதோர்சாந்தமும்தந்து**
**என்னைவெள்ளுயிராக்கவல்ல***
**பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப்**
**பல்லாண்டுகூறுவனே. 8**

| | |
|---|---|
| நெய் இடை | - நெய்யின் நடுவிலிருக்கும், |
| நல்லது ஓர் சோறும் | - ஒப்பற்ற சோற்றையும், |
| நியதமும் | - எப்போதும், |
| அத்தணிச் சேவகமும் | - பிரிவில்லாத தொண்டையும், |
| கை | - (எம்பெருமான் தன்னுடைய) திருக்கையாலே இட்ட, |
| அடைக் காயும் | - வெற்றிலைப் பாக்கையும், |
| கழுத்துக்குப் பூணொடு | - கழுத்துக்கு ஆரத்தையும் |
| காதுக்குக் குண்டலமும் | - காதுக்கு அணிகலனான குண்டலத்தையும், |
| மெய்யிட | - உடம்பிலே பூசத்தக்க, |
| நல்லது ஓர் சாந்தமும் | - வாசனை நிறைந்த ஒப்பற்ற சந்தனத்தையும், |

| | |
|---|---|
| தந்து | - கொடுத்து, |
| என்னை | - (மிகவும் தாழ்ந்தவனான) என்னை, |
| வெள் உயிர் ஆக்கவல்ல | - சுத்₃த₄ ஸ்வப₄ாவனாக ஆக்கவல்ல, |
| பை உடை | - படங்களை உடைய, |
| நாகம் | - பாம்புக்கு, |
| பகை | - விரோதி₄யான கருடனை, |
| கொடியானுக்கு | - கொடியாக உடையவனுக்கு, |
| பல்லாண்டு கூறுவன் | - மங்க₃ளாசாஸனம் செய்வேன். |

**(நெய்யிடை) 'இடை' என்று நிறையாய், நெய்யோடு ஒத்த சோறு என்னுதல். 'இடை' என்று நடுவாய், நெய்யின் இடையிலே சில சோறும் உண்டு என்னுதல்; இத்தால், போஷக ப்ரசுரமான த₃ாரகத்₃ரவ்யத்தைத் தருமென்கை. (நல்லதோர் சோறும்) சோற்றுக்கு நன்மையாவது, இட்டவன் 'இட்டோம்' என்றிருத்தல், உண்டவன் 'இதுக்கென் செய்வோம்?' என்றிருத்தல்**

---

***(நெய்யிடை)*** 'இடை' என்று நிறை (எடை) யைக் குறிப்பதாகக் கொண்டு, நெய்க்குச் சமமான சோறு என்று பொருள் கொள்ளலாம். 'இடை' என்பது நடுவைக் குறிப்பதாகக் கொண்டால், நெய்யின் நடுவே சிறிது சோறும் உண்டு என்று பொருள் கொள்ளலாம். இதனால் போஷகம் (நெய்) மிக அதிகமாக உள்ள தாரகப் பொருளை (சோற்றை) எம்பெருமான் தருவான் என்பது கூறப் படுகிறது. ***(நல்லதோர் சோறு)*** சோற்றுக்கு நன்மையாவது, சோற்றை இட்டவன் 'நாம் சோறிட்டோம்' என்றிராமலும், அவனிடம் சோறு வாங்கி உண்டவன் 'இப்படிச் சோறிட்டவனுக்கு நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்' என்றிராமலும்

செய்யாத சோறு. அதாவது, தாய் இட, புத்ரனுண்ணும் சோற்றுக்கு இவ்விரண்டும் இல்லையிறே. (ஓர்சோறு) இப்ப$_4$ாவசுத்$_3$தி$_4$யேயன்றிக்கே, விலக்ஷண ரஸோபேதமா யிருக்கை. அங்ஙன் அன்றிக்கே, ஶேஷபூ$_4$தன் ஶேஷிக்கு இடும் சோறுபோலே யிருக்கை. அதாகிறது, அஹங்காரோபேதமன்றிக்கே ப$_4$க்த்யுபஹ்ருதமா யிருக்கை. ஈஶ்வரனும், भक्तानां (ப$_4$க்தாநாம்) என்கிற நினைவாலேயும்

---

இருக்கக் கூடிய சோறு. அதாவது தாய் மகனுக்கு இடும் சோற்றுக்கு இவ்விரண்டும் இல்லையன்றோ! (ஓர் சோறு) நெஞ்சில் உள்ள இந்த சுத்தி மட்டுமல்லாமல், மிகவும் சுவையானதாகவும் இருக்கும் சோறு. அல்லது, அடியவன் எம்பெருமானுக்கு இடும் சோறு போலிருத்தல். அதாவது 'நாமிட்டோம்' என்கிற அகங்காரத்துடன் கூடியதாக அல்லாமல் பக்தியுடன் கூடியதாக இடப் படும் சோறு. (இப் பாசுரத்தில் எம்பெருமான் அளிக்கும் சோறு கூறப்படுவதால், தாயிடும் சோறு போலவும், அடியவன் இடும் சோறு போலவும் அவன் இடுவானோ என்னில், எம்பெருமான் தான் கொண்டிருப்பது அனைத்தும் பக்தர்களுக்காகவே அன்றோ!) **"ந தே ரூபம் நசாகாரோ நாயுத$_4$ாநி நசாஸ்பத$_3$ம், தத$_2$ாபி புருஷாகாரோ ப$_4$க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே"** (ஜிதந்தே ஸ்தோத்ரம்-4) (உன்னுடைய ஸ்வரூபமும் உனக்காக அன்று. திருமேனியும் உனக்காகவன்று. திவ்யாயுதங்களும் உனக்காகவன்று. இருப்பிடமும் உனக்காக அன்று. உன் அடியார்களுக்காகவே இவற்றுடன் நீ பிரகாசிக்கிறாய்) என்று கூறப்பட்டுள்ளபடி,

வத்ஸலனாயுமிறே இடுவது. அநந்ய ப்ரயோஜநன் ஸ்வாமி விஷயத்திலிடும் சோறு எங்ஙனே இருக்கும்? என்னில்; विदुरान्नानि बुभुजे शुचीनि गुणवन्ति च (விது$_3$ராந்நாநி பு$_3$பு$_4$ஜே ஶுசீநி கு$_3$ணவந்தி ச) என்னும்படி பாவநமுமாய் போ$_4$க்யமுமா யிருக்கை. शुचीनि (ஶுசீநி) என்றது, ஶுத்$_3$த$_4$ங்களாயிருக்கை. சோற்றுக்கு ஶுத்$_3$தி$_4$ யாவது, து$_3$ர்யோத$_4$நன், தன் ஐஶ்வர்யத்தைப் பற்ற அபி$_4$மாநித்தான். பீ$_4$ஷ்மன், ஜ்ஞாநாதி$_4$கனென்று அபி$_4$மாநித்தான்; த்$_3$ரோணன், வர்ணத்தாலதி$_4$கனென்று அபி$_4$மாநித்தான்; இவையொன்றும் இன்றிக்கே

---

பக்தர்களுக்காக என்ற நினைவால் அவன் அன்புடன் இடுவான். வேறு பயன் கருதாதவன் எம்பெருமானுக்கு இடும் சோறு எப்படி இருக்கும் என்றால் விதுரன் கண்ணனுக்கு இட்டது போல் இருக்கும். "**விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச**" (பரிசுத்தமானவையும் இனியவையு மான விதுரனுடைய அன்னங்களை கண்ணன் உண்டான்) (பார. உத்.74) என்றபடி பரிசுத்தமாகவும் இனிமை யாகவும் இருக்கும். 'சுசீநி' என்றது பரிசுத்தமாக இருக்கும் என்றபடி. சோற்றுக்குப் பரிசுத்தியாவது பக்தியோடு கூடியதாக இருக்கை. துர்யோதனன் தன் செல்வத்தால் அகங்காரம் கொண்டிருந்தான். பீஷ்மன், தான் மிகுந்த ஞானமுடையவன் என்று அகங்காரம் கொண்டிருந்தான். த்ரோணன், தான் உயர்ந்த குலத்தில் பிறந்தவன் என்று அகங்காரம் கொண்டிருந்தான். இந்த அகங்காரங்கள் ஒன்றும் இல்லாமல், பக்தியோடு விதுரன் இட்ட சோறே பரிசுத்தமானதாகும். அப்படிப் பட்ட சோறே இங்கு

ப₄க்த்யுபஹ்ருதமாயிருக்கை. (நியதமும்) அதாகிறது, ஐஸ்வர்யம் ஈஸ்வரனே கொடுக்கிலும் அஸ்த்தி₂ரமாயிருக்கக்கடவது; அது அழிந்தவன்றும் அவ்வைஸ்வர்யத்தை ஸமாத₄ாநம் பண்ணிக் கொடுக்குமவன் ஆகையாலே 'நியதமும்' என்கிறது. இத்தாலேயிறே 'அர்த்த₂ார்த்தி' என்றும், 'ஆர்த்தன்' என்றும் ஐஸ்வர்யத்துக்கு இரண்டு வகை சொல்லிற்று. அங்ஙன் அன்றிக்கே, தே₃வதாந்தரங்களைப் பற்றி ஈஸ்வரனை இல்லை செய்யுமன்றும் தந்முகே₂ந சோறிடுமவன் என்கை. ஸர்வேஸ்வரனிட்ட சோற்றைத் தின்று அவனை இல்லை செய்யும் க்ருதக்₄நரிறே

---

'ஓர் சோறு' என்று கூறப்படுகிறது. (நியதமும்) எப்பொழுதும் என்று பொருள். செல்வத்தை எம்பெருமானே கொடுத்தாலும், அது நிலையில்லாதது. அச் செல்வம் அழிந்தபோதும் மீண்டும் இழந்த செல்வத்தை எம்பெருமான் மீட்டுக் கொடுப்பான் ஆகையால் 'நியதமும்' என்கிறது. அதனால்தான் செல்வத்தை விரும்புபவர்களை 'அர்த்தார்த்தி' (புதிதாகச் செல்வத்தைப் பெற விரும்புபவன்) என்றும் 'ஆர்த்தன்' (இழந்த செல்வத்தை மீண்டும் பெற விரும்புவன்) என்றும் இரண்டு வகையாகக் கூறுகிறது. அங்ஙன் அல்லாமல், நியதமும் என்பதற்கு மற்றொரு பொருளும் கொள்ளலாம். பிற தேவதைகளையே பற்றி, தன்னை இல்லை என்றே கூறுபவர்களுக்கும், அந்த தேவதைகள் மூலமாகவே சோறிடுபவன் எம்பெருமான் என்கிற பொருளும் கொள்ளலாம். எம்பெருமான் இட்ட சோற்றைத் தின்று அவனையே

ஸம்ஸாரிகள்; தன்னை இல்லை செய்யுமன்றும் ரக்ஷிக்கும் உதா₃ரனிறே ஸர்வேஸ்வரன். (அத்தாணிச் சேவகமும்) 'அத்தாணி' என்று பிரியாமை; 'சேவகம்' என்று ஸேவை. ஐஸ்வர்யார்த்தி₂க்கும் அநவரத ப₄ாவனையும், அந்திமஸ்ம்ருதியும் அநந்யப்ரயோஜந னோபாதி கர்த்தவ்யமிறே. ஆனால் ஐஸ்வர்ய ஸாத₃நத்தையும், 'தந்து' என்று ப்ரயோஜநத்தோடொக்கச் சொல்லுவானென்? என்னில்; வெள்ளுயிரான பின்பு சொல்லுகிறார்களாகையாலே அந்த ஸாத₃நமும் ஸ்வயம் ப்ரயோஜநமாயிறே இருப்பது. அநந்யப்ரயோஜநருக்கு

---

இல்லை என்று கூறுமளவுக்கு நன்றியற்றவர்கள் ஸம்ஸாரிகள். தன்னை இல்லை என்று கூறும்போதும், அவர்களையும் காக்கும் வள்ளல் எம்பெருமான். (**அத்தாணிச் சேவகமும்**) 'அத்தாணி' என்று பிரியாமல் இருத்தல் கூறப்படுகிறது. 'சேவகம்' என்று தொண்டு செய்தல் கூறப்படுகிறது. செல்வத்தை விரும்புபவனுக்கும் எம்பெருமானைப் பற்றிய இடைவிடாத சிந்தனையும், இறுதிக்காலத்தில் அவனைப் பற்றிய நினைவும் வேறு பயன் கருதாத உபாஸகர்களைப் போலவே செய்ய வேண்டியது ஒன்றாகும். ஆனால் செல்வத்தைப் பெறுவதற்கு ஸாதனமாக இவன் செய்கின்ற அத்தாணிச் சேவகத்தையும் 'தந்து' என்று பயனைப் போலக் கூறுவதற்குக் காரணம் என்ன எனில், வெள்ளுயிராகத் திருந்திய பிறகு கூறுகிறார்களாகையால், முதலில் செல்வத்தைப் பெறுவதற்கு ஸாதனமாகச் செய்த சேவகமும் இப்பொழுது மிகவும் விரும்பத் தக்கதாகிவிட்டது.

ஸ்வயம் ப்ரயோஜநமான ஸேவை ஸாத$_3$நமாகக் கிடீர் க்ஷுத்$_3$ரமான ஐஶ்வர்யத்தைத் தந்ததென்கை.

(கையடைக்காயும்) த$_3$ாரக போஷகங்கள் கீழே சொல்லிற்றாய், மேல், பே$_4$ாக்ய பதார்த்தங்களைத் தந்தபடி சொல்லுகிறது. திருக்கையாலே இட்ட வெற்றிலைப்பாக்கு என்று இவர்கள் பக்கல் கௌ$_3$ரவத்தாலே இட்ட சீர்மையைச் சொல்லுகிறது. ஶேஷபூ$_4$தன் ஶேஷியைக் குறித்து இடும் ப்ரகாரத்தாலேயிறே ஶேஷியானவன் ஶேஷபூ$_4$தனுக்கு இடுவது. (கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்) தே$_3$ஹத்தை உத்$_3$தே$_3$ஶ்யம் என்றிருக்குமவனாகையாலே தன்னுடம்பை அலங்கரித்து, அத்தை அநுப$_4$வித்திருக்குமவனிறே ஐஶ்வர்யார்த்தி$_2$;

---

வேறு பயன் கருதாதவர் விரும்பிச் செய்யும் தொண்டை ஸாதனமாக்கி தாழ்ந்த பயனாகிய செல்வத்தை எம்பெருமான் தந்தது கூறப்படுகிறது.

**(கையடைக்காயும்)** தாரகம், போஷகம் ஆகியவற்றைக் கீழே கூறியாகிவிட்டது. மேலே, போக்யப் பொருளைத் தந்தபடி கூறுகிறது. இவர்களிடத்தில் எம்பெருமானுக்குள்ள கௌரவத்தின் காரணமாக எம்பெருமான் தானே தன்னுடைய திருக்கையால் கொடுத்த வெற்றிலைப் பாக்கின் பெருமை சொல்லப் படுகிறது. அடியவன் எம்பெருமானுக்கு எப்படிக் கொடுக்கிறானோ அப்படியே அன்றோ எம்பெருமானும் அடியவனுக்குக் (அன்புடன்) கொடுப்பது! **(கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்)** உடலையே விரும்பி யிருப்பவன் ஆகையால் தன் உடம்பை அலங்காரம் செய்து அதை அநுபவிப்பவன்

ப$_4$க$_3$வத்பரனாய் ஈஸ்வரனை அலங்கரித்து, ஸத$_3$ாத$_3$ர்ஶனம் பண்ணியிருக்கிறான் அல்லனே? ஸ்வருபத்தை உணர்ந்து ஜ்ஞாநவைராக்$_3$ய ப$_4$க்திகளை ஸ்வரூபத்துக்கு ஆப$_4$ரணமாக நினைத்திருக் கிறான் அல்லனே? 'கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்' என்று விஶேஷிப்பானென்? என்னில்; தன் கண்ணுக்கு அவிஷயமாய், நாட்டார் கொண்டாடுமதுவே தனக்கு ப்ரயோஜநமா யிருக்கையாலே. அவயவாந்தரங்களில் அங்கு$_3$ளீயகாத்$_3$யாப$_4$ரணங்கள் தன் கண்ணுக்கு விஷயமாய் இருக்குமிறே. பெருமாள்

---

ஐஶ்வர்யார்த்தி. எம்பெருமானுக்கு அடியவனாய், அவனை அலங்காரம் செய்து எப்போதும் சேவித்துக் கொண்டிருப்பவன் அல்லன் இவன். தன் தன்மையை உள்ளபடி உணர்ந்து ஜ்ஞானம் பக்தி, வைராக்யம் இவற்றை தன் ஸ்வரூபத்திற்கு ஆபரணமாக நினைத்திருப்பவன் அல்லன். எனவே தன் உடலுக்கு அலங்காரமான ஆபரணங்களையே கூறுகிறான். **(கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்)** 'பூண்' என்றும் 'குண்டலம்' என்றும் கூறினால் போதுமாயிருக்க, 'கழுத்துக்குப் பூண்' என்றும், 'காதுக்குக் குண்டலம்' என்றும் சிறப்பித்துக் கூறியதற்குக் காரணம் என்ன எனில், கழுத்திலும் காதிலும் அணிந்து கொள்ளும் ஆபரணங்கள் தன் கண்ணுக்குத் தெரியா விட்டாலும் மற்றவர் தன்னைப் பார்த்துக் கொண்டாடுவதையே தனக்குப் பயனாக நினைத்திருப்பவனாதலால் அப்படிக் கூறுகிறான். மற்ற அவயவங்களில் அணிந்து கொள்ளக் கூடிய மோதிரம் முதலிய ஆபரணங்கள் தன் கண்ணுக்குத்

மீண்டு எழுந்தருளின அளவிலே இந்த்₃ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பிராட்டியும் தாமுமிருந்து திருவடிக்குப் பூட்டினாப்போலே, ஈஶ்வரன் பரிந்து 'இது கழுத்துக்காம், இது காதுக்காம்' என்று திருக்கையாலே பூட்டின ஆபரணமும். प्रदेहि सुभगे हारं यस्य तुष्टासि भामिनी (ப்ரதே₃ஹி ஸுப₄கே₃ ஹாரம் யஸ்ய துஷ்டாஸி ப₄ாமிநீ) என்கிறபடியே இந்த்₃ரன் கொடுத்து வரக்காட்டின ஹாரத்தைப் பெருமாள் வாங்கிப் பார்த்தருளி, பிராட்டிக்குக்

---

தெரியக் கூடியவையாயிருந்தும் அவற்றைக் கூறவில்லை. (எனவே பிறர் தன்னை கொண்டாடுவதையே தனக்குப் பயனாக நினைத்திருக் கிறான்.) இராமபிரான் வனவாசத்தில் இருந்து மீண்டு, அயோத்திக்கு எழுந்தருளிப் பட்டாபிஷேகம் கண்டருளியபோது ஸீதா பிராட்டியும் இராமனும் சேர்ந்து சிறிய திருவடியான அனுமனுக்குப் பூட்டிய ஆபரணம் போல், 'இது கழுதுக்கு', 'இது காதுக்கு' என்று பரிவுடன் திருக்கையால் பூட்டின ஆபரணத்தைக் கூறுகிறது. "**தாமிங்கி₃தஜ்ஞ: ஸம்ப்ரேக்ஷ்ய ப₃ப₄ாஷே ஜநகாத்மஜாம், ப்ரதே₃ஹி ஸுப₄கே ஹாரம் யஸ்ய துஷ்டாஸி ப₄ாமிநீ**" (ரா.யு. 131-80) (இங்கிதத்தை அறிபவனான இராமபிரான் ஜனகன் பெண்ணான ஸீதையைப் பார்த்து, "ஸௌபாக்யவதியே! எவனுக்கு இந்த ஹாரத்தைக் கொடுப்பதற்கு உனக்கு விருப்பமோ அவனுக்குக் கொடுப்பாயாக!" என்று கூறினார்) என்று ஸ்ரீராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது, இந்திரன் கொடுத்தனுப்பிய ஹாரத்தை

கொடுக்கிற போது, அத்தை வாங்குகிறவள், பெருமாளை ஒரு திருக்கண்ணாலும் திருவடியை ஒரு திருக்கண்ணாலும் பார்த்து வாங்கினாள். ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலா: (ப்ரேக்ஷிதஜ்ஞாஸ் து கோஸலா:) என்று, பார்வையில் கருத்து அறியுமவர் ஆகையாலே, "அவனுக்குக் கொடுக்கலாகாதோ?" என்றருளினார். 'ஸுப$_4$கே$_3$' "அடியாரேற்றம் அறிந்து கொண்டாடுகைக்கீடான ஸௌப$_4$ாக்$_3$யமுள்ளது உனக்கே அன்றோ?" என்ன; "உம்முடைய திருவுள்ளத்தாலே அன்றோ நான் கொடுக்கிறது" என்று பிராட்டி விண்ணப்பஞ் செய்ய; "நான் முற்பாடனாகப் பெறாமையாலே, உன்னுடைய உகப்பின் கார்யத்தைக்

---

இராமபிரான் வாங்கிக் கொண்டு பிராட்டியிடம் கொடுத்தார். அதை அவரிடமிருந்து பெறுகின்ற போது சீதைப்பிராட்டி இராமனை ஒருகண்ணாலும், அனுமனை ஒரு கண்ணாலும் பார்த்துக்கொண்டே பெற்றாள். 'ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலா:' (கோஸல தேசத்தவர்கள் பார்வையி லிருந்தே கருத்தறிபவர்கள்) என்று கூறப்பட்டுள்ளபடி பிராட்டியின் திருவுள்ளத்தை அவளுடைய பார்வையி லிருந்தே உணர்ந்து கொண்ட இராமபிரான் "இந்த ஹாரத்தை அனுமனுக்குக் கொடுக்கலாமே!" என்றார். **"ஸுபகே"** -"அடியவர்களுடைய பெருமையை அறிந்து கொண்டாடும் ஸௌபாக்யம் உள்ளது உனக்கே அன்றோ!" என்றார். "உம்முடைய திருவுள்ளத்தால் அன்றோ நான் கொடுக்கிறது" என்றாள் பிராட்டி. "அனுமனுக்குக் கொடுக்க வேண்டும் என்று முதலில் தோன்றியது உனக்கே அன்றோ! எனவே உன்னுடைய மகிழ்ச்சியின்

கொடுக்கலாகாதோ!" என்றார். இப்படி அநந்யப்ரயோஜநனுக்கு ஆத₃ரித்துப் பூட்டினாப்போலே ஆய்த்து க்ஷுத்₃ரனான என்னை ஆத₃ரித்துப் பூட்டிற்றும்.

(மெய்யிட) திருவடிகளில் ருசிபிறந்த பின்பு ஆகையாலே 'உடம்பு த்யாஜ்யம்' என்கிற நினைவு தோன்ற குத்ஸித்துச் சொல்லுகிறபடி. (நல்லதோர் சாந்தமும்) சாந்துதான் இதுக்குத் தரமாகப் பெற்றதோ? सर्वगन्धः (ஸர்வக₃ந்த₄:) என்கிற வடிவுக்கு ஸத்₃ருஶமாக,

---

காரியத்தை நீயே செய்யலாமன்றோ!" என்றார் இராமபிரான். இப்படி வேறுபயன் கருதாத அனுமனுக்குப் பெருமானும் பிராட்டியும் மகிழ்ச்சியுடன் ஆபரணத்தைப் பூட்டினாற்போல் அன்றோ, தாழ்ந்தவனான எனக்கும் ஆபரணங்களைப் பூட்டியது!

**(மெய்யிட)** தன் உடலிலே இடும்படியாகச் சந்தனம் கொடுத்தபடியைக் கூறுகிறது. எம்பெருமான் திருவடிகளில் கைங்கர்யம் செய்யவேண்டும் என்ற ஈடுபாடு ஏற்பட்டபிறகு கூறுகிற சொல் ஆகையால், 'விடத்தக்க இந்த உடலுக்கன்றோ சந்தனம் அளித்தான்' என்று மிகவும் அருவருப்புடன் கூறிக் கொள்கிறான். **(நல்லதோர் சாந்தமும் தந்து)** நல்லதும் ஒப்பற்றதுமான சந்தனத்தைத் தந்து. சந்தனம்தான் இந்த உடலுக்குத் தகுதியானதோ? "**ஸர்வக₃ந்த₄:**" (எல்லா மணங்களையும் உடையவன்) (சாந்தோக்யம் 3-14-2) என்று கூறப்பட்டுள்ளவனுடைய வடிவிற்குத் தகுதியாக, கூனி மிகவும் அன்புடன் சாத்திய சந்தனம்

குப்ஜை ஆத₃ரித்துச் சாத்தின சாந்துபோலே இருக்கும் சாந்தையன்றோ எனக்கிட்டது! सुगन्धमेतत् (ஸுக₃ந்த₄ம் ஏதத்) குப்ஜை கம்ஸனுக்குப் பரணியோடே சாந்து கொண்டுபோகா நிற்க, "வாரீர் பெண்பிள்ளாய்! நமக்கும் நம்மண்ணற்கும் சாந்திட வல்லீரோ?" என்ன; அவ்வடிவையும் விருப்பையும் கண்டு, ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமான சாபல்யத்தாலே மறுக்க மாட்டிற்றிலள்;

---

போன்றதொரு சந்தனத்தையன்றோ எனக்கும் கொடுத்தான். கூனி சாத்தின சந்தனம் எப்படிப் பட்டது என்றால், (அது பின்வருமாறு): கண்ணபிரான் கம்ஸனால் அழைக்கப் பட்டு மதுராநகரத்திற்குச் சென்று கொண்டிருந்தபோது, அரண்மனைக்குச் செல்லுகின்ற வழியில், கூனியைக் கண்டான். கம்ஸனுக்காகப் பேழையில் சந்தனத்தைக் கொண்டு செல்லும் கூனியைப் பார்த்த கண்ணன் அவளை நோக்கி **"ஸுக₃ந்த₄மேதத் ராஜார்ஹம் ருசிரம் ருசிராநநே, ஆவயோர் கா₃த்ர ஸத்ருஶம் தீ₃யதாமநுலேபநம்"** (வி.பு. 5-20-6) (இந்த சந்தனம் நல்ல மணமுடையது. இது அரசனாகிற கம்ஸனுக்குத் தகுந்தது. அழகிய முகத்தை உடையவளே! எங்கள் இருவருடைய உடலுக்குத் தகுதியான சந்தனத்தைத் தருவாயாக!) என்றான். (இந்த சுலோகத்தின் பொருள் விளக்கப் படுகிறது) "பெண்பிள்ளையே! எனக்கும் என் அண்ணனான பலராமனுக்கும் சந்தனம் தரலாமோ?" என்று கண்ணன் கேட்க, அவனுடைய அழகையும் சந்தனத்தின்மீது அவனுக்கிருந்த விருப்பத்தையும் கண்ட கூனியால், பெண்களுக்கே உரிய தன்மையின் காரணமாக

"இவர்கள் இடைப்பிள்ளைகள், சாந்தின் வாசியறிய மாட்டார்கள்" என்று ஆக்கனாயிருப்தொன்றை இட்டாள்; அத்தைப் பார்த்து,"நாற்றம் கொளுத்தினபடி அழகியது, தளமழகி தன்று" என்ன; அதுக்கு மேலே ஒரு சாந்தையிட, राजार्ह (ராஜார்ஹம்) இது கம்ஸனுக்குச் செருக்கிலே பூசலாம் இத்தனை, வாசியறிந்து பூசுவார்க்கு ஸத்₃ருஶமல்ல; அன்றியே, வழக்கனான சாந்து என்னவுமாம். रुचिरं (ருசிரம்) "ஸௌக₃ந்த்₄யம் கிடக்க, நிறமழகியதா யிருந்தது" என்ன; 'இவர்கள் இடைப்

---

மறுக்க முடியவில்லை. 'இவர்கள் ஆயர் பிள்ளைகள்; எனவே சந்தனத்தின் தரமறியமாட்டார்கள்' என்று நினைத்து போலியானதொரு சந்தனத்தைக் கொடுத்தாள். அதைக் கண்ட கண்ணன் "**ஸுக₃ந்த₄ம் ஏதத்**" (இது வாசனையுள்ளது) "இதன் வாசனை நன்றாக உள்ளது; ஆயினும் இது நல்ல சந்தனமல்ல" என்றான். கூனி அதைவிட உயர்ந்த சந்தனத்தைக் கொடுக்க, "**ராஜார்ஹம்**" (அரசனுக்குத் தகுந்தது) "இது கம்ஸன் செருக்குடன் இருக்கும்போது பூசிக்கொள்ளலாம் அவ்வளவே; சந்தனத்தின் தரமறிந்து பூசிக் கொள்பவர்களுக்கு இது தகுதியானதன்று; எனவே இதுவும் நல்ல சந்தனமல்ல" என்றான். அல்லது வழக்கனான - செலவுக்கான (பிறருக்குக் கொடுப்பதற் கான) சந்தனமே தவிர, சொந்த உபயோகத்திற்குத் தகுதியானதன்று என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம். "**ருசிரம்**" (அழகியது) "வாசனை இருக்கட்டும்! இதன் நிறம் மிக அழகாக உள்ளது" என்றான். 'இவர்கள் இடைப்பிள்ளைகள் என்று

பிள்ளைகள் என்றிருந்தோம், சாந்தின் வாசியறிந்தபடி என்!' என்று ஆத₃ரித்துப்பார்க்க, ருசிராநநே (ருசிராநநே) "உன் முகத்தில் ஆத₃ரத்துக்கு ஸத்₃ருஶமாய் இருக்கவேண்டாவோ நீயிடும் சாந்தும்!" என்ன; அவளும் தலையான சாந்தையிட, ஆவயோர் கா₃த்ர ஸத்₃ருஶம் (ஆவயோர் கா₃த்ர ஸத்₃ருஶம்) "எங்களுடம்புக்கு ஸத்₃ருஶமான மேத₃க வஸ்துவையிட்டு மர்த்தி₃த்துத்தா" என்றான். அதாவது, 'பூசும் சாந்து' என்கிறபடியே 'உன்னுடைய ஆத₃ரத்தாலே ஸம்ஸ்க்ருதமாக்கித் தா' என்றபடி. இப்படி

---

நினைத்தோம். சந்தனத்தின் தரத்திற்கு இடையே உள்ள வேறுபாட்டை இவர்கள் அறிந்தபடி என்னே! என்ற ஈடுபாட்டுடன் கூனி அவர்களை நோக்கினாள். **"ருசிராநநே"** (அழகிய முகத்தை உடையவளே) "உன் அழகிய முகத்தில் ஈடுபாட்டிற்குத் தகுதியானதாக இருக்கவேண்டாமோ நீ அளிக்கும் சந்தனமும்" என்றான். அவளும் உயர்ந்த சந்தனத்தை அளிக்க, **"ஆவயோர் கா₃த்ரஸத்₃ருஶம்"** (எங்கள் உடலுக்குத் தகுதியானதாக) "எங்கள் இருவருடைய உடம்பிற்குத் தகுதியாக (பச்சைக் கருப்பூரம், குங்குமப்பூ போன்ற) பொருள்களைக் கலந்து தா" என்றான். அதாவது, "உன்னுடைய ஈடுபாட்டைக் கலந்து 'பூசும் சாந்து' என்கிறபடி நன்றாக ஆக்கிக் கொடு" என்றான். (நம்மாழ்வார் "பூசும் சாந்து என்நெஞ்சமே" (திருவாய்மொழி (4-3-2) என்று எம்பெருமான் மீது ஆராதகாதல் கொண்டிருக்கின்ற தம் நெஞ்சையே எம்பெருமானுக்குப் பூசும் சந்தனமாகக் கூறினார். அப்படியே நீயும் உன்னுடைய ஈடுபாட்டுடன் கூடிய நெஞ்சோடு கலந்து

இவள் ஆத₃ரித்துச் சாத்தின மாளிகைச் சாந்தைக் கிடீர் தம் திருக்கையாலே என்னுடம்பிலே பூசிற்று. (தந்து) தந்த போதைத் திருமுகத்தில் கௌ₃ரவத்திலும் ஔத₃ார்யத்திலும் தோற்று ஐஸ்வர்யத்தை விட்டு, அவன்தானே அமையும் என்னும்படியாய்த்துத் தந்தது. (என்னை வெள்ளுயிராக்க வல்ல) चोरेणात्मापहारिणा (சோரேண ஆத்மாபஹாரிணா) என்கிறபடியே ஆத்மாபஹாரம் பண்ணி, அதனாலே க்ஷுத்₃ரப்ரயோஜந

---

தருவாயாக! என்பது கருத்து.) 'இப்படிக் கூனி ஈடுபாட்டுடன் சாத்தினது போன்ற உயர்ந்த சந்தனத்தை யன்றோ எம்பெருமான் தன் திருக்கையால் என் உடலிலே பூசினான்!' என்கிறான் ஐஸ்வர்யார்த்தி. (**தந்து**) அதைக் கொடுத்தபோது அவன் திருமுகத்தில் தோன்றிய மதிப்பிலும், வள்ளன்மை யிலும் தோற்று, தான் விரும்பிய செல்வத்தில் ஆசையை விட்டு, அவனைப் பற்றுவதே நன்று என்று கொள்ளும் படியாகவன்றோ அவன் தந்தது! (**என்னை வெள்ளுயிர் ஆக்க வல்ல**) "**யோந்யதா₂ ஸந்தமாத்மாநம் அந்யதா₂ ப்ரதிபத்₃யதே, கிம் தேந நக்ருதம் பாபம் சோரேண ஆத்மாபஹாரிணா**" (பகவானுக்கு உடைமையாக இருக்கும் ஆத்மாவை எவனொருவன் தனக்குச் சொந்தமானதாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப் படாத பாபம் எது?) (பார. உத். 42-35) என்று கூறப்பட்டுள்ளபடி பகவானுடையதான ஆத்மாவை என்னுடையது என்று கொண்டு அபகரித்து, தாழ்ந்த பயனான

காமனாய் ஸம்ஸாரியாய்ப் போந்த என்னை. (வெள்ளுயிர் ஆக்கவல்ல) முன்பு க்ஷுத்$_3$ரனாய்ப் போந்தானொருவன் ஶுத்$_3$த$_4$ஸ்வப$_4$ாவன் ஆனான் என்று தெரியாதபடி அஸ்ப்ருஷ்டஸம்ஸாரக$_3$ந்த$_4$ரிலே ஒருவன் என்னலாம் படியாய்த்து விஷயீகரித்தது. (வல்ல) தன்னதொரு ஸ்வப$_4$ாவ விஶேஷத்தாலே வஸ்துவை வஸ்த்வந்தரமாக்க ஶக்தனென்கை.

(பையுடையித்யாதி) மங்க$_3$ளாஶாஸநத்துக்கு விஷயமேது? என்ன, அவ்விஷயத்தைச் சொல்லுகிறார். தன்னோட்டை ஸ்பர்ஶஸுகத்தாலே விகஸிதப$_2$ணமான

---

செல்வத்தை விரும்பி ஸம்ஸாரியாகிவிட்ட என்னை அன்றோ திருத்தினான்! *(வெள்ளுயிர் ஆக்க வல்ல)* முன்பு தாழ்ந்தவனாக இருந்தவன் இப்போது நல்ல தன்மைகளை உடையவனாக ஆகிவிட்டான் என்றே தெரியாதபடி, (அதாவது, முன்பு எனக்கிருந்த தாழ்வே தெரியதபடி) ஆக்கிவிட்டான். ஸம்ஸாரத்தின் வாசனையே இல்லாத நித்யசூரிகளிலே இவனும் ஒருவன் என்று பிறர் என்னை நினைக்கும்படியாக அன்றோ என்னை ஆக்கி அருள்புரிந்துள்ளான்! ***(வல்ல)*** தனக்குள்ள ஒரு தன்மையின் பெருமையினால், ஒரு பொருளை மற்றொரு பொருளாக ஆக்கவல்ல சக்தி உடையவன் எம்பெருமான் என்பது கூறப்படுகிறது.

***(பையுடை நாகப்பகைக் கொடியானுக்கு)*** 'எதைக்குறித்து நீர் மங்களாஶாஸநம் செய்யப் போகிறீர்' என்ன, அதைக் கூறுகிறார். எம்பெருமானுடன் கூடியிருப்பதால் உண்டான மகிழ்ச்சியினால், விரிந்த படங்களை உடையவன்

நாகத்தினுடைய பகையுண்டு, பெரியதிருவடி, அவனைக் கொடியாக உடையவனுக்கு. அநந்தஶாயியாய் க₃ருட₃த்₄வஜனானவனுக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிறேன் என்கை. தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே திருவநந்தாழ்வா னோட்டைச் சேர்த்தியால் வரும் அழகு நித்யஶ்ரீயாக வேணுமென்றும், 'ஏதேனுமொன்றை அபேக்ஷித்து வந்தவர்களையும் எனக்காக்கிக் கொள்ளவல்லேன்' என்று கொடி கட்டியிருக்கிற ஶக்தி நித்யஶ்ரீயாய்ச் செல்லவேணு மென்றும் திருப்பல்லாண்டு பாடுகிறேனென்கிறார். அநந்யப்ரயோஜநரும் கைவல்யார்த்திகளும் ஸங்க₃தராகிற விடத்தில்

---

திருவனந்தாழ்வான். பாம்பின் விரோதியான கருடனைக் கொடியாக உடையவன் எம்பெருமான். (உலகத்தில் ஒன்றுக்கொன்று பகையாகக் காணக்கூடிய) பாம்பினைப் படுக்கை யாகவும் கருடனைக் கொடியாகவும் உடையவனான எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்கிறேன் என்கிறார். தங்கத் தகட்டில் அழுத்திய மாணிக்கம் போல், திருவனந்தாழ்வானோடு சேர்ந்துள்ள எம்பெருமானுடைய அழகு நித்யமாகச் செல்ல வேண்டும் என்றும், செல்வம் போன்ற வேறு பயன் களை விரும்பி வருகின்ற(என்போன்ற)வர்களையும் 'எனக்கே ஆக்கிக் கொள்ள வல்லேன்' என்று கொடி கட்டிக் கொண்டிருக்கிற சக்தி நித்யமாகச் செல்ல வேண்டும் என்றும் திருப்பல்லாண்டு பாடுகிறேன் என்கிறார். அநந்யப்ரயோஜரும், கைவல்யார்த்தி களும் கூடுகின்றதாகப் பேசும் பாசுரங்களில் (பாடுதும் என்றும் கூறுதும் என்றும்) திரளாகக்

ஸமூஹமாகப் பேசினார்; இதில் ஐஶ்வர்யார்த்திூயை ஏகவசநத்தாலே பேசுவானென்? என்னில்; அவர்கள் திரள் பரிச்சிந்நமாய், ஐஶ்வர்யார்த்திூகள் திரள் அபரிச்சிந்நம் ஆகையாலே ஓர் ஊருக்கு ஒருத்தன் வார்த்தை சொல்லுமா போலே சொல்லுகிறார்.

ஒன்பதாம் பாட்டு. (உடுத்தித்யாதி) வாழாளிலே அழைத்து, எந்தை தந்தையிலே வந்து கூடின அநந்ய ப்ரயோஜநர் பாசுரத்தாலே அவர்களோடே கூடித் திருப்பல்லாண்டு பாடுகிறாரிதில்.

---

கூறுவதாக (பன்மையில்) கூறினார். ஆனால் ஐஶ்வர்யார்த்தியின் பாசுரமான இதில் (கூறுவனே என்று) ஒருமையில் கூறுவதற்குக் காரணம் என்ன எனில், அநந்யப்ரயோஜநரும், கைவல்யார்த்திகளும் எண்ணிக்கையில் குறைந்தவர்கள் ஆதலால் அவர்கள் அனைவரும் சேர்ந்து திரளாகக் கூறுவதாகச் சொன்னார். ஆனால் ஐஶ்வர்யார்த்திகள் திரள் அளவற்றதாகையால், ஓர் ஊருக்கு ஒருவன் பிரதி நிதியாகப் பேசுவதுபோல (ஒருமையில்) கூறுகிறார்.

ஒன்பதாம் பாட்டு. (உடுத்து இத்யாதி) 'வாழாள்' என்கின்ற மூன்றாம் பாசுரத்தில் அழைக்கப்பட்டு, 'எந்தைதந்தை' என்கின்ற ஆறாம் பாசுரத்தில் வந்து கூடின அநந்யப்ரயோஜனர்களோடு சேர்ந்து, அவர்கள் பேச்சால் திருப்பல்லாண்டு பாடுகிறார் இப்பாசுரத்தில்.

உடுத்துக்களைந்த நின்பீதகவாடை
உடுத்துக்கலத்ததுண்டு*
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன
சூடுமித்தொண்டர்களோம்*

விடுத்ததிசைக்கருமம்திருத்தித்
திருவோணத்திருவிழவில்*
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 9

| | |
|---|---|
| உடுத்துக் களைந்த | - திருவரையில் உடுத்துகழித்த, |
| நின் | - (ஸ்வாமியான) உன்னுடைய, |
| பீதக ஆடை | - திருப்பீதாம்பரத்தை, |
| உடுத்து | - உடுத்தும், |
| கலத்தது | - (நீ அமுதுசெய்த) கலத்தில் இருப்பதை, |
| உண்டு | - உண்டும், |
| தொடுத்த | - அடியோங்கள் தொடுத்ததும், |
| சூடிக்களைந்தன | - (நீ) சூடிக் களைந்ததுமான |
| துழாய் மலர் | - திருத்துழாய் மலர்களை, |
| சூடும் | - சூட்டிக்கொண்டும், |
| இத் தொண்டர்களோம் | - இப்படிப்பட்ட அடியார்களாய் இருக்கிறோம் நாங்கள் ; |
| படுத்த | - படுக்கப்பட்டு, |
| பை | - பணைத்த படங்களையுடைய, |
| நாக அணை | - ஆதிசேஷனாகிற படுக்கையிலே, |
| பள்ளி கொண்டானுக்கு | - திருக்கண்வளர்ந்தருளுகிற உனக்கு, |
| விடுத்த திசைக் கருமம் | - ஏவின திசைகளிலுள்ள செயல்களை, |
| திருத்தி | - நன்றாகச் செய்து, |
| திருவோணத் திருவிழவில் | - திருவோணமென்னும் திருநாளில், |
| பல்லாண்டு கூறுதும் | - திருப்பல்லாண்டு பாடுவோம். |

(உடுத்து) திருவரையில் ஸுஸங்கதமாகச் சாத்துகையாலும் திருவரையில் முசிக்கையாலும் தத்

---

*(உடுத்து)* எம்பெருமானுடைய திருமேனியில் மிகவும் பொருத்தமாகச் சாத்துவதால்

ஸம்ப$_3$ந்த$_4$ம் தோற்றும்படி ஒற்றுமஞ்சளாலும் மாளிகைச் சாந்தாலும் சிஹ்நிதமாம்படி உடுத்து. இவை இத்தனையும் ப்ரார்த்த$_2$நீயமாம்படி இருப்பார் சிலர் நாங்கள். ஶேஷிக்கு மங்க$_3$ளாவஹமாகையும் தத்ஸம்ப$_3$ந்த$_4$ங்கள் தோற்றின சிஹ்நங்களை உடைத்தாகையும் ஶேஷபூ$_4$தனுக்கு ஸ்ம்ருதி விஷயமாய்க் கொண்டு ஸர்வகாலமும் ப்ரியகரமாயிறே இருப்பது. (களைந்த) ஆஸநபே$_4$தத்திலே கழித்தால் பொகடும் ஸ்த்த$_2$லம் தங்கள் தலையாம்படி இருக்கை. இதுவும்

---

கசங்குகையாலும், மஞ்சள், சந்தனம் ஆகியவை படிந்திருப்பதாலும், எம்பெருமானுக்குச் சாத்திய ஆடை என்ற அடையாளம் நன்கு தெரியும்படி உடுத்து. இப்படிக் கசங்கியிருப்பதும், மஞ்சள் முதலிய கறைகள் படிந்திருப்பதுமான ஆடையை வேண்டிப் பெறுபவர் காண் நாங்கள். எம்பெருமானுக்கு மங்களத்தை உண்டாக்குவதும், அவன் சாத்திக் களைந்தது என்ற அடையாளங்க ளோடு கூடியதுமான ஆடையானது அடியவனுக்கு எம்பொழுதும் நினைவில் நிற்பதாய், மிகவும் விரும்பத்தக்கதாகவன்றோ இருக்கும்! **(களைந்த)** ஒரு ஆஸநத்தில் அவன் அணிந்துகொண்ட ஆடையை கழற்றும்போது, அதைப் போடுகின்ற இடம் தங்கள் தலையாகவன்றோ இருக்கும்! இதுவும் அடியவனுக்கு வேண்டிப்பெறும்படியானதன்றோ! (திருவரங்கத்தில் நம்பெருமாளுக்குத் திருமஞ்சனம் ஒரு ஆஸநத்தில் ஒரு நடைபெறும்போது, ஒரு வஸ்த்ரத்தைக் களைந்தவுடன், அதைப் பரிசாரகர் தம் தலைமீது தாங்கிப் பெற்றுக் கொள்வது

ஶேஷபூ$_4$தனுக்கு ப்ரார்த்த$_2$நீயமிறே. இங்ஙன் ப்ரார்த்த$_2$நீயமாக வேண்டுகிறதுக்கு ஹேது சொல்லுகிறது மேல். (நின் பீதகவாடை) வகுத்த ஶேஷியதாகையாலே சாத்தும் திருப்பரியட்டமடையத் திருப்பீதாம்பரத்தினுடைய ஆவேஶாவதாரமாகை. (நின் பீதகவாடை) स्रग्वस्त्राभरणैर्युक्तं स्वानुरूपैरनूपमैः। चिन्मयैस्स्वप्रकाशैश्च अन्योन्यरुचिरञ्जितैः (ஸ்ரக்$_3$வஸ்த்ராப$_4$ரணைர்யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை: சிந்மயைஸ் ஸ்வப்ரகாஶைச்ச அந்யோந்ய ருசிரஞ்ஜிதை:) என்று சேதநகோடியிலேயிறே திருப்பீதாம்பரத்தைச் சொல்லுகிறது. (உடுத்து) இதிறே அநந்யப்ரயோஜநர்க்கு

---

நினைவுகூரத்தக்கது.) இப்படி அந்த ஆடையை வேண்டிப் பெற வேண்டியதன் காரணத்தை மேலே கூறுகிறார் (**நின் பீதக ஆடை**) இயற்கையான தலைவனான எம்பெருமான் சாத்திக் கொள்ளும் திருப்பரியட்டம் (**ஆடை**) எல்லாவற்றிலும் திருப் பீதாம்பரம் ஆவேஶித்திருக்கும். அப்படி ஆவேஶி த்திருப்பதற்குத் திருப்பீதாம்பரம் சேதநமோ (அறிவுடைய பொருளோ) என்னில், (**நின் பீதக ஆடை**) **"ஸ்ரக்$_3$வஸ்த்ர ஆப$_4$ரணைர் யுக்தம் ஸ்வாநுரூபை: அநூபமை: சிந்மயை: ஸ்வப்ரகாஶை: ச அந்யோந்ய ருசி ரஞ்ஜிதை:"** (பௌஷ்.ஸம்ஹிதை) (தனக்குத் தகுந்தவையும், ஒப்பற்றவையும், **ஞான மயமானவை யும்**, ஸ்வயம் ப்ரகாசமானவையும், ஒன்றுக்கொன்று சேர்த்தியினால் அழகானவையுமான மாலைகளோடும், ஆடைகளோடும், ஆபரணங்களோடும் கூடியிருப்பது பரப்ரஹ்மம்) என்று சேதநமாக அன்றோ திருப்பீதாம்பரம் கூறப்பட்டுள்ளது. **(உடுத்து)**

ஆபரணம். அங்ஙனன்றிக்கே ப$_4$க்தார் (பக்தாநாம்) என்றிருக்குமவனாகை யாலே இதுதான் ஶேஷியளவிலே வந்தவாறே ப்ரதிபத்தி வேறுபட்டிருக்கும். ராஜாக்களுக்கு இரட்டை பிடித்துக் கொடுக்குமவர்கள் வாக்காகப் பிடித்துத் தங்கள் அரையிலே உடுத்திருந்து யோக்$_3$யமாம்படி பண்ணிக் கொடுப்பார்கள்; அதுவாய்த்து இவனுக்கு நினைவு. (கலத்தது உண்டு) அமுதுசெய்து

---

எம்பெருமான் உடுத்துக் களைந்த திருப்பீதாம்பரத்தை உடுத்துவதே, வேறுபயன்கருதாமல் அவனுக்குத் தொண்டு செய்பவர்களுக்கு ஆபரணமாகும். அங்ஙன் அல்லாமல், 'ந தே ரூபம் நசாகாரோ நாயுத$_4$ாநி நசாஸ்பத$_3$ம், தத$_2$ாபி புருஷாகாரோ ப$_4$க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே" (உன்னுடைய ஸ்வரூபமும், திருமேனியும் திவ்யாயுதங்களும், இருப்பிடமும் உனக்காக அன்று. உன் அடியார்களுக்காகவே இவற்றுடன் நீ பிரகாஶிக்கின்றாய்) (ஜிதந்தே ஸ்தோத்ரம்-4) என்று கூறப்பட்டுள்ளபடி, இவை பக்தர்களுக்காக என்றிருக்குமவன் ஆகையால், எம்பெருமான் இதை உடுத்துக்கொள்ளும்போது அவன் நினைவு வேறுபட்டிருக்கும். (அடியவர்கள் உடுத்துக்கொள்ள வேண்டிய ஆடை என்ற நினைவுடனே அவன் முதலில் அணிந்து கொள்வான் என்றபடி.) அரசர்கள் அணிந்து கொள்ளக் கூடிய இரட்டை (உத்தரீயம்) மடித்துக் கொடுப்பவர்கள் முதலில் வாகாக மடித்துத் தங்கள் அரையிலே அணிந்து கொண்டு அது பொருத்தமாக இருக்கிறதா என்று பார்த்துப் பிறகே அரசனிடம் கொடுப்பார்கள். எம்பெருமானும் அதுபோன்ற நினைவுடனேதான்

கைவாங்கின தளிகை மாற்றினால் ப்ரஸாதம் போஜ்யம். त्वदीयभुक्तोज्जितशेषभोजिना (த்வதீ$_3$யபு$_4$க்தோஜ்ஜித ஶேஷபே$_4$ாஜிநா) என்னக்கடவதிறே. ப்ரஸாத$_3$மே த$_3$ாரகமாயிருப்பார் சிலர் நாங்கள். गुरोरुच्छिष्टं भुञ्जीत (கு$_3$ரோருச்சி$_2$ஷ்டம் புஞ்ஜீத) என்று விதி$_4$ப்ரேரிதராய்க் கொண்டு ப்ரதிபத்தி பண்ணுவர்கள் ஸ்வரூப ஜ்ஞாநம் இல்லாதார்; ஸ்வரூபஜ்ஞானமுடையார், தத்ஸித்$_3$யர்த்த$_2$ மாக ப்ரதிபத்தி பண்ணுவர்கள்; ப$_4$க$_3$வத் ப்ரேமயுக்தர், ஸ்வயம் ப்ரயோஜநம் என்றிருப்பர்கள். இஸ்ஶேஷத்வ

---

ஆடையை அணிந்துகொள்கிறான். **(கலத்தது உண்டு)** எம்பெருமான் அமுதுசெய்து கைவாங்கின தளிகையைத் தந்தால் அந்த ப்ரஸாதமே உண்ணத்தக்கது. **"த்வதீ$_3$யபு$_4$க்தோஜ்ஜித ஶேஷ பே$_4$ாஜிநா"** (உன்னாலே அமுதுசெய்யப்பட்டு மிகுந்ததை உண்பவர்) (ஸ்தோத்ர ரத்நம்-42) என்று சேனைமுதலியாரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளதறோ! எம்பெருமான் அமுதுசெய்த ப்ரஸாதத்தையே தாரகமாக (தரித்திருப்பதற்கு உண்பவையாகக்) கொண்டிருப்பவர் களன்றோ நாங்கள்! **"கு$_3$ரோருச்சிஷ்டம் புஞ்ஜீத"** (ஆசார்யன் அமுது செய்து மிகுந்ததை உண்ணக் கடவன்) என்று விதி உள்ளதே என்று அதில் ஈடுபாடு கொள்பவர் ஸ்வரூபத்தைப் பற்றிய அறிவில்லாதவர். ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்தவர், தம் ஸ்வரூபம் நிலை பெறுவதற்காக (ஸ்வரூபஸித்யர்த்தமாக) பிரசாதத்தை உண்பதில் ஈடுபாடு கொள்வர். பகவானிடத்தில் அன்பு உடையவர் பிரசாதத்தைப் பெறுவதே தனக்குப் பயன் என்ற நினைவுடன்

காஷ்ட்டையான ததீ$_3$யருடைய ப்ரஸாத$_3$ம் 'தருவரேல்' என்கிறபடியே அதி$_3$க்ருதாதி$_4$காரமாயிருக்கும். ஸர்வ ஸாதா$_3$ரணனது ஆகையாலே, ப்ரயோஜநாந்தரபரனுக்கும் யோக்$_3$யமாயிறே ப$_4$க$_3$வத் ப்ரஸாத$_3$மிருப்பது.

(தொடுத்தவித்யாதி) திருத்துழாய் பறிக்கும்போதும் தொடுக்கும்போதும் 'அவன் சாத்தியருளப்புகுகிறான்' என்னும் ஆத$_3$ரத்தாலே ஸம்ஸ்க்ருதமாய், சாத்திக் கழித்தால் சூடுமது எங்களுக்கு உத்தே$_3$ஶ்யம். சுவடர் பூச்சூடும்போது புழுகிலே தோய்த்துச் சூடுமாபோலே

---

கொள்வர். இவ்வடிமைக்கு எல்லைநிலமான அவனுடைய அடியவர்கள் அமுது செய்த பிரஸாதம் 'போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே' (திருமாலை-41) என்கிறபடி, தகுதி உடைய ஒரு சிலருக்கே கிடைக்கக் கூடியது. ஆனால் எம்பெருமான் அனைவருக்கும் பொதுவானவன் ஆகையால், வேறுபயன்களை விரும்புபவர்களுக்கும் அவன் பிரசாதம் கிடைக்கக் கூடியதாக இருக்கும். அவனையே விரும்புபவர்களுக்கு அவனுடைய பிரசாதம் கிடைப்பதற்குக் கூறவும் வேண்டுமோ?

**(தொடுத்த துழாய் மலர்)** திருத்துழாயைப் பறிக்கும் போதும், அதை மாலையாகத் தொடுக்கும் போதும், 'இதை எம்பெருமான் சாத்திக்கொள்ளப் போகிறான்' என்னும் ஈடுபாட்டுடன் தொடுத்ததனால், மிகவும் நன்றாகச் செய்யப் பட்ட திருத்துழாய் மாலையை அவன் சூடிக் களைந்த பின் நாங்கள் சூடுவதே எங்கள் விருப்பம். சுவைஞர்கள் (சிறந்த ரஸிகர்கள்) பூவைச் சூடுவதற்கு முன்னர் புனுகு முதலிய வாசனை திரவியங்களில் தோய்த்துப்

தத்ஸ்பர்ஶத்தாலே விலக்ஷணமாயிருக்குமென்கை. அவன்றானும், சிலர் சூடிக் கொடுத்த மாலையின் சுவடு அறியுமவனாகையாலே சூடிக் கொடுக்கிறானிறே. (இத்தொண்டர்களோம்) இப்படிப் பட்ட அடியார்களிறே நாங்கள். எமக்கென்று உடுத்தல் ஜீவித்தல் சூடுதல் செய்யுமவர்களன்றிக்கே, அவன் கழித்தவை கொண்டு தே₃ஹயாத்ரையாம்படி இருக்குமவர்களிறே நாங்கள். ஸ்வரூப ஸித்₃யர்த்த₂மாக அத்தலையில் உச்சிஷ்டங்களை ஆகாங்க்ஷித்து, 'புகையிலுண்பன்' என்றிருக்குமத்தனையோ?

---

பிறகு சூட்டிக் கொள்வது போல, அவனணிந்து கொண்ட பிறகு அதைச் சூடிக் கொள்வது மிகவும் சிறப்பானதாகும். சிலர் சூடிக் களைந்த மாலையின் சிறப்பை அறிந்தவன் ஆதலால் அவனும் சூடிக் களைந்து கொடுக்கிறான். (ஆண்டாள் சூடிக் களைந்து கொடுத்த மாலையின் சிறப்பு அறிந்தவனன்றோ அவன்!) (**இத்தொண்டர்களோம்**) அவனுடைய பிரசாதங்களையே விரும்புபவர்கள் அன்றோ நாங்கள். எங்களுக்காகத் தனியாக உடுத்தல், உண்ணுதல், சூடுதல் செய்பவர்களல்லாமல், அவன் கழித்தவை கொண்டு வாழ்பவர்களன்றோ நாங்கள்! எம்பெருமானுக்கு அடிமைப் பட்டவர்கள் என்ற ஸ்வரூபம் நிலைபெறவேண்டும் என்பதற்காக 'புகையில் உண்பன்' என்பது (திருமடைப்பள்ளியில் தளிகை செய்யப் படும் புகையைக்கண்டு, இந்த பிரசாதம் நமக்குக் கிடைத்தால் உண்ணலாமே என்ற பாரிப்புடன் பொழுதைக் கழிப்பது) போல, அவன் கழித்தவைகள் கிடைத்தால் பெறுவோம் என்று

என்னில்: (விடுத்தவித்யாதி) ஸ்வாமி ஸங்கே₃ஶ காரிகளாய்க் கொண்டு, இப்படி தே₃ஹ யாத்ரை நடத்துமவர்களிறே நாங்கள். (விடுத்ததிசைக் கருமம் திருத்தி) क्रियतां (க்ரியதாம்) என்கிற ஸங்கே₃ஶமே த்₃வாரகமாக ஏவின கார்யத்தைச் செய்து தலைக்கட்டுகை. திசைக்கருமம் திருத்துகையாவது, அத்திக்குக்கு வேறொருவரை ஏவ வேண்டாதபடி செய்து தலைக்கட்டுகை. ஸ்வாமி ஏவின கார்யத்தைக் குறையச் செய்யுமவன் அத₄மன்; அத்தைக் குறையாமல் தலைக்கட்டுமவன் மத்₃யமன்; அதுக்கு மேலே, அதுக்கு அவிருத்₃த₄மான கார்யங்களையும் விசாரித்துச் செய்து தலைக்கட்டுமவன் உத்தமன். कार्ये कर्मणि निर्दिष्टे यो

---

எதிர்பார்த்திருக்கும் அவ்வளவேயோ? (**விடுத்த திசைக் கருமம் திருத்தி**) எம்பெருமானுடைய பெருமைகளை எடுத்துச் சொல்லும் தூதுவர்களாய் வாழ்வை நடத்துபவர்கள் நாங்கள். (**விடுத்த திசைக் கருமம் திருத்தி**) 'க்ரியதாம்' (இந்தக் கார்யம் செய்யப்படட்டும்) என்ற செய்தியையே இருப்பாகக் கொண்டு ஏவின செயலைச் செய்து முடிப்பது. திசைக் கருமம் திருத்துகையாவது, தன்னை ஏவின திசையில் மற்றொருவரை அனுப்ப வேண்டாதபடி செயலைச் சிறிதும் குறைவில்லாமல் செய்து முடித்தலாகும். தலைவன் ஏவிய செயலைக் குறையுடன் செய்பவன் அதமன். சிறிதும் குறைவில்லாமல் செய்பவன் மத்யமன். தலைவன் ஏவிய செயலைக் குறைவில்லாமல் செய்து முடிப்பதோடு, அதற்கு விரோதமற்ற காரியங்களையும் தானாகவே ஆராய்ந்து செய்து முடிப்பவனே உத்தமன். "**கார்யே**

बहून्यपि साधयेत्। पूर्वकार्याविरोधेन स कार्यं कर्तुमर्हति॥ (கார்யேகர்மணி நிர்தி₃ஷ்டே யோ ப₄ஹூந்யபி ஸாத₄யேத் பூர்வகார்ய அவிரோதே₄ந ஸ கார்யம் கர்த்துமர்ஹதி) என்கிற திருவடியிறே அவனாகிறான். "பிராட்டி இருந்த இடம் அறிந்து வா" என்றுவிட, இருந்த இடமும் அறிந்து, "அவன் பலம் இருந்தபடி யென்?" என்று பெருமாள் கேட்டருளினால், "அறிந்திலேன்" என்ன ஒண்ணாது என்று, அத்தலையில் ப₃லபரீக்ஷையும் பண்ணி ஊரில் அரணையும் தலையழித்து, மூலையடியே போம்படி

---

*கர்மணி நிர்தி₃ஷ்டே யோ ப₄ஹூந்யபி ஸாத₃யேத், பூர்வகார்யாவிரோதே₄ந ஸ கார்யம் கர்த்து மர்ஹதி"* (செய்யவேண்டிய கார்யத்தைச் செய்து முடித்தவுடன், அந்தக் கார்யத்திற்கு விரோதமில்லாத பல காரியங்களையும் எவன் செய்கிறானோ அவனே காரியம் செய்யத் தகுந்தவன்) (ரா.ஸு. 41-15) என்று கூறப்பட்டுள்ளபடி, சிறிய திருவடியான அனுமனே அப்படிப்பட்டவன். "சீதைப் பிராட்டி இருக்கும் இடத்தை அறிந்து வா" என்று அனுமனை அனுப்பினான் இராமபிரான். அவளிருந்த இடத்தை அறிந்து கொண்ட அனுமன், "அவளைச் சிறை வைத்திருக்கின்ற இராவணனுடைய பலம் எவ்வளவு?" என்று இராமன் கேட்டால், "அது எனக்குத் தெரியாது" என்று கூறக்கூடாது என்பதற்காக, இராவணனுடைய பலத்தை அறிந்துகொள்ளும் பொருட்டு, அசோகவனத்தை அழித்து, அவனுடைய காவலையும் குலைத்து, அமர்க்களம் செய்து, தன் பலத்தையும் இராவணனுக்குக் காட்டிவிட்டன்றோ அனுமன்

பண்ணிவந்தானிறே. (திருவோணத் திருவிழவில்) ஏவின கார்யத்தைக் குறையறச் செய்தவளவிலும் பர்யாப்தி பிறவாமையாலே, திருவவதரித்தருளின திருவோணமாகிற மங்க₃ள தி₃வஸத்திலே 'என்ன தீங்கு வருகிறதோ!' என்று மங்க₃ளாஶாஸநம் பண்ணி வர்த்திக்குமவர்கள்.

(படுத்தவித்யாதி) அத்தாலும் பர்யாப்தி பிறவாமை யாலே திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்தபோதை அழகுக்குக் கண்ணெச்சில் வாராமைக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணு கிறார்கள். படுக்கப்பட்டு ஸ்வஸம்ஶ்லேஷத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள ப₂ணத்தையுடையனாய்,

---

திரும்பினான்! (அப்படியே எம்பெருமானுடைய காரியத்தைக் குறைவில்லாமல் செய்பவர்கள் நாங்கள் என்பது கருத்து.) **(திருவோணத்திருவிழவில்)** ஏவின கார்யத்தைக் குறைவில்லாமல் செய்வதோடு மட்டும் திருப்தி அடையாமல், 'அவனுக்கு என்ன தீங்கு நேருமோ?' என்று அச்சம் கொண்டு, அவன் திருவவதரித்தருளின திருவோணமாகிற நன்னாளிலே மங்களாஶாஸனம் செய்பவர்கள் நாங்கள்!

**(படுத்த பைந்நாகணைப் பள்ளி கொண்டானுக்கு)** அப்படிச் செய்தும் திருப்தி ஏற்படாமையால், அவன் திருவனந்தாழ்வான் மேல் பள்ளி கொண்டு எழுந்தருளி இருக்கும் அழகுக்குக் கண்ணெச்சில் (த்ருஷ்டி) ஏதும் வாராமலிருப்பதற்காக மங்களாஶாஸநம் செய்கிறார்கள். படுக்கையாகப் படுக்கப் பட்டு, எம்பெருமான் தன் மீது சயனித்துக் கொண்டிருப்பதால் உண்டான மகிழ்ச்சியினால், விரிந்த படங்களை உடையவனும், படுக்கைக்குத்

மென்மை, குளிர்த்தி, நாற்றம் என்கிறவற்றை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிற அழகுக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிறோம். ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனையும் மயங்கப் பண்ணும் படுக்கை. அவன் ஸ்வஸ்பர்ஶத்தாலே விக்ருதனாகப் பண்ணும். இவனுடைய வடிவும் அவனுடைய வடிவும், 'கிடந்ததோர் கிடக்கை' என்கிறபடியே பரிச்சே₂தி₃க்க வொண்ணாத அழகிறே. கண் வளர்ந்தருளுகிறபோதை அழகு ஒரு வெள்ளிமலையிலே காளமேகம் சாய்ந்தாற்போலே கண்வளர்ந்தருளுகிற

---

இருக்க வேண்டிய தன்மைகளான மென்மை, குளிர்ச்சி, வாசனை முதலிய தன்மைகளை இயற்கையாகவே கொண்டிருப்பவனு மான திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிற அழகுக்கு மங்களாஶாஸனம் செய்கிறோம். இயற்கையாகவே எல்லாம் அறிந்தவனான எம்பெருமானையும் மயங்கச் செய்யும் படுக்கை அன்றோ திருவனந்தாழ்வான்! எம்பெருமான் தன்னுடைய ஸ்பர்சத்தால், திருவனந்தாழ்வானை மலரச் செய்வான். இவனுடைய வடிவும் அவனுடைய வடிவும் 'கிடந்ததோர் கிடக்கை' (திருமாலை-23) என்கிறபடி அளவிடமுடியாத அழகன்றோ! ஒரு வெள்ளி மலையில், கரிய மேகம் படிந்திருப்பதுபோல், வெளுத்த திருமேனியுடைய திருவனந்தாழ்வான் மீது கரிய நிறமுடைய எம்பெருமான் சயனித்திருக்கும் அழகின் பகைத்தொடை (வெண்மையும் கருமையும் கலந்த contrast) அழகை நினைத்தால்,

போதை பரபாக(ரஸ)த்தை அநுஸந்தித்தால் மங்க₃ளாஶாஸநம் ஒழியச் செல்லுமோ? என்கிறார்கள்.

பத்தாம்பாட்டு. (எங்ஙாளித்யாதி) கீழிற்பாட்டில் புகுந்த அநந்யப்ரயோஜநர், தே₃ஹயாத்ரையிலும் தங்கள் பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்கிற ஏற்றத்தைச் சொல்லிக் கொண்டு புகுந்தார்கள்; இதில், ப்ரயோஜநாந்தரபரர் புகுருகிறார்களாகையாலே, தங்கள் பக்கல் அங்ஙன் இருப்பதோர் ஏற்றம் காண விரகில்லாமையாலே, ப₄க₃வத் ப்ரப₄ாவத்தால் தங்களுக்குப் பிறந்த ஏற்றத்தைச் சொல்லிக் கொண்டு வந்து புகுருகிறார்கள். ஐஶ்வர்யார்த்தி₂யும் ஸங்க₃தனாகிறபோது 'சாந்தமும் தந்தென்னை வெள்ளுயிர் ஆக்கவல்ல' என்று ப₄க₃வத் ப்ரப₄ாவத்தைச் சொல்லிக் கொண்டு வந்திறே புகுந்தது. அவன்றான் 'நான்

---

மங்களாஶாஸனம் செய்வதைத் தவிர வேறு ஒன்று தோன்றுமோ? என்கிறார்கள்.

பத்தாம் பாட்டு. கீழ்ப்பாசுரத்தில் வந்து சேர்ந்த அநந்யப்ரயோஜனர்கள், எம்பெருமானுக்கே ஆட்பட்டிருக்கும் தங்களுடைய பெருமையைச் சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். இப்பாசுரத்தில் வந்து சேருபவர்கள் பிற பயன்களை (கைவல்யத்தை) விரும்புபவர்களாகையால், தங்களிடம் அப்படிப் பட்ட பெருமை எதுவும் கூறிக்கொள்ள வழி இல்லாமையால், எம்பெருமானுடைய அருளால் தங்களுக்கு ஏற்பட்ட பெருமையைக் கூறிக்கொண்டு வந்து சேருகிறார்கள். ஐஶ்வர்யார்த்தியும் வந்து சேருகிற பொழுது 'சாந்தமும் தந்து என்னை வெள்ளுயிராக்க வல்ல' என்று எம்பெருமானுடைய பெருமையைக் கூறிக்கொண்டன்றோ வந்து

அபேக்ஷித்த க்ஷுத்$_3$ர புருஷார்த்த$_2$த்தைத் தந்துவைத்து என்னை ஶுத்$_3$த$_4$ஸ்வப$_4$ாவன் ஆக்கினான்' என்று ஆஶ்சர்யப் பட்டான்; கைவல்யார்த்தி$_2$கள், தங்கள் க்ஷுத்$_3$ரபுருஷார்த்த$_2$ ஸம்ப$_3$ந்த$_4$ம் யாவதா$_3$த்மபா$_4$வி விநாஶகரமாகையாலே ஆஶ்ரயண வேளையிலே மீட்ட ஆஶ்சர்யத்தைக் கொண்டாடுகிறார்கள்.

---

சேர்ந்தான். 'நான் விரும்பிய பயன் மிகவும் தாழ்ந்ததாக இருந்தபோதும், அதையும் தந்து என்னை சுத்தமான தன்மை உடையவனாக ஆக்கினான் எம்பெருமான்' என்று அவன் வியப்படைந்தான். கைவல்யார்த்திகள், தாங்கள் விரும்பிய தாழ்ந்த பயனாகிய கைவல்யத்துடன் தொடர்பு ஏற்பட்டால் அது ஆத்மா உள்ளவளவும் (நிரந்தரமாக) அழிவையே ஏற்படுத்தி விடுமாதலால், எம்பெருமானைச் சென்றடைந்தபோது கைவல்யத்தைத் தவிர்த்துத் தங்களை மீட்ட ஆச்சர்யத்தைக் கொண்டாடுகிறார்கள்.

எந்நாளெம்பெருமான்
உன்றனடிக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே*அடியோங்கள் அடிக்குடில்
வீடுபெற்றுய்ந்ததுகாண்*
செந்நாள்தோற்றித்
திருமதுரையுள்சிலைகுனித்து*ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே
உன்னைப்பல்லாண்டுகூறுதுமே. 10

எம்பெருமான் - எங்களுக்கு ஸ்வாமியானவனே!
உன் தனக்கு அடியோம் என்று - உனக்கு அடிமைப்பட்டவர்கள் நாங்கள் என்று.

| | |
|---|---|
| எழுத்துப் பட்ட | - அடிமை ஓலை எழுதிக்கொடுத்த . |
| எந்நாள் | - நாள் எதுவோ, |
| அந்நாளே | - அந்த நாளிலேயே |
| அடியோங்கள் | - அடியவர்களான எங்களுடைய, |
| குடில் | - வீட்டிலுள்ள குடும்பமெல்லாம் |
| அடி | - அடிமைப்பட்டதாய், |
| வீடு பெற்று | - கைவல்யத்திலிருந்து விடுதலை பெற்று, |
| உய்ந்தது | - உய்வு பெற்றது; |
| செம் நாள் | - அழகியதான திருநாளிலே, |
| தோற்றி | - திருவவதாரம் செய்து, |
| திரு மதுரையுள் | - அழகிய வடமதுரையில், |
| சிலை குனித்து | - கம்ஸனுடைய வில்லை முறித்து, |
| ஐந்தலைய | - ஐந்து தலைகளை உடையதாய், |
| பை | - பரந்த படங்களையுமுடையதான, |
| நாகம் | - காளியனென்னும் நாகத்தின், |
| தலை | - தலையின்மேல், |
| பாய்ந்தவனே | - ஏறிக்குதித்தருளினவனே! |
| உன்னை | - உனக்கு, |
| பல்லாண்டு கூறுதும் | - மங்களாசாஸனம் செய்வோம். |

**(எங்நாள்) 'அங்நாள்' என்ன அமைங்திருக்க, 'எங்நாள்' என்கிறது, வகுத்த ஶேஷிபக்கலிலே க்ஷுத்ர புருஷார்த்தத்தை அபேக்ஷித்த காலமாயிருக்கச்செய்தேயும்,**

---

*(எந்நாள்)* 'அந்நாள்' என்றதுவே போதுமாயிருக்க, 'எந்நாள்' என்றும் கூறியது, வகுத்த தலைவனான எம்பெருமானிடத்தில் சென்று, தாழ்ந்த பயனாகிய கைவல்யத்தை விரும்பிய நாளாக இருக்கச் செய்தேயும், தங்களை மங்களாஶாஸநம்

ஸுப்ரபதா ச மே நிசா (ஸுப்ரப₄ாதா ச மே நிஶா) என்கிற படியே மங்க₃ளாஶாஸநம் பண்ணுகைக்கு யோக்₃யாம்படி புகுர நிறுத்தின தி₃வஸமென்று அந்நாளைக் கொண்டாடுகிறார்கள். ப₄க₃வத்ப்ரப₄ாவந்தான், விஷயீகரித்த தி₃வஸத்தையும் கொண்டாடும்படியா யிருக்குமிறே. அவதாரத்திலேற்றம் சொல்லுகிறவளவில் தஜ்ஜந்ம தி₃வஸமென்று அந்நாளும் கொண்டாடப் பட்டதிறே. ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்து வந்தவன், அது ஒழிந்து அநந்யப்ரயோஜநனாகைக்கு அடியென்? என்னில், (எம்பெருமான்) க்ஷுத்₃ர ப்ரயோஜநத்தை

---

செய்வதற்குத் தகுதி உள்ளவர்களாக ஆக்கிய நாளாகையால், "**அத்₃யமே ஸப₂லம் ஜந்ம ஸுப்ரப₄ாதாச மே நிஶா யது₃ந்நித்ராப்₃ஜ பத்ராக்ஷம் விஷ்ணோர் த்₃ரக்ஷ்யாமி அஹம் முக₂ம்**" (இன்றே என் பிறவி பயனடைந்தது. இன்றே என் இரவு நன்றாக விடிந்தது. மலர்ந்த தாமரை இதழ்போன்ற கண்ணையுடைய விஷ்ணுவின் முகத்தை (இன்று) நான் காணப் போகிறேன் அன்றோ!) (வி.பு.5-17-3) என்று அக்ரூரன் கொண்டாடியது போல், நாளைக் கொண்டாடு கிறார்கள். பகவானுடைய பெருமையானது அவன் அருள்செய்த நாளையும் கொண்டாடும்படியாக அன்றோ இருப்பது! அவனு டைய அவதாரத்தின் பெருமை காரணமாக அவன் அவதரித்த நாளும் கொண்டாடப்படுகின்றதன்றோ! வேறுபயன்களை விரும்பிவந்தவன், அவற்றை வெறுத்து அநந்ய ப்ரயோஜனன் ஆவதற்குக் காரணம் என்ன என்னில், **(எம்பெருமான்)** தாழ்ந்த பயனாகிய கைவல்யத்தை

அபேக்ஷித்து நிருபாதி₄க ஶேஷியான உன்பக்கலிலே வருகையாலே ஸ்வரூபப்ராப்தமாய் வந்த ஶேஷத்வமே ப₂லித்துவிட்டது. வகுத்த ஶேஷியானாலும் அபேக்ஷிதங்களையொழிய புருஷார்த்தா₂ந்தரங்களைக் கொடுக்கும்போது, அர்த்தி₂ பக்கலிலே ஒரு கைம்முதல் வேண்டாவோ? என்னில், (உன்றனக்கு அடியோம் என்று எழுத்துப்பட்ட) 'அடியோம்' என்கிற அர்த்த₂த்துக்கு வாசகமான ஶப்₃த₃த்திலே எங்களுக்கு அந்வயமுண்டு: நெஞ்சிலின்றிக்கே இருக்கிலும் வாயிலுண்டான மாத்ரம் கொண்டு தரவல்ல ஶக்தியுண்டிறே உனக்கு. அடிமைக்கு வாசகமான ஶப்₃த₃ம் கைவல்யார்த்தி₂யுடைய உபாஸநத்திலே உண்டிறே. ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्

---

விரும்பினாலும், அதைப் பெறுவதற்காக வகுத்த தலைவனான உன்னிடத்தில் வந்ததால், ஆத்மாவின் இயற்கைத் தன்மையான ஶேஷத்வமே பலித்து விட்டது. எம்பெருமான் வகுத்த தலைவனாயினும், இவன் கேட்டதைத் தவிர வேறொன்றைத் தரும்போது, கேட்பவனிடத்திலும் ஒரு கைம்முதல் வேண்டாமோ எனில், (**உன்றனக்கு அடியோம் என்று எழுத்துப் பட்ட**) 'அடியோம்' என்கிற பொருளைத் தெரிவிக்கின்ற சொல்லில் மட்டுமே எங்களுக்குத் தொடர்பு உண்டு. (அதன் பொருளில் இல்லை.) நெஞ்சில் இல்லாவிட்டாலும் வாயில் 'அடியோம்' என்ற சொல் உண்டான மட்டிலே பயனைத் தரவல்ல சக்தி உனக்கு உண்டன்றோ! அடியோம் என்ற சொல்லைக் கைவல்யார்த்தி கூறுவனோ என்றால், அவன் உபாஸனை செய்யும் போது கூறும் மந்திரம் '**ஓமித்யேகாக்ஷரம் ப்₃ரஹ்ம**

ஸாமநுஸ்மரந் (ஓமித்யேகாக்ஷரம் ப்₃ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்) என்னக் கடவதிறே. அத₂வா, ஆரேனும் பக்கலிலே ஏதேனும் ஒன்றை வேண்டிச் செல்லிலும் நமஶ்ஶப்₃த₃ ப்ரயோக₃ம் பண்ணக்கடவதாயிறே இருப்பது; அதுவும் ஆத்மயாத₂ாத்ம்ய வாசகமிறே. அதுவே எங்கள் பக்கல் கைமுதலென்கிறார்கள். 'எம்பெருமான்' என்கிற ப்ராப்தியாலும், 'உன்றனக்கு' என்கிற ஶக்தியாலும், 'எழுத்துப்பட்ட' என்கிற ஶப்₃த₃மாத்ரத்தாலும் ப₂லிக்கக் கண்டோம் என்கிறார்கள். 'பட்ட' என்கிறது, 'முத்துப்

---

*வ்யாஹரந் மாமநுஸ்மரந்'* (ப்ரஹ்மத்திற்கு வாசகமான ஓம் என்ற ஓரெழுத்தை உச்சரித்துக் கொண்டு) (கீதை 8-13) என்று கூறப்பட்டுள்ளபடி 'ஓம்' என்ற ப்ரணவமாகும். ('பகவானுக்கே ஜீவாத்மா அடிமைப் பட்டவன்' எனும் பொருளுள்ளது ப்ரணவம். எனவே அடிமைக்கு வாசகமான சொல்லை கைவல்யார்த்தியும் கூறுகிறான்.) அல்லது, யாரிடத்திலேனும் ஏதேனும் ஒன்றை வேண்டிச் செல்பவனும் நம: என்ற சொல்லைக் கூறியே ஆகவேண்டும். அதுவும் ஆத்மாவின் உண்மைத் தன்மையான அடிமையைத் தெரிவிக்கும் சொல்லேயாகும். அந்த சொல்லைச் சொன்னதுவே எங்களிடத்தில் உள்ள கைமுதல் என்கிறார்கள். 'எம்பெருமான்' என்றதனால் அவனோடு தங்களுக்கு உண்டான உறவுமுறை கூறப்பட்டது. 'உன்றனக்கு' என்றதால் அவனுடைய வல்லமை கூறப்பட்டது. இப்படிப்பட்டவனுக்கு 'எழுத்துப்பட்ட' என்ற சொல்லைக் கூறியதால் தாங்கள் விரும்பிய பயன் கிடைத்து விட்டது

பட்ட’ என்கிறாப்போலே. ‘வாழாட்பட்டு’ என்கிற இடத்திலே அர்த்தத்தினுடைய து3ர்லப4த்வம் சொல்லிற்று; வாசக சப்3த3த்தினுடைய து3ர்லப4த்வம் சொல்லுகிறது இங்கு. அஹங்கார க்3ரஸ்தமான ஸம்ஸாரத்துக்குள்ளே தா3ஸ்ய ப்ரகாஶம் அலப்4யலாப4மானாற்போலே, ப3ஹுஜல்பம் பண்ணிப் போருகிற வாயிலே நமஶ் ஶப்3த3முண்டாகை அலப்4ய லாப4மிறே. (அந்நாள்) ‘எம்பெருமான் உன்றனக்கு அடியோமென்று எழுத்துப் பட்ட நாள், எந்நாள் அந்நாள்’ என்றந்வயம், ‘அந்நாளே’ என்கிற அவதா4ரணத்தாலே, அதொழிய எங்கள் பக்கல் ஆநுகூல்யலேஶமும் இல்லை என்று கருத்து. அத்தால் பெற்றதென்? என்ன; தாங்கள் பெற்ற ப்ரயோஜந

---

என்கிறார்கள். ‘பட்ட’ என்பது ‘முத்துப்பட்ட’ என்பது போல் கிடைப்பது மிகவும் அரிது என்ற கருத்தில் கூறப்படுகிறது. ‘வாழாள்பட்டு’ என்கிறவிடத்தில், உண்மையில் வாழவேண்டும் என்றிருப்பவர்கள் கிடைப்பது அரிது என்று அர்த்தத்தில் உள்ள அருமை சொல்லப்பட்டது. இங்கு சொல்லைக் கூறுவதும் அருமை என்பது கூறப்படுகிறது. அஹங்காரத்தில் மூழ்கியிருக்கிற இவ்வுலகில், அடிமைத் தன்மையைக் கூறுபவர்கள் கிடைப்பது அரிதானாற்போல, பற்பலவற்றையும் பிதற்றிக் கொண்டு திரிபவர்கள் வாயில் நம: என்ற சொல் வருவது மிகமிக அரிதாகும். **(அந்நாள்)** ‘எம்பெருமான்! உன்றனக்கு அடியோம் என்று எழுத்துப் பட்ட நாள் எந்நாள் - அந்நாள் என்று அந்வயம். **‘அந்நாளே’** என்ற ஏகாரத்தால், அந்த ஒன்றைத்தவிர எங்களிடத்தில் வேறொரு கைமுதலும் இல்லை என்ற கருத்து தெரிவிக்கப்படுகிறது.

பரம்பரைகளைச் சொல்லுகிறார்கள். (அடியோங்கள் இத்யாதி) அடியோங்களாகப் பெற்றோம்; உஜ்ஜீவிக்கப் பெற்றோம். குடிலும் அடிக் குடிலாகப் பெற்றது; வீட்டை லபி₄க்கப்பெற்றோம்; உஜ்ஜீவிக்கப்பெற்றோம். (அடியோங்கள்) என்கிறார்கள் - அஹங்காரக்₃ரஸ்தரா₂ய் தத₃நுகூலமான க்ஷுத்₃ர புருஷார்த்த₂த்தை அபேக்ஷித்து உன் திருவடிகளிலே வந்து ஒதுங்கின நாங்கள், அது போய் தா₃ஸ்யைகரஸராகப் பெற்றோம். (அடிக்குடில்) 'குடில்' என்று க்₃ருஹம். அத்தாலே, க்₃ருஹஸ்த₂ரான புத்ர பௌத்ராதி₃களும் அடியாராகப் பெற்றோம். 'நல்லபதத்தால் மனைவாழ்வர்' என்னக்கடவதிறே.

---

இதனால் கிடைத்த பயன் என்ன எனில், தாங்கள் பெற்ற பயன்களைக் கூறுகிறார்கள். (**அடியோங்கள் அடிக்குடில்**) அடியோங்களாகப் பெற்றோம். உய்வு பெற்றோம். எங்களுடைய குடிலும் அடிக் குடிலாகப் பெற்றது. விடுகையை அடைய (செய்ய)ப் பெற்றோம். (**அடியோங்கள்**) அகங்காரம் மேலிட்டு, அதற்கேற்பத் தாழ்ந்த பயனாகிய கைவல்யத்தை விரும்பி உன் திருவடிகளில் வந்து ஒதுங்கிய நாங்கள் இன்று அது தொலையப் பெற்று அடிமைத்தன்மையின் சுவை அறிந்தவர்களாக ஆகப் பெற்றோம் என்பதனைத் தெரிவிக்கும் வண்ணம் அடியோங்கள் என்கிறார்கள். (**அடிக் குடில்**) குடில் என்பது வீடு. அதனால், வீட்டிலுள்ளவர்களான பிள்ளை பேரர்களும் அடியவர்களாகப் பெற்றோம். 'நல்ல பதத்தால் மனை வாழ்வர் கொண்டபெண்டிர் மக்களே' (திருவாய். 8-10-11) என்று நம்மாழ்வாரும் அருளிச் செய்துள்ளார் அன்றோ! 'அடியோம்' என்று

எழுத்துப் பட்டது தங்கள் அளவிலேயாகில் புத்ர பௌத்ராதி$_3$களளவில் ஸ்வரூப ஜ்ஞாநம் பிறந்தபடியென்? என்னில்; முத்துப்பட்ட துறையைக் காவலிடுமவன் அசல் துறையையும் காவலிடுமா போலே, ஸம்ப$_3$ந்தி$_4$ ஸம்ப$_3$ந்தி$_4$களளவும் அஹங்கார மமகாரங்கள் புகுராதபடி விஷயீகரித்தானென்கை. இவர்கள் ஸங்க$_3$தராகிற பாட்டிலும், 'குடிகுடியாட்செய்கின்றோம்' என்றார்களிறே. ஶேஷிஸந்நிதி$_3$யிலே ஶேஷபூ$_4$தர் க்$_4$ருஹத்தை 'குடில் வளைக்க' என்று சொல்லக்கடவதிறே. (வீடுபெற்று) வீட்டை லபி$_4$த்து. அதாகிறது: அஹங்கார மமகார கார்யமான ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற த்யாஜ்யங்களை விடப் பெற்று.

---

எழுத்துப் பட்டது தாங்கள் மட்டுமேயாயிருக்க, அதைச் செய்யாத பிள்ளை பேரர்களுக்கும் உண்மையறிவு ஏற்பட்டது எங்ஙனம்? எனில், ஒரு துறையில் முத்து கிடைத்தால், அதைச் சுற்றியுள்ள துறைகளிலும் முத்து கிடைக்கும் என்று அவற்றிற்கும் காவல் இடுவதுபோல் தங்களோடு தொடர்புள்ள அனைவருக்கும் அகங்கார மமகாரங்கள் ஏற்படாத வண்ணம் அருள்புரிந்தான் என்கிறார்கள். இவர்கள் வந்து சேர்ந்த 'தீயிற் பொலிகின்ற' என்ற பாசுரத்திலும், 'குடிகுடி ஆட் செய்கின்றோம்' என்று கூறினார்களன்றோ! எஜமானன் முன்னே அடியவர்கள் தங்களுடைய வீட்டை 'குடில் வளைக்க' என்றுதான் கூறுவார்கள். (வீடு பெற்று) வீட்டை (விடுகையை) அடையப் பெற்று. அதாவது அகங்கார மமகாரங்களால் உண்டாகும் ஐஶ்வர்யம், கைவல்யம் முதலிய தாழ்ந்த பயன்களை

ப்ராப்யஸித்$_3$தி$_4$யோபாதி த்யாக$_3$ஸித்$_3$தி$_4$யும் ப்ராப்யாந்தர்க்க$_3$தமிறே. (உய்ந்தது காண்) தா$_3$ஸ்யம் என்றும் உஜ்ஜீவநம் என்றும் பர்யாயம் போலே காணும். 'உய்ந்தது காண்' என்று அறியாதாரை அறிவிப்பாரைப் போலே சொல்லுகிற இதுக்குக் கருத்தென்? என்னில், "உபகரித்து விஸ்மரித்துப்போவது நீ; நீ பண்ணின உபகாரம் நாங்கள் உபதே$_3$ஶிக்கக் கேளாய்" என்கிறார்கள்.

(செங்நாளித்யாதி) ப்ரயோஜநாந்தரங்களைக் கைவிட்டு அநந்யப்ரயோஜநரானிகோளாகில் இனி க்ருத்யமென்? என்னில்; உனக்கு மங்க$_3$ளாஶாஸநம்

---

விடப்பெற்று. அடையப்படும் பயன் போலவே தாழ்ந்த பயன்களை விடுகை என்பதும் அடைய வேண்டியவற்றுள் அடங்கும். (உய்ந்தது காண்) அடிமை என்பதும், உய்வு என்பதும் ஒரே பொருளுடைய வெவ்வேறு சொற்கள் போலும். 'உய்ந்தது காண்' என்று அறியாதவர்களுக்குத் தெரிவிப்பதைப் போல எம்பெருமானையே நோக்கி (காண் என்று) கூறுகின்ற இதற்குக் கருத்து என்ன எனில், 'உபகாரம் செய்துவிட்டு அதை மறந்து விடுபவன் நீ; நீ செய்த உபகாரத்தை நாங்கள் உனக்கு உபதேசிக்க நீ கேள்' என்று அவனையே நோக்கிக் கூறுகிறார்கள்.

**(செந்நாள் தோற்றி)** 'வேறுபயன்களைக் கேட்பதை விட்டு, எம்பெருமானைப் பற்றுவதையே பயனாகக் கொண்டு விட்டீர்கள் என்றால், இனி நீங்கள் செய்யப் போவது என்ன?' எனில், உனக்கு மங்களாஶாஸனம் செய்வதே எங்களுடைய செயல்

பண்ணுகையே க்ருத்யமென்கிறார்கள்; விஷயமேது என்ன,(செங்நாள்) அவதாரத்துக்கு ஏகாந்தமான நாளாகையாலே, அழகிய நாளென்கிறார்கள். (தோற்றி) அதீந்த்ரியமான விக்₃ரஹத்தை सकलमनुजनयनविषयतां गतः (ஸகலமநுஜநயந விஷயதாம் க₃த:) என்கிறபடியே உகவாதார் கண்ணுக்கும் விஷயமாம்படி தோற்றுவித்து. (திருமதுரையுள்) அதுதானும் நிர்ப்ப₃யமான அயோத்₄யையிலன்றிக்கே, ஶத்ருவான கம்ஸன் வர்த்திக்கிற ஊரிலே. (சிலைகுனித்து) அவ்வூரில் தங்கவொண்ணாமை யாலே திருவாய்ப்பாடியிலே போய் மறைய வளருகிற நீ, மறித்தும் அவ்வூரில் புகுந்து

---

என்கிறார்கள். 'எந்தச் செயலுக்கு மங்களாஶாஸநம் செய்யப் போகிறீர்கள்?' எனில், *(செந்நாள்)* நீ அவதரித்த நாளைக் கொண்டாடப் போகிறோம் என்கிறார்கள். அவனுடைய அவதாரத்திற்கு என்று ஏற்பட்ட நாள் ஆகையால் செந்நாள் - அழகிய நாள் என்கிறார்கள். **(தோற்றி)** இந்திரியங்களுக்குப் புலப்படாத உன்னுடைய திருமேனியை **"ஸகல மநுஜ நயந விஷயதாம் க₃த:"** *(கீதா பாஷ்யம் அவதாரிகை) (எல்லா மனிதர்களுடைய கண்ணுக்கும் இலக்கானான்)* என்று கூறப்பட்டுள்ளபடி, தன்னை விரும்பாதவர்கள் கண்களுக்கும் இலக்காம்படி தன்னைத் தோற்றுவித்து. **(திருமதுரையுள்)** அதுவும் பயமேதும் இல்லாத அயோத்யையில் அன்று; எதிரியான கம்ஸன் இருக்கும் ஊரான மதுரையில். **(சிலை குனித்து)** அவ்வூரில் தங்க முடியாமையால் திருவாய்ப்பாடியில் மறைந்து வளர்ந்த நீ மீண்டும் மதுரையில் புகுந்து, கம்ஸனுடைய ஆயுத சாலைக்குச்

கம்ஸனுடைய ஆயுத$_3$ சாலையிலே புக்கு வில்லை முறித்துப் பூசலை விளைத்தாய். அநுகூலரடைய 'என்வருகிறதோ!' என்று வயிறுபிடிக்க வேண்டும்படியான த$_3$ஶையிலே கம்ஸனுக்கு மறம் பிறக்கும்படி சிலுகுபடுத்துவதே!

(ஐந்தலைய இத்யாதி) அதுகிடக்க, நிர்ப்ப$_4$யமாய் வர்த்திக்கிற காலத்திலே பிறந்த ப்ரமாத$_3$மே போராதோ வயிறெரிகைக்கு? என்கிறார்கள். (ஐந்தலைய பைங்நாகத் தலைப் பாய்ந்தவனே) கடிக்கைக்கு அஞ்சு வாயை உடைத்தாய், க்ரோத$_4$த்தாலே விஸ்த்ருதமான ப$_2$ணத்தை உடைத்தான ஸர்ப்பாஸ்யத்திலேயன்றோ புக்கது. एकदा तु विना रामं कृष्णो बृन्दावनं ययौ (ஏகத$_3$ா து விநா ராமம்

---

சென்று வில்லை முறித்துப் போரை விளைவித்தாய். அனுகூலர்கள் அனைவரும் 'கண்ணனுக்கு என்ன ஆகுமோ!' என்று வயிறுபிடிக்க வேண்டும்படியான வேளையில், கம்ஸனுக்குக் கோபம் வரும்படி போர்செய்வதே!

**(ஐந்தலைய பைந்நாகத் தலைப்பாயந்தவனே)** அதுகிடக்கட்டும். அச்சமின்றித் திருவாய்ப்பாடியில் இருந்த நாளில் ஏற்பட்ட அமர்க்களம் போதாதோ, உனக்கு என் வருமோ என்று வயிறெரிவதற்கு என்கிறார்கள். **(ஐந்தலைய பைந்நாகத் தலைப் பாய்ந்தவனே!)** உன்னைக் கடிப்பதற்கு ஐந்து வாய்களை உடையதும், கோபத்தினால் விரிந்த படங்களை உடையதுமான பாம்பின் வாயிலே அன்றோ நீ புகுந்தது? **"ஏகத$_3$ா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்$_3$ருந்த$_3$ாவநம் யயௌ"** (வி.பு.5.7.1) (ஒருநாள் பலராமன் இல்லாமலே கண்ணன்

க்ருஷ்ணோ ப்$_3$ருந்த$_3$ாவநம் யயௌ) என்று, தமையன் ஒருநாள் பேரநிற்க, பாம்பின் வாயிலே புகும்படியிறே தீம்பு. "க்ருஷ்ணாவதாரம் என்றால், ஆழ்வார்கள் எல்லாரும் ஒக்கப் பரிவராயிருப்பர் கள்; இதுக்கடியென்?" என்று சீயர் ப$_4$ட்டரைக் கேட்க; "ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய், குணாதி$_4$கருமாய், பிதா ஸம்ப$_3$ராந்த$_4$கனுமாய், மந்த்ரிகள் வஸிஷ்ட$_2$ாதி$_3$களுமாய், ஊர் அயோத்$_4$யையுமாய், காலம் நல்லகாலமுமாய் இருக்கையாலே அங்குத்தைக்கு ஒரு ப$_4$யமுமில்லை; இங்கு, வந்து பிறந்த

---

பிருந்தாவனம் சென்றான்) என்று கூறியுள்ளபடி, அண்ணனான பலராமன் ஒருநாள் உடன் வராவிட்டால், பாம்பின் வாயில் புகும்படி அன்றோ கண்ணனுடைய தீம்பு! (இங்குக் கண்ணனிடம் மிகவும் பரிவு கொண்டு பெரியாழ்வார் பல்லாண்டு பாடுவதைக் கருத்தில் கொண்டு நஞ்சீயர் கேட்ட கேள்வியும் அதற்கு பட்டர் அளித்த விடையும் எடுத்துக் கூறப்படுகிறது.) "கிருஷ்ணாவதாரம் என்றால் ஆழ்வார்கள் அனைவரும் மிகவும் பரிவு கொள்கிறார்களே! (ராமாவதாரத்தில் அவ்வளவு பரிவு கொண்டதாகத் தெரியவில்லையே!) என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்டார். அதற்கு பட்டர், "ராமாவதாரத்தில் பிள்ளைகள் நால்வரும் வலிமை உடையவர்கள்; நல்ல குணம் மிக்கவர்கள்; தகப்பனான தசரதன் சம்பராசுரனையும் அழித்த பெருவீரன்; அங்கு மந்த்ரிகளோ வசிஷ்டர் முதலிய ப்ரம்ம ரிஷிகள். ஊர் பகைவர்கள் புகமுடியாத பட்டணமான அயோத்யை. காலமும் நல்ல காலமான த்ரேதாயுகம். இப்படி அவ்வவதாரத்தில்

இடம் ஶத்ரு க்₃ருஹமாய், கம்ஸன் இடம் பார்த்து நலியும் து₃ஷ்ப்ரக்ருதிகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், தமப்பன் இடையனுமாய், ஊர் இடைச்சேரியுமாய், பிள்ளைகள் தாங்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்தோடு தோள் தீண்டியாயிருக்கையாலே என் வருகிறதோ என்று பரிகைக்கு ஆழ்வார்கள் அல்லதில்லை காணும்" என்று அருளிச் செய்தார்.(உன்னைப் பல்லாண்டு கூறுதுமே) இப்படிப் பட்ட உன்னை அநுஸந்தித்தால் மங்க₃ளாஶாஸநம் ஒழியத் த₄ரிக்க விரகுண்டோ? என்கிறார்கள்.

---

எல்லாமே நல்லபடியாக, பாதுகாப்பாக அமைந்திருந்தது. ஆனால் கிருஷ்ணாவதாரத்திலோ எல்லாம் தலை கீழாகவன்றோ உள்ளது! கண்ணன் பிறந்தது எதிரியினுடைய இடத்தில். கம்ஸன் சமயம் பார்த்துத் தீங்கு விளைக்கக்கூடிய அசுரர்களை அனுப்புமளவுக்குக் கொடியவன். தகப்பனான நந்தகோபன் சாது இடையன். ஊரோ அப்பாவிகளான இடையர்கள் வாழும் இடைச்சேரி. பிள்ளைகளோ மிகவும் தீம்பர்கள். காலமும் தீமைகள் தலைவிரித்தாடுகின்ற கலிகாலத்திற்கு மிகவும் நெருங்கி இருக்கக் கூடிய த்வாபர யுகத்தின் கடைசிக் காலம். இப்படி எல்லாமே கிருஷ்ணாவதாரத்தில் பயத்தை விளைவிப்பதாகவே இருக்கின்றபடியால், (ராமாவதாரத்தைவிட) கிருஷ்ணாவதாரத்திலேயே ஆழ்வர்கள் மிகவும் பரிவு கொள்கிறார்கள்" என்றருளிச் செய்தார். (**உன்னைப் பல்லாண்டு கூறுதும்**) இப்படிப் பட்ட உன்னை நினைத்தால், மங்களாஶாஸனம் செய்வதைத் தவிர தரித்திருப்ப தற்கு வேறு வழியுண்டோ? என்கிறார்கள்.

**பதினோராம்பாட்டு. (அல்வழக்கித்யாதி) அண்டக் குலத்திலே ஆஹூதராய், 'நெய்யிடை' என்கிற பாட்டிலே ஸங்க₃தரான ஐய்ஶ்வர்யார்த்தி₂கள் பாசுரத்தாலே திருப்பல்லாண்டு பாடுகிறார்.**

---

பதினோராம் பாட்டு. (அல்வழக்கு இத்யாதி) 'அண்டக்குலத்துக்கு' என்கிற ஐந்தாம் பாசுரத்தில் அழைக்கப்பட்டு 'நெய்யிடை' என்கிற எட்டாம் பாசுரத்தில் வந்து சேர்ந்தவர்களான ஐய்ஶ்வர்யார்த்திகள் கூறுவதாகத் திருப்பல்லாண்டு பாடுகிறார்.

அல்வழக்கொன்றுமில்லா
அணிகோட்டியர்கோன்* அபிமானதுங்கன்
செல்வனைப்போல
திருமாலேநானுமுனக்குப்பழவடியேன்*
நல்வகையால்நமோநாராயணாவென்று
நாமம்பலபரவி*
பல்வகையாலும்பவித்திரனே
உன்னைப்பல்லாண்டுகூறுவனே. 11.

திருமாலே - திருமகள் கேள்வனே!
அல்வழக்கு - தவறான வழக்குகள்.
ஒன்றும் இல்லா - சிறிதும் இல்லாதவராய்.
அணி - (உலகுக்கு) அணிகலனான.
கோட்டியர் - திருக்கோட்டியூரில் உள்ளவர்களுக்கு.
கோன் - தலைவராய்.
அபிமானதுங்கன் - "நான் பகவானுக்கு அடியவன்" எனும் அபிமானத்தில் உயர்ந்த
செல்வனைப்போல - செல்வநம்பியைப்போல.
நானும் - அடியேனும்.

உனக்கு - ஸ்வாமியான உனக்கு,
பழ அடியேன் - பழமையான அடியவன்;
பல்வகையாலும் - பல வகைகளாலும்
பவித்திரனே - பாபத்தைப் போக்குபவனே!
நல் வகையால் - அழகிய வகையில்,
நமோ நாராயணா என்று - திருமந்திரத்தை அனுஸந்தித்து
பல நாமம் - உன் பல திருநாமங்களையும்
பரவி - முறையில்லாமல் சொல்லி,
உன்னைப் பல்லாண்டு கூறுவன் - உனக்கு மங்க$_3$ளாசாஸனம் செய்வேன்.

**(அல்வழக்கு ஒன்றும் இல்லா) வழக்கல்லாதவை அநேகமிறே; தே$_3$ஹத்தில் ஆத்மபு$_3$த்$_3$தி$_4$ பண்ணுகை வழக்கல்ல; ப்ரக்ருதே:பரமான ஆத்மவஸ்துவை ஸ்வதந்த்ரம் என்று அநுஸந்தி$_3$க்கை வழக்கல்ல; தே$_3$வதாந்தரங்களில் பரத்வபு$_3$த்$_3$தி$_4$ பண்ணுகை வழக்கல்ல; ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ஜநத்துக்கு ப$_2$லம் ப்ரயோஜநாந்தரம் என்றிருக்கை வழக்கல்ல; அநந்ய ப்ரயோஜநனானாலும் உபாயாந்தர ஸாத்$_3$யமென்றிருக்கை வழக்கல்ல;**

---

*(அல்வழக்கு ஒன்றும் இல்லா) வழக்கு அல்லாதவை பல உள்ளன. உடலையே ஆத்மா என்று நினைப்பது வழக்கல்ல; ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதான ஆத்மாவை சுதந்திரம் என்று நினைப்பது வழக்கல்ல. பிற தேவதைகளை பரதேவதைகளாக எண்ணுவது வழக்கல்ல. பகவானைப் போற்றுவதற்கு வேறு பயன்களைப் பெற நினைப்பது வழக்கல்ல. வேறு பயன்களைக் கருதாதவனாயினும் பிற உபாயங்களால் எம்பெருமானைப் பெற நினைப்பது வழக்கல்ல. பகவானை அனுபவிப்பதையும் தனக்காக என்று*

ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வத்தை 'மமேத$_3$ம்' என்றிருக்கை வழக்கல்ல; இனி, வழக்காவது ஶேஷிக்கு மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகை என்றிறே இவரிருப்பது. (அணி கோட்டியர் கோன்) இவை ஒன்றும் இன்றிக்கே, 'அத்தலைக்கு மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுமது ஒன்றுமே வழக்கு' என்றாய்த்து அவ்வூரிலுள்ளார் இருப்பது. இதுக்கடி இவர் என்று தங்களுக்கு நிர்வாஹகராக ஆய்த்து நினைத்திருப்பது. 'அணி' என்று, ஆப$_4$ரணமாய், ஸம்ஸாரத்துக்கு ஆப$_4$ரணமான ஊரென்கை. (அபிமான துங்கன்) அபி$_4$மாநம் ஶேஷத்வ விரோதி$_4$யாயிருக்க, அத்தால் மிக்கிருப்பர் என்பானென்: என்னில் கர்மத்தால் வந்த து$_3$ர்மானமாய்த்து த்யாஜ்யம். 'தா$_3$ஸோஹம்'

---

நினைப்பது வழக்கல்ல. இனி வழக்காவது, தலைவனான எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்வது என்றன்றோ பெரியாழ்வார் இருப்பது! (**அணி கோட்டியர் கோன்**) அவ்வழக்குகள் ஒன்றும் இல்லாதவர்களாய், எம்பெருமானுக்கு மங்களாஶாஸநம் செய்வதே வழக்கு என்றுதான் அவ்வூரில் உள்ளவர்கள் இருப்பார்கள். இதற்குக் காரணம் செல்வ நம்பியைத் தங்களுக்குத் தலைவராக அவர்கள் நினைத்திருப்பதே. 'அணி' என்பது ஆபரணம் என்ற பொருளுடையது; உலகுக்கு ஆபரணமான ஊர் என்பது பொருள். (**அபிமான துங்கன்**) அபிமானம் (அகங்காரம்) அடிமைத் தன்மைக்கு விரோதியா யிருக்க, செல்வ நம்பியை அபிமானத்தால் மிக்கவர் என்று கூறுவது ஏன் என்னில், வினைப்பயன் காரணமாக வந்த அகங்காரமே விடத்தக்கது. 'தாஸோஹம்'

என்கிற வைஷ்ணவாபி$_4$மாநம் உபாதே$_3$யமாகையாலே அத்தால் பூர்ணராயிருப்பர் என்கிறது. அதாகிறது - உகந்தருளின நிலங்களில் உண்டான குறைவு நிறைவுகளும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தே$_3$ஹயாத்ரையில் குறைவு நிறைவுகளும் தம்மதாயிருக்கை. 'செல்வன்' என்று ஸ்வரூபப்ராப்தமான ஐஶ்வர்யத்தால் குறைவற்றவர் என்கை. அதாகிறது - ஜ்ஞாந ப$_4$க்தி வைராக்$_3$யங்களால் குறைவு அற்றிருப்பர் என்கையும், लक्ष्मणो लक्ष्मिसम्पन्नः (லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:) என்கிறபடியே अहं सर्वं

---

(எம்பெருமானுக்கு நான் அடிமைப் பட்டவன்) என்கிற வைஷ்ணவ அபிமானம் அடையத் தக்கது ஆகையால், அந்த அபிமானத்தால் நிறைந்தவர் செல்வ நம்பி என்பது கூறப்படுகிறது. அதாவது, எம்பெருமான் உகந்து எழுந்தருளியிருக்கும் திவ்யதேசங்களுக்கு ஏற்படும் குறைகளையும், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஏற்படும் குறைகளையும், தமக்கு ஏற்பட்டதாகவே நினைத்திருப்பர் என்பது கூறப்படுகிறது. 'செல்வன்' என்பதால், தம்முடைய ஸ்வரூபத்திற்கு (இயற்கைத் தன்மைக்கு) ஏற்ற செல்வங்களில் குறையற்றவர் என்பது கூறப்படுகிறது. அதாவது ஞானம், பக்தி, வைராக்யம் இவற்றால் குறைவற்றவர் என்கிறது. **'ஸர்வ ப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத: லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந: ப$_3$ஹி: ப்ராண இவாபர:'** (கைங்கர்யமாகிய செல்வத்தை உடைய லக்ஷ்மணன் ராமனுக்கு உடலைக் காட்டிலும் எல்லா பிரியங்களையும் செய்பவனாகவும் வெளியிலிருக்கும் மற்றொரு உயிர் போலவும் விளங்கினான்) (ரா.பா.18-28) என்று

करिष्यामि (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்றிருக்கையும். (போல) उपमानमशेषाणां साधूनां (உபமாநமஶேஷாணாம் ஸாதூ$_4$நாம்) என்கிறபடியே ஸாத்விகர்க்கு உபமாந பூ$_4$மியா யிருக்குமவர். இவரை த்$_3$ருஷ்டாந்தம் ஆக்கிக் கொண்டு, 'பழவடியேன்' என்று, முன்பு ஐஸ்வர்யார்த்தி$_2$யாய் இன்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவன் சொல்லுகை அநுபபந்நம் அன்றோ? என்னில்; கர்மத்தால் வந்த அஹங்காரம் போனால் தா$_3$ஸ்யம் ஸர்வாத்மாக்களுக்கும்

---

கூறப்பட்டுள்ள லக்ஷ்மணன் "**அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்$_3$ரதஸ் ஸ்வபதஸ்ச தே**" (நீர் விழித்துக் கொண்டிருக்கும் போதும், உறங்கும் போதும் உமக்கு (ராமனுக்கு) எல்லா அடிமைகளையும் செய்வேன்) (ரா.அ.31.25) என்று கூறி, எல்லாக் கைங்கர்யங்களைச் செய்தது போல செல்வநம்பியும் இருப்பர் என்கிறது. (போல) "**உபமாநமஶேஷாணாம் ஸாதூ$_4$நாம் யஸ்ஸதா$_3$ ப$_4$வத்**" (எந்த ப்ரஹ்லாதன் எப்போதும் எல்லா நல்லோர்களுக்கும் உபமானமாக ஆனானோ) (வி.பு.1-15-157) என்று கூறப்பட்டுள்ள பிரகலாதனைப் போலே நல்லோர்கள் அனைவருக்கும் உதாரணமாகத் திகழ்பவர். இப்படிப் பட்ட செல்வநம்பியை உதாரணமாக்கிக் கொண்டு, இதுவரை செல்வத்தை விரும்பியிருந்து, இன்றுதான் உண்மை ஞானம் பெற்றவன் அவரைப்போல 'நானும் பழவடியேன்' என்று கூறுவது பொருத்தமற்றதன்றோ எனில், வினைப்பயன் காரணமாக வந்த அகங்காரம் தொலையப்பெற்றால், எல்லா ஆத்மாக்களுக்கும் அடிமைத்தன்மை என்பது

ஸத்தாப்ரயுக்தம் ஆகையாலே சொல்லுகிறார்கள். அத$_{2}$வா, நைஸர்க்கி$_{3}$கமான ஜ்ஞாநம் உடையார்க்கும் இன்று ஆஶ்ரயிக்குமவனுக்கும் வாசி வையாதே விஷயீகரிக்கும் ஈஶ்வராபி$_{4}$ப்ராயத்தாலே சொல்லவுமாம்.

(திருமாலே) 'இவ்வாத்மவஸ்து ஒரு மிது$_{2}$நஶேஷம்' என்று ஶேஷத்வப்ரதிஸம்ப$_{3}$ந்தி$_{4}$யைச் சொல்லுகிறார்கள். இத்தால், மாதாபித்ருஶேஷத்வமும் தே$_{3}$வதாந்தர ஶேஷத்வமும் கர்மோபாதி$_{4}$கமென்கை. அத$_{2}$வா, தேவரீருக்குப் பிராட்டி நிரூபகபூ$_{4}$தையாயிருக்கிறாப் போலே, எங்களுக்கும் தா$_{3}$ஸ்யம் நிரூபகமென்கிறார்கள்

---

இயற்கையானது ஆகையால் அப்படிக் கூறுகிறார்கள். அல்லது, எப்பொழுதும் இந்த ஞானமுடையவர்களுக்கும் இன்று வந்து அடைபவனுக் கும் இடையே எந்த வேறுபாடும் இல்லாமல் அருள்புரியும் எம்பெருமானுடைய கருத்தை நினைவில் கொண்டு தங்களைப் பழவடியேன் என்று கூறிக் கொள்கின்றார்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

(திருமாலே) ஜீவாத்மாவானது எம்பெருமான், பிராட்டி ஆகிய இருவருக்குமே அடிமைப்பட்டது என்பதைக் கூறுகிறார்கள். இதனால், தாய் தந்தையருக்கு அடிமைப் பட்டிருத்தலும், பிற தேவதைகளுக்கு அடிமைப் பட்டிருத்தலும் வினைப் பயன் காரணமாக வந்தது என்பது கூறப்படுகிறது. அல்லது 'தேவரீருக்கு (எம்பெருமானுக்கு) பிராட்டி அடையாளமாக இருப்பதுபோல எங்களுக்கும் அடிமைத் தன்மையே அடையாளம்' என்பதைக் கூறுகிறார்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

என்றுமாம். (நானும்) ப்ரயோஜநாந்தரபரதையாலே அநாதி$_3$காலம் அந்யார்ஹ னாய்ப் போந்த நானும். ஶேஷிபக்கலிலே ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷிக்கை யாவது-பதிவ்ரதை ப$_4$ர்த்தாவின் பக்கலிலே வ்யபி$_4$சாரத்தை அபேக்ஷித்தவோபாதியிறே. (உனக்குப் பழவடியேன்) உனக்கு ஶேஷித்வம் அநாதி$_3$யானவோபாதி எனக்கும் ஶேஷத்வம் அநாதி$_3$யென்கை. (உனக்கு) ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்துத் திருவடிகளிலே கிட்டினதுவே ஹேதுவாக அநந்ய ப்ரயோஜநனாக்கவல்ல உனக்கு.

இந்த ஸ்வரூபஜ்ஞாநம் எவ்வழியாலே பிறந்தது? என்னில் ஸகல வேத$_3$ாந்ததாத்பர்யமான மந்த்ர

---

**(நானும்)** பிறபயன்களை விரும்பியதால், நெடுங்காலம் தகுதியற்றவிடத்தில் அடிமைப் பட்டுக் கிடந்த நானும். எம்பெருமானிடமே வந்து அவனுக்குத் தொண்டு செய்யும் பேற்றை வேண்டாமல் பிற பயன்களைத் தருமாறு வேண்டுவது, கணவனிடமே சென்று பிற ஆடவர்களுடன் தனக்குத் தொடர்பு ஏற்படுத்தித் தரவேண்டும் என்று மனைவி வேண்டுவது போன்றதாகும். **(உனக்குப் பழவடியேன்)** உனக்கு மிகவும் பழைமையான அடியேன். உனக்கு ஶேஷித்வம் (தலைமை) அநாதியாக (தொடக்க மில்லாததாக) உள்ளது போலவே எனக்கும் ஶேஷத்வம் (அடிமை) அநாதியாக உள்ளது என்கிறார்கள். **(உனக்கு)** வேறு பயன்களை விரும்பி, உன் திருவடிகளில் விழுந்ததுவே காரணமாக உன்னையன்றி வேறு பயனை விரும்பாத அநந்ய ப்ரயோஜநனாக ஆக்க வல்ல உனக்கு.

ரஹஸ்யத்தாலே பிறந்ததென்கிறார் மேல். (நல்வகையால் நமோ நாராயணாவென்று) நாராயணனுக்கு உரியேன், எனக்குரியேனல்லேன் என்கை. (நல்வகையால்) முன்பு அர்த்த$_2$விது$_4$ரமாக ஜபஹோமாதி$_3$முகத்தாலே பிறந்த அந்வயமடையத் தீவகை என்றிருக்கிறார்கள்; இதுதான் ஸர்வார்த்த$_2$ ஸாத$_4$கமிறே. नमो नारायणायेति मन्त्रः सर्वार्थसाधकः (நமோ நாராயணாயேதி மந்த்ர: ஸர்வார்த்த$_2$ஸாத$_4$க:) என்னக்கடவதிறே. (நாமம் பல பரவி) இவர் இவர்களை அழைக்கிறபோது, 'அடிதொழுது ஆயிரநாமம் சொல்லி' என்றாரிறே; அத்தையிறே இவர்களும் சொல்லுகிறது.

---

இந்த உண்மையறிவு எதனால் ஏற்பட்டது என்னில், எல்லா வேதங்களுக்கும் ஸாரமாக உள்ளதான திருமந்திரமாகிற ரஹஸ்யத்தாலே பிறந்தது என்கிறார் இனிமேல். (**நல்வகையால் நமோ நாராயணாவென்று**) நாராயணனுக்கே நான் உரியவன்; எனக்கு உரியவனன்று என்பது கூறப் படுகிறது. (**நல்வகையால்**) இதற்கு முன் திருமந்திரத்தின் பொருளை அறிந்து கொள்ளாமல், அதைக்கொண்டு செய்து வந்த ஜபம், ஹோமம் முதலியவற்றைத் தீவகை என்றிருக்கிறார்கள். எல்லாப் பயன்களையும் கொடுக்க வல்லதன்றோ திருமந்திரம்! "**நமோ நாராயணாயேதி மந்த்ர: ஸர்வார்த்த$_2$ ஸாத$_4$க:**" (நாரதீயம் 1-41) (நமோ நாராயணாய என்னும் மந்திரம் எல்லாப் பலன்களையும் பெற்றுத் தரும்) என்று கூறப்பட்டுள்ளதன்றோ! (**நாமம் பல பரவி**) பெரியாழ்வார் ஐஶ்வர்யார்த்திகளை அழைத்தபோது 'அடி தொழுது ஆயிர நாமம் சொல்லி' என்றன்றோ அழைத்தார்.

(பரவி) அக்ரமமாகச் சொல்லி. ஸாத$_4$நமான போதிறே க்ரமாபேக்ஷையுள்ளது. முன்பு 'மமேத$_3$ம்' என்றிருந்தவர்களுக்கு மங்க$_3$ளாஶாஸந யோக்$_3$யராம்படி புகுர நிற்கைக்கு இசைவே வேண்டுவது.

(பல்வகையாலும் பவித்திரனே) ப்ரயோஜநாந்தர பரனான அஶுத்$_3$தி$_4$யைப்போக்கி, அதுக்கடியான அஹங்கார மமகாரங்களாகிற அஶுத்$_3$தி$_4$யைப்போக்கி, ஶேஷத்வம் தன்னிலும், மாதாபித்ரு ஶேஷத்வமென்ன, தே$_3$வதாந்தர ஶேஷத்வமென்ன, இவ்வோ அஶுத்$_3$தி$_4$யைப்

---

அதையே இவர்களும் இப்போது கூறுகிறார்கள். (பரவி) கிரமம் (முறை) ஏதுமில்லாமல் சொல்லி. ஒரு பயனை விரும்பிச் சாதனமாகச் சொல்லும் போதுதான் முறைகளைப் பின்பற்ற வேண்டும். திருநாமம் சொல்வதையே பயனாகக் கொண்டு சொல்லும் போது முறைகள் எதுவும் வேண்டியது இல்லை. முன்பு 'இவை எனக்காக' என்று இருந்தவர்களுக்கு மங்களாஶாஸநம் செய்யும் தகுதி உண்டாவதற்கு முறை எதுவும் வேண்டியதில்லை. மங்களாஶாஸநம் செய்வோம் என்ற இசைவு ஒன்றே போதும்.

(பல்வகையாலும் பவித்திரனே) பலவகையாலும் எங்களுக்கு ஏற்பட்ட அசுத்திகளைப் போக்கினவனே! வேறு பயன்களை விரும்பியவன் என்ற அசுத்தியைப் போக்கி, அதற்குக் காரணமான அகங்காரம், மமகாரம் முதலியவைகளைப் போக்கி, அடிமைத் தன்மையை உணரும்படி செய்து, அதிலும் தாய் தந்தையருக்கு அடிமைப் பட்டிருத்தல், பிற தேவதைகளுக்கு அடிமைப் பட்டிருத்தல் முதலிய

போக்கிப் புகுர நிறுத்தினவனே! ஸ்வரூபரூபகு$_3$ணவிபூ$_4$திகளைப் பார்த்தாலும் பாபஹரனென்னவுமாம். (உன்னைப் பல்லாண்டு கூறுவனே) ஸௌந்த$_3$ர்யாதி$_3$ கு$_3$ணயுக்தனான உன்னை மங்க$_3$ளாஶாஸநம் பண்ணுகிறேன். ஏக வசநத்தாலே, கீழ்ச்சொன்ன புருஷார்த்தி$_2$கள் மூவர் முக$_2$த்தாலும் தாமே திருப்பல்லாண்டு பாடுகிறாரென்னுமிடம் தோற்றுகிறது. ஐஶ்வர்யார்த்தி$_2$ ஸங்க$_2$தனாகிற வளவிலும் ஏகவசநம் ஆகையாலே இங்கும் அதுவேயாகிற்றென்னவுமாம்.

நிகமம். (பல்லாண்டென்றித்யாதி) இப்ரப$_3$ந்த$_4$த்தை அதி$_4$கரித்தார்க்கு ப$_2$லம் சொல்லுகிறதாய், ப்ரேம

---

அசுத்திகளைப் போக்கி உன்னிடம் வந்து புகும்படி செய்தவனே! பல்வகையாலும் என்பதற்கு, எம்பெருமான் தன்னுடைய ஸ்வரூபம் (தன்மை), திருமேனி, குணம் இவைகளாலும் பாவங்களைப் போக்குபவன் என்பது கூறப்படுவதாக வும் கொள்ளலாம். **(உன்னைப் பல்லாண்டு கூறுவனே)** அழகு முதலிய குணங்களோடு கூடியவனான உன்னை மங்களாஶாஸனம் செய்கிறேன். கூறுவனே என்ற ஒருமையால், கீழே கூறப்பட்ட அநந்யப்ரயோஜநர், கைவல்யார்த்தி, ஐஶ்வர்யார்த்தி ஆகிய மூவர் முகத்தாலும் பெரியாழ்வார் தாமே திருப்பல்லாண்டு பாடினார் என்பது தோன்றுகிறது. அல்லது, ஐஶ்வர்யார்த்தி வந்து சேர்ந்தபோது ஒருமையில் கூறியுள்ளபடியால் இங்கும் அப்படியே உள்ளது என்றும் கொள்ளலாம்.

முடிவில் **(பல்லாண்டு என்று பவித்திரனை)** திருப்பல்லாண்டாகிய இப் பிரபந்தத்தைக்

பரவஶராய்க் கொண்டு மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிறார். அநந்ய ப்ரயோஜநர்க்கும் தம்மோபாதி ப₄க₃வத்ப்ரத்யாஸத்தி உண்டாகையாலே அவர்களை அழைத்தார்: ஐஶ்வர்ய கைவல்யங்களைப்பற்றி ஆஶ்ரயித்தவர்களும் பகவத் ப்ரப₄ாவத்தாலே மங்க₃ளாஶாஸநத்துக்காளாவரென்று அவர்களை அழைத்தார்; அவ்வளவுமில்லாத ஸம்ஸாரி களும் தம்முடைய பாசுரத்திலே இழியவே யாவதா₃த்மப₄ாவி மங்க₃ளாஶாஸந அர்ஹராவர்கள் என்று இப்ரப₃ந்த₄த்தின் வைப₄வத்தை அருளிச்செய்கிறார்.

---

கற்பவர்களுக்குப் பயன் கூறுவதாக, அன்பில் மூழ்கியவராய் மங்களாஶாஸனம் செய்கிறார். வேறு பயன்களை விரும்புபவர்களுக்கும் தம்மைப் போலவே பகவானுடன் தொடர்பு உண்டாகையால் அவர்களையும் மங்களாஶாஸநம் செய்ய அழைத்தார். ஐஶ்வர்யம் கைவல்யம் முதலிய பயன்களை விரும்பி எம்பெருமானை அடைந்தவர்களும் எம்பெருமான் பெருமையினால் மங்களாஶாஸனம் செய்பவர்களாக ஆவர்கள் என்று அழைத்தார். அவ்வளவும் இல்லாத அவர்களையும் அழைத்தார். அவ்வளவும் இல்லாத ஸம்ஸாரிகளும் தாம் அருளிச்செய்த பாசுரங்களை அநுஸந்தித்தால் ஆத்மா உள்ளவளவும் மங்களாஶாஸனம் செய்வதற்குத் தகுதி உள்ளவர்களாக ஆவர்கள் என்று இப்பிரபந்தத்தின் பெருமையை அருளிச்செய்கிறார்.

*பல்லாண்டென்றுபவித்திரனைப்
பரமேட்டியை*சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை
வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல்*

நல்லாண்டென்றுநவின்றுரைப்பார்
நமோநாராயணாயவென்று*
பல்லாண்டும்பரமாத்மனைச்
சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே. 12

| | |
|---|---|
| பவித்திரனை | - (இயற்கையாகவே) பரிசுத்3த4னாய், |
| பரமேட்டியை | - மேலான இடமான பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனாய், |
| சார்ங்கம் என்னும் வில் | - சார்ங்க3மென்ற வில்லை |
| ஆண்டான் தன்னை | - ஆளும் எம்பெருமானைக் குறித்து, |
| வில்லிபுத்தூர் | - ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த, |
| விட்டுசித்தன் | - விஷ்ணுசித்தன் என்ற பெரியாழ்வார், |
| பல்லாண்டு என்று | - 'மங்க3ளம் உண்டாகட்டும்' என்று |
| விரும்பிய | - விருப்பத்துடன் அருளிச் செய்த, |
| சொல் | - பாசுரங்களை |
| நல் ஆண்டு என்று | - நல்ல காலம் (நேர்படுவதே) என்று, |
| நவின்று உரைப்பார் | - இடைவிடாமல் சொல்பவர்கள், |
| நமோ நாராயணாய என்று | - திருமந்திரத்தை அனுஸந்தித்து, |
| பரமாத்மனை | - பரமாத்மாவான நாராயணனை, |
| சூழ்ந்து இருந்து | - சுற்றிலும் இருந்து கொண்டு, |
| பல் ஆண்டும் | - கணக்கற்ற காலங்கள், |
| பல்லாண்டு ஏத்துவர் | - பல்லாண்டு பாடுவார்கள். |

**(பவித்திரனை) ஓர் உபாதி4யாலன்றிக்கே ஸ்வதஶ் ஶுத்3த4னானவனை. शाश्वतं शिवं (ஶாஶ்வதம் ஶிவம்) என்னக்கடவதிறே. இத்தால் அஶுசி பதா3ர்த்த**

---

*(பவித்திரனை)* ஒரு காரணத்தால் அல்லாமல் இயற்கையாகவே சுத்தனானவனை. "*ஶாஶ்வதம் ஶிவம்*" (நிலையான மங்களமுடையவன்) என்று கூறப்பட்டுள்ளதன்றோ! இதனால், எம்பெருமான் அசுத்தமுடையவற்றோடு தொடர்பு கொண்டிருந்

ஸம்யோக$_3$த்தாலே தத்க$_3$தே$_3$ாஷை: அஸம்ஸ்ப்ருஷ்டன் ஆகையும், ஸ்வஸம்ப$_3$ந்த$_4$த்தாலே அஶுத்$_3$த$_4$ன் ஶுத்$_3$த$_4$னாகையு மாகிற பரமபாவநத்வம் சொல்லுகிறது. அதாகிறது- சேதநாசேதநங்களில் வ்யாபித்தாலும் தத்க$_3$தே$_3$ாஷம் ஸ்பர்ஶியாதொழிகையும், நிர்ஹேதுகமாக நித்யஸம்ஸாரியை நித்யஸூரிகளோடே ஒரு கோவை ஆக்குகையும். (பரமேட்டியை)பரமே ஸ்த்த$_2$ாநே ஸ்த்தி$_2$தன் ஆனவனை. (சார்ங்கமென்னுமித்யாதி) இது மஹிஷீ பூ$_4$ஷண ஆயுத$_4$ பரிஜநங்களுக்கும் உபலக்ஷணம். அங்குள்ளாரை யிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படி யிறே அவர்களுக்குத் தன்னோடு உண்டான ப்ரத்யாஸத்தி.

---

தாலும் அவற்றின் அசுத்தங்களால் மாசு அடையாதவன் என்பதும் தன் தொடர்பினால் அசுத்தமுள்ள பொருள்களையும் சுத்தமாக ஆக்க வல்லவன் என்ற புனிதத்தன்மையும் கூறப்படுகிறது. அதாவது சேதநங்களிலும் அசேதநங்களிலும் பரந்து இருந்தாலும் அவற்றின் தோஷங்களை எம்பெருமான் அடைவதில்லை என்பதும், ஒரு காரணமுமின்றி நித்ய ஸம்ஸாரியை நித்யஸூரிகளோடு இணையாக ஆக்குபவன் என்பதும் கூறப்படுகிறது. (பரமேட்டியை) பரமமான (உயர்ந்த) ஸ்தாநத்தில் (இடத்தில்) இருப்பவனை. (சார்ங்கமென்னும் வில்லாண்டான் தன்னை) ஶார்ங்கம் எனும் வில்லை ஆள்பவனை. ஶார்ங்கத்தைச் சொன்னது பிராட்டிமார், ஆபரணங்கள், ஆயுதங்கள், அடியவர்கள் ஆகிய அனைவரையும் சேர்த்தேகுறிக்கும். பரமபதத்தில் உள்ளவர்களைக் கொண்டே அவனை அடையாளம்

(சார்ங்கமென்னும் வில்லாண்டான் தன்னை) ஶார்ங்க₃மென்னும் வில் என்றே யாய்த்து அதுக்கு ப்ரஸித்₃தி₄; மத்தக₃ஜத்தை ஆளுபவன் என்னுமாபோலே, அத்தை ஆளுமவன் என்றாய்த்து இவனுக்கேற்றம். आलिखन्तमिवाकाशं अवष्टभ्यमहद्धनुः (ஆலிக₂ந்தமிவாகாஶம் அவஷ்டப்₄ய மஹத்₃த₄நு:) என்னக்கடவதிறே. இத்தால், 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா' என்கிறவிடத்திலே பவித்ரதையை நினைத்து 'பரமேட்டியை' இத்யாதி₃யாலே

---

அறியவேண்டும்படி யாகவன்றோ அவர்களோடு அவனுக்குள்ள நெருக்கம்! (சார்ங்கம் என்னும் வில் ஆண்டான் தன்னை) 'சார்ங்கமென்னும் வில்' என்றே அது பிரசித்தி பெற்றது. மதயானையை அடக்கி ஆளுபவன் என்பது போல அவ்வில்லை ஆள்பவன் என்றுதான் இவனுக்கும் பெருமை. "**ஆலிக₂ந்தமிவ ஆகாஶம் அவஷ்டப்₄ய மஹத்₃த₄நு:**" (ரா.யு.100-12) (ஆகாயத்தை அளாவி நிற்கும் பெருவில்லை அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தான்) என்று (இராமபிரானைப் பற்றிக்) கூறப்பட்டுள்ளதன்றோ? முதல் பாசுரத்தில் 'மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா' என்ற இடத்தில் (விரோதிகளை அழிக்கும் தன்மையும், நீலமணியானது அசுத்தமான பொருள்களோடு சேர்ந்தாலும் தான் மாசு அடையாது இருப்பதுபோல இருக்கும் தன்மையும் கூறப்பட்டு) எம்பெருமானுடைய பவித்ரதை (புனிதத் தன்மை) கூறப்பட்டது. அதையே இங்கு 'பவித்திரனை' என்கிறார். இரண்டாம் பாசுரத்தில் பிராட்டிமார், ஆயுதங்கள் ஆகியோரைச் சொன்னபடியால், அவன் நித்ய விபூதியில்

இரண்டாம்பாட்டிற் சொன்ன நித்யவிபூ₄தி யோக₃த்தை நினைக்கிறது.

(வில்லிபுத்தூர் விட்டுசித்தன் - பல்லாண்டென்று - விரும்பியசொல்) இப்போது, ப₄க₃வத்ப்ராப்திகாமர், ப்ரயோஜநாந்தரபரர் என்று அடைவடைவே வந்து நின்றாரில்லையிறே; அவ்வவருடைய பாசுரங்களாலே தாமே அருளிச்செய்தாரென்னுமிடம் தோற்றுகிறதிறே, தம்முடைய வார்த்தையாகத் தாம் தலைக்கட்டுகையாலே. அவர்கள் பாசுரமாக அங்குச் சொல்லிற்று, ப்ரயோஜநாந்தர பரர்க்கும் ப₄க₃வத்ப்ரப₄ாவத்தாலே மங்க₃ளாஶாஸநம் பண்ணுகைக்கு யோக்₃யதை உண்டு என்னும் இவ்வர்த்த₂த்தினுடைய ஸ்தை₂ர்யத்துக்காகவும், மங்க₃ளாஶாஸநத்தில் தமக்கு உண்டான ஆத₃ராதிஶயம்

---

எழுந்தருளியிருக்கும் தன்மை கூறப் பட்டது. அதை இங்கு 'பரமேட்டியை' என்பதால் நினைக்கிறார்.

• **(வில்லிபுத்தூர் விட்டுசித்தன் பல்லாண்டு என்று விரும்பிய சொல்)** இப்போது பகவானை அடைய விரும்புபவர்கள், வேறு பயன்களை விரும்புபவர்கள் என்று வரிசையாக வந்து நின்றாரில்லை. பெரியாழ்வார் தம்முடைய வார்த்தையாகவே இப்பிரபந்தத்தை முடிக்கின்ற படியால் அவர்கள் கூறுவதாகவும் பெரியாழ்வார் தாமே பாசுரங்களை அருளிச்செய்தார் என்னுமிடம் புலப்படுகிறது. வேறு பயன்களை விரும்புபவர்க ளுக்கும் மங்களாஶாஸனம் செய்வதற்குத் தகுதி உண்டு என்னும் அர்த்ததை நிலை நாட்டவும், மங்களாஶாஸனம் செய்வதில் தமக்குள்ள ஈடுபாட்டை காட்டவும்தான், அப்பாசுரங்களை

தோற்றுகைக்காகவும். (வில்லிபுத்தூர் விட்டுசித்தன்) அவ்வூரில் பிறப்பாலே ஆய்த்து ப$_4$க$_3$வத்ப்ரத்யாஸத்தி; ப$_4$க$_3$வத்ப்ரத்யாஸத்தியாலே ஆய்த்து மங்க$_3$ளாஶாஸந யோக்யமான ப்ரேமாதிஶயம். 'விட்டுசித்தன்' என்கிற திருநாமமுண்டாய்த்து, ஆழ்வார் விடிலும் தான் விடமாட்டாதே தன்பேறாக இவர் திருவுள்ளத்தை விடமாட்டாமையாலே. 'விட்டுசித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவலன்' என்னக் கடவதிறே.

(நல்லாண்டென்று) இப்பாசுரம் சொல்லுகைக்கு ஏகாந்தமான காலமென்று காலத்தைக் கொண்டாடி. அஞமே

---

அவர்கள் கூறுவதாக அங்கு அருளிச்செய்தார். **(வில்லிபுத்தூர் விட்டுசித்தன்)** ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்ததால்தான் பெரியாழ்வாருக்கும் எம்பெருமானிடம் இப்படிப்பட்ட ஈடுபாடு உண்டாயிற்று. அந்த ஈடுபாட்டினால்தான் மங்களாஶாஸனம் செய்வதற்குத் தகுதியான அன்பு உண்டாயிற்று. (விஷ்ணுசித்தன் என்பதற்கு விஷ்ணுவை சித்தத்திலே உடையவர் என்பது பொருள்) ஆழ்வார் தன்னை விட்டாலும், தான் ஆழ்வாரை விடமாட்டாமல் இவர் திருவுள்ளத்தில் எழுந்தருளியிருப்பதைத் தனக்குப் பேறாக எம்பெருமான் நினைத்திருப்பதனால்தான் இவருக்கு விஷ்ணுசித்தன் என்ற திருநாமம் ஏற்பட்டது. "விட்டுசித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவலன்" (பெரியாழ்.திரு.5-4-11) என்று பெரியாழ்வார் தாமே அருளிச்செய்துகொண்டுள்ளார் அன்றோ!

**(நல்லாண்டென்று)** இப்பாசுரம் சொல்லுவதற்கு என்று ஏற்பட்ட நல்ல காலம் என்று

सफलं जन्म (அத்3யமே ஸப2லம் ஜந்ம) என்னக்கடவதிறே. கண்டதடைய 'மமேத3ம்' என்று போந்த அநாதி3காலம் போலன்றிக்கே ப4க3வத் ஸம்ருத்3தி4க்கு மங்க3ளாஶாஸநம் பண்ணக்கடவதாம்படி வந்ததொருகாலம் சேதநனுக்கு ஸுது3ர்லப4மிறே. (நவின்றுரைப்பார்) நவிலுகை - பயிலுகை; இடைவிடாதேயுரைக்கை. (நமோ நாராயணாய என்று) அநாதி3காலம் 'மமேத3ம்' என்றத்தைத் தவிருகையும், 'தவேத3ம்' என்கையும். இத்தால், மங்க3ளாஶாஸந யோக்3யதை சொல்லுகிறது. (பல்லாண்டும்) காலமெல்லாம். யாவதா3த்மபா4வி

---

காலத்தைக் கொண்டாடி. **"அத்3யமே ஸப2லம் ஜந்ம ஸுப்ரபா4தா ச மே நிஶா"** (வி.பு.5-17-3) (இன்றே என் பிறவி பயனடைந்தது. இன்றே எனக்கு நல்விடிவு விடிந்தது) என்று கண்ணனைக் காண்பதற்குத் தனக்கு வாய்த்த காலத்தை அக்ரூரர் கொண்டாடியுள்ளார் அன்றோ! கண்டதையெல்லாம் 'எனக்கு' என்றிருந்த நெடுங்காலம் போலல்லாமல், பகவானுடைய நன்மைக்காக மங்களாஶாஸநம் செய்யும்படியாக அமைந்ததொரு நற்காலம் பெறுவது சேதனனுக்கு மிகவும் அரிதன்றோ! **(நவின்றுரைப்பார்)** நவில்கை - பயில்கை; அதாவது இடைவிடாமல் உரைத்தல். **(நமோ நாராயணாய என்று)** அநாதிகாலமாக 'எனக்கு' என்றிருந்ததைத் தவிர்கையும் 'எம்பெருமானாகிய உனக்கு' என்கையும் (நம: என்ற சொல்லால்) கூறப் படுகிறது. இதனால் மங்களாஶாஸநம் செய்வதற்குத் தகுதி கூறப்படுகிறது. **(பல்லாண்டும்)** எல்லாக் காலங்களிலும். ஆத்மா உள்ள அளவும். காலத்தின்

என்கிறது. காலக்ருதபரிணாமமில்லாத தே₃ஶத்தில் ஆண்டையிட்டுச் சொல்லுகிறது, அங்தப் பரிணாமமுள்ள தே₃ஶத்தில் வர்த்திக்கிறவராகையாலே. (பரமாத்மனை) தனக்கு மேலின்றிக்கே, தன்னையொழிந்தாரடங்க ஸ்வாதீ₄ந மாம்படி இருக்கிறவனை. இத்தால் அமங்க₃ளங்களுக்கு அவகாஶமின்றிக்கே இருக்கையாலே, ஒருவனுடைய மங்க₃ளாஶாஸநத்தால் ஓர் ஏற்றமுண்டாகவேண்டாதே யிருக்குமவனை. (சூழ்ந்திருந்தேத்துவர்) नमः पुरस्तादथ पृष्टतस्ते नमोस्तु ते (நம: புரஸ்தாத₃த₂ ப்ருஷ்ட்டதஸ்தே நமோஸ்து தே) என்கிறபடியே, முன்பே நில்லா முறுவலை

---

கட்டுப்பாடுள்ள பூமியில் தாம் வசிக்கின்ற படியால் காலத்தின் கட்டுப்பாடு இல்லாத பரமபதத்திலும் ஆண்டைக் கூறுகிறார். (**பரமாத்மனை**) தனக்கு மேற்பட்டவர்கள் எவரும் இல்லாதவனாய், மற்றவர் அனைவரும் தனக்குக் கீழ்ப்பட்டவர்களாகக் கொண்டிருப்பவனை. இதனால், அமங்களங்கள் ஏற்படுவதற்கு இடமில்லாதவன் என்பது பெறப் படுகிறது. எனவே ஒருவன் செய்யும் மங்களாஶாஸனத்தால் தனக்கு இனி ஒரு பெருமை ஏற்படவேண்டாதிருப்பவனை. (சூழ்ந்திருந்தேத்துவர்) "**நம: புரஸ்தாத₃த₂ ப்ருஷ்டதஸ்தே நமோஸ்துதே ஸர்வத ஏவ ஸர்வ**" ("உனக்கு முன்னும் பின்னும் நமஸ்காரம்; உனக்கு எல்லா விடத்திலும் நமஸ்காரம்") (*கீதை 11-39*) (என்று விஶ்வரூபத்தைக் கண்டவுடன் அர்ஜுநன் கண்ணபிரானை நோக்கிக் கூறியது போல) பரமபதத்தில் எம்பெருமானுடைய முன்பு நின்று அவனுடைய புன்முறுவலை அநுபவித்து அதில்

அநுப₄வித்து அதிலே ஈடுபடும்; பின்பே நில்லா பின்னும் பிறகுவாளியுமான அழகை அநுப₄வித்து அதிலே ஈடுபடும்; இப்படிச் சுழியாறு படாநிற்கச்செய்தே, கால்வாங்கவொண்ணாத வடிவழகு அதிஶங்கையை விளைத்து மங்க₃ளாஶாஸநத்திலே மூட்டுமென்கை.

'பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும் வில்லாண்டான்தன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன், பல்லாண்டென்று விரும்பியசொல் நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று, பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டும், பல்லாண்டென்று ஏத்துவர்' எனறு அந்வயம்.

---

ஈடுபடுவர்கள். பின்புறம் நின்று பின்னழகையும் பிறகுவாளி என்ற ஆபரணத்தை அணிந்துள்ள அழகையும் கண்டு அதிலே ஈடுபடுவர்கள். இப்படிச் சுற்றிச் சுற்றி வந்து ஆற்றில் சுழியில் அகப்பட்டுச் சுழல்வதைப் போல் எம்பெருமானுடைய அழகு வெள்ளச் சுழியில் அகப்பட்டு நிற்கும்போது அனுபவிப்பதிலிருந்து பின்வாங்க முடியாத அவ்வழகுக்கு என்ன நேருமோ என்ற ஐயம் எழுந்து, 'இவ்வழகுக்கு ஒன்றும் நேராமலிருக்க வேண்டும்' என்று மங்களாஶாஸநம் செய்வதில் மூட்டிவிடும்.

பவித்திரனை, பரமேட்டியை, சார்ங்கம் என்னும் வில்லாண்டான் தன்னை, வில்லிபுத்தூர் விட்டுசித்தன், பல்லாண்டென்று விரும்பிய சொல், நல்லாண்டு என்று நவின்று உரைப்பார், நமோ நாராயணாய என்று, பரமாத்மனைச் சூழ்ந்திருந்து, பல்லாண்டும், பல்லாண்டு என்று ஏத்துவர் - என்று அந்வயம் கொள்ளவேண்டும்.

பெரியாழ்வார் திருவடிகளே ஶரணம்

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்

திருப்பல்லாண்டு உரை விளக்கம் முற்றியது.

